# கலைத்தந்தை

# கருமுத்து தியாகராசர்



பேராசிரியர்

சு. குழந்தைநாதன்

வெளியீடு :

கருமுத்து தி. மாணிக்கவாசகனார்

மணிவிழாக் குழு

# தென்னாட்டின் ஆலையரசர்



கலைத்தந்தை

**கருமுத்து தியாகராசர்**

(1893—1974)

11, ஜூலை 1980

KALAITHANTHAI KARUMUTTU THIAGARAJAR
– A BIOGRAPHY

BY

Professor
S. KULANDAINATHAN



கருமுத்து. தி. மாணிக்கவாசகனார் - சிந்தாமணி ஆச்சி
மணிவிழாக்குழு வெளியீடு.

---

அச்சிட்டோர் : விசாலாட்சி அச்சகம்,
140, தெற்கு வெளி வீதி, மதுரை-625001.

மதுரை காமராசர் பல்கலைக் கழகம்

தமிழண்ணல்
டாக்டர் இராம. பெரியகருப்பன்
தமிழியல் துறைத் தலைவர்
இந்திய மொழிப்புல இணைப்பாளர்

## அணிந்துரை

கலைத் தந்தை கருமுத்து தியாகராசரின் கலைக் கோயிலாம் தியாகராசர் கல்லூரியில் பத்தாண்டுகள் பணி யாற்றும் போது, யான் அடிக்கடி ஒன்றை நினைப்பதுண்டு. ''நாம் நல்ல நல்ல நூல்களைத் தேடிப் படிக்கின்றோம். அதைப்போல நல்ல திறமை வாய்ந்த மனிதர்களையும் படிக்க வேண்டும். நூல்களைப் படிப்பதைப் போலவே மனிதர்களைப் படிப்பதும் மேலானது; மிகவும் பயனுடையது. கலைத் தந்தையின் வாழ்க்கை அவ்வாறு படிக்கத் தகுந்த ஒன்று'' என்பதே அந்நினைவாகும்.

என் இனிய நண்பர், பேராசிரியர் சு. குழந்தைநாதன் அவர்கள் எழுதிய கலைத்தந்தை பற்றிய இந்நூலினைப் படித்துப் பார்த்தேன். என் எண்ணம் ஈடேறியிருப்பது கண்டு மனம் மகிழ்வுற்றேன். இரு வகையில் எனக்கு மகிழ்ச்சி ஏற்பட்டது. அன்று 1961இல் கலைத்தந்தை அவர்களால் ஒரு நாளில் காலையிலும் மாலையிலும் இருமுறை நேர் முகப் பேட்டி செய்யப்பெற்றுத் தியாகராசர் கல்லூரியில் விரிவுரையாளன் ஆனவன் யான். எனக்கென்று எவ்விதப் பரிந்துரையும் இல்லை. என் நூல்களைக் கலைத் தந்தை பார்வையிட்டார். 'இலக்கியத்தில் இன்பச்சுவை' என்ற நூலின் முதற் கட்டுரை முழுவதையும் படித்தார். 'தாலாட்டு' என்ற எனது தொகுப்பு நூலின் முன்னுரையைப் படித்தார்; யான் எழுதிய தாலாட்டுப் பாடலை ஈடுபட்டு மௌனமாகப் படித்தார். 'குறிஞ்சிப் பாட்டுத் திறனாய்வு' என்ற என் நூலைப் பார்வையிட்ட அவர், அப்பாட்டினை ஒப்பிக்கும்படி ஆணையிட்டார். ''அன்னாய் வாழிவேண்டன்னை'' என்ற

தொடக்கச் சொற்களைக் கூறவே அன்று, அந்நிலையில் யான், தடுமாறினேன். அவரோ நூற்றைம்பது அடிகள் வரை அப்பாட்டினை ஒப்பித்துக் கொண்டே போனார். உரைவேந்தர் ஔவை துரைசாமிப்பிள்ளை, மொழிக் காவலர் சி. இலக்குவனார் எல்லோரும் வியந்தபடி அமர்ந் திருந்தனர். என் உரைநடையைப் படித்த கலைத்தந்தை அதிலிருந்த ஒரே ஒரு வட சொற் கலப்பையும் கடிந்துரைத் தார். 'மறைமலையடிகளைத் தவிர இன்று மற்றவர் களுக்குச் சிறந்த உரை நடையெழுதத் தெரியவில்லை' என அவர் அன்று திட்டவட்டமாக விவாதித்தார். 'சரி தான், இனி நமக்கு வேலை கிடைக்காது' என அஞ்சி நின்றேன். பரிந்துரைகள் பல அரசியலிலிருந்தும் உயர் நிலையிலிருந்தும் தம்மை அழுத்திக் கொண்டிருந்த போதிலும், அவற்றிற்காகச் சிறிதும் விட்டுக் கொடுக்காது, அவ்வேலை வாய்ப்பைக் கலைத்தந்தை அன்று எனக்கு அளித்தார். அன்று முதல் அப் பெரியவருடைய கட்டு திட்டமும் வரன் முறையுமாயமைந்த வாழ்வை; ஒரு சொற் பொழிவென்றால் பல நாள் ஆயத்தம் செய்து மொழி நலம் பேணும் முறைமையை; ஒரு தன்மையான கலைமரபையே யாண்டும். என்றும் பின்பற்றும் அழகை யான் கண்டு கண்டு மனத்துள் வியந்து போற்றி வந்ததுண்டு. இன்று அப்பெருவாழ்விற்கு ஓர் அணிந்துரை எழுதும் சிறப்பினையும் அத்திருவுடையாரின் திருவருளே எனக்குப் பாலித்துளது எனில் மிகையாகாது.

அடுத்து, இந் நூலினை யாத்த பேராசிரியர் சு. குழந்தைநாதன் அவர்களின் திறமையை யான் இளமை முதல் அறிவேன். அன்றே ஒரு துறை பற்றிய குறிப்புக்கள் என்றால் பல நூறு பக்கங்கள் தொகுத்துத் தந்து விடும் பேரார்வமும் பெருமுயற்சியும் உடையவர் அவர். 'வாழ்க்கை வரலாறு' எழுதுவது ஒரு கடினமான கலை. சுவை பொருந்த எழுத முயன்றால் கற்பனை மிகுந்து விடும்; கதையாகிவிடும். மிகவும் வரலாற்று நினைவோடேயே

எழுதினால், ஒரே அறுவையாகிவிடும்; அப்படியானால் ஒரு வாழ்க்கை வரலாற்றை எப்படி எழுத வேண்டும்?' என்று கேட்கத்தோன்றும். கலைத்தந்தை தியாகராாசரின் இவ் வரலாற்றைக் காட்டி, நாம் எளிதாக விடை கூறலாம், இதோ இப்படித்தான் எழுத வேண்டும்'' என்று!

ஒரு வாழ்க்கை வரலாற்றைப் படிக்கிறோம் என்று தோற்றாவாறு சுவையான நிகழ்ச்சிகளை ஒன்று விடாமல் தொகுத்து நிரல்படத் தருகிறார். 'அப்படியா?' என வியக்கும் வண்ணம் பல அரிய நிகழ்ச்சிகளைச் சுட்டிச் செல்லும் பொழுது, அவருடன் மிகநெருங்கிப் பழகியவர்களும் நினைவு கூர்ந்து போற்றுமாறு பல பகுதிகள் இந்நூலில் அமைந்துள்ளன. கலைத்தந்தை ஓர் ஆலையரசர்; தேர்ந்த தமிழறிஞர்; சிறந்த தொழிலாளர் தொண்டர்; கூர்மையான திறமையுடன் வங்கிகளை உருவாக்கிய பொருளியல் வல்லுநர்; எங்கு நோக்கினும் ஒரு சிறப்பினைத் தோற்று விக்கும் வண்ணமும் வனப்புமுள்ள கட்டிடக்கலை நிபுணர்; ஒப்புயர்வற்ற கலையுணர்வாளர் ஆவார்! இந்நூலைப் படிக்கும் போது, நாம் பட்டை தீட்டிய வயிரம் போலக் கலைத்தந்தையைக் காண்கிறோம். ஆங்காங்கு அடிப் படையான ஆதாரங்களுடன், அவற்றைத் தேடித் தொகுத்துச் சான்றுகாட்டி எழுதும் போது, இவ்வரலாறு எவ்வளவு உண்மையானது என்ற எண்ணம் நம்முன் எழுகிறது. துணைத் தலைப்புக்கள் கூட இந்நூலில் சரித்திரம் பேசு கின்றன. மேற்கோள்கள் உள்ளத்தைக் கவரும் வகையில் இணைக்கப்பட்டுள்ளன. இயல் பகுப்பு முறை முதல், படங் களை ஒரு பெரிய வாழ்வின் பல பகுதிகளையும் காட்டும் வகை யில் நிரல்படத் தந்துள்ளது வரை இந்நூலமைப்புக் கலைத் தந்தை பற்றிய வரலாற்றினைக் கலையுணர்வோடு தருகிறது.

கலைத் தந்தையின் வாழ்வுத் தொடக்கம் எவ்வளவு எளிமையும் உழைப்பும் திறமும் மிக்கது என்பது, நூலைப் படிக்கத் தொடங்கும் போதே மனத்தினைப் பற்றிக் கொள்

கிறது. ஒவ்வொரு துறை வளர்ச்சியிலும், எதிர் நீச்சலிடும் அவர் வாழ்வு பின்னர்ப் பல கிளைகளாய் வளரும்போது, அவை ஒவ்வொன்றும் நமக்குப் பயனுள்ள கல்வியாய் அமைகின்றது. கருமுத்துத் தியாகராசரின் இவ்வாழ்க்கை வரலாற்றைப் படிப்பது நம்மில் ஒவ்வொருவருக்கும் நல்ல படிப்பினையாகி, நாம் பற்பல படிகளில் எவ்வாறு இடறி விழாமல் முன்னேறிச் சிறந்த நிலையினை அடைதல் கூடும் என்பதற்கோர் எடுத்துக்காட்டாக விளங்குமாறு பேராசிரியர் இதனை எழுதியுள்ளார். வள்ளல் அழகப்பர் வாழ்க்கை வரலாற்றை எழுதிப் புகழ்பெற்ற அவர், இப்போது கலைத் தந்தையின் வரலாற்றைச் சிறப்புற எழுதியதன் மூலம் வாழ்க்கை வரலாற்று நூல்களைச் சுவையுடன், உண்மை பொருந்த, நிரலே படிப்படியாக விறுவிறுப்புடன் பயன் உண்டாகஎழுதிச்செல்வதெவ்வாறுஎன்றகலையைஉருவாக்கி விட்டார் எனலாம். பேராசிரியர் குழந்தைநாதனின் இம் முயற்சி, தமிழில்வாழ்க்கைவரலாறு (Biography) பற்றியதுறை ஒன்றினை நனிசிறக்கச் செய்வதாக அமையுமெனல் உறுதி.

கருமுத்து தி. மாணிக்கவாசகனார் சிந்தனைச் செம்மல் என்றும் செந்தமிழ்ச் செல்வர் என்றும் அறநெறியாளர் என்றும் பலராலும் பாராட்டப் பெறுபவர். அத்தகைய பெருமகனாரின் மணிவிழாவின் போது, மணிவிழாக் குழுவின் சார்பாக இவ்வரிய, அழகிய நூல் வெளியிடுவது சாலப் பொருத்தமுடையதாகும். மீனாட்சி புத்தக நிலைய உரிமை யாளர் திரு செ. செல்லப்பன் அவர்கள், அக்குழுவின் முக்கிய உறுப்பினராக இருந்து, அரிதின் முயன்று உரிய காலத்தில் இந்நூலை வெளியிட்டிருப்பது பாராட்டற்பாலதாகும்.

ஒரு திருவிளக்கு ஆயிரம் விளக்குகளை ஏற்றி வைக்கிறது; கலைத்தந்தையின் இப் 'பெருவாழ்வு' இந்நாட்டில் ஆயிரம் ஆயிரம் தன் முயற்சியாளர்களை உருவாக்கும் என நெஞ்சார நினைந்து போற்றுகிறேன்.

'ஏரகம்' சதாசிவநகர்,
மதுரை-20

தமிழண்ணல்
இராம. பெரியகருப்பன்

## காணிக்கை

> ''வணங்காது நிமிர்ந்ததலை; வாரியன்ன
> வற்றாத கருத்துக்கள் மலரும் உள்ளம்.
> உணங்காத தாளாண்மை; எதற்கும் அஞ்சா
> உரங்கொண்ட பெருந்தலைவன்; உழைப்பின் சின்னம்''
>
> — குலோத்துங்கன் கவிதைகள்

ஆங்கில இலக்கியம் பயின்றோர் மனத்தில் அமர வாசகமாய் விளங்கும் ஒன்று, புகழார்ந்த தாமஸ் கார்லைல் எழுதிய பொன்மொழியாகும். ''உலக வரலாறு என்பதெல்லாம் சான்றோர்களின் வரலாறே ஆகும்'' (The history of the world is, but the biography of greatmen) என 1841இலேயே, மன்னராட்சி மரபுகள் குலைந்து, மக்களாட்சி மலரத் தொடங்கிய அந்த நாளிலேயே அவன் எழுதி வைத்தான். அரசர்களையும், அமைச்சர்களையும், ஆளுநர்களையும் வீரர்களையும் போல, சமூகத்தின் ஆக்க நலத்திற்கு எல்லாம் அயராதுழைக்கும் பிறரும் வரலாறு சமைப்பவர்களே எனும் பெருகிய சிந்தை மேலை நாடுகளில் அதன் பின்னர் ஏற்கப் பெற்று, அன்னவர்களின் வாழ்க்கை வரலாறுகள் வளரும் தலைமுறையினர்க்கு வழிகாட்டும் ஒளி விளக்குகளாகப் போற்றவும் படுகின்றன.

இந்த இருபதாம் நூற்றாண்டின் உலக வரலாற்றில் இட்லரையும் வின்ஸ்டன் சர்ச்சிலையும் போல, காந்தியடிகளையும் லெனினையும் போல - ஆல்பர்ட் ஐன்ஸ்டீனும் அருங்கலைஞர் பிக்காசோவும், அமெரிக்க நாட்டு ராக்பெல்லரும் திரைக்கலைஞர் ஹிட்ச்காக்கும் உலகச் சிந்தனைப் போக்கைத் திசை திருப்பியவர்களாகக் கருதி மதிக்கப்படுகின்றனர். வின்ஸ்டன் சர்ச்சில் 'நான் கண்ட பெரியவர்கள்' (The Great Contemporaries) எனும்

அரியதொரு நூலினை எழுதித் தனிமனிதரின் வரலாறு என்பது ஒரு தாயகத்தின், மனிதகுலத்தின் வரலாற்றிற்கு வேராய், விழுதாய் அமைவதாய் அழகுற விண்டுரைத்தார்.

நம் நாட்டின் வளர்ச்சிக்கும் வளத்திற்கும் வ ழி ய மைத்துத் தந்த பல பெரியவர்களின் வரலாறுகள் மறைக்கப் பட்டும் மறக்கப்பட்டும் போய் விட்டன. அ வ் வா று காலவோட்டத்தால் மறைக்கவோ, மறக்கவோ முடியாத வரலாறுகளாகப்பல பனிமுடிய மலைச் சிகரங்கள் போல எஞ்ஞான்றும் விளங்கியே வருகின்றன. அத்தகையதொரு சிகரம் போன்றவர், தென்னாட்டின் ஆலையரசர் கலைத் தந்தை கருமுத்து தியாகராசனார். மதுரைப் பெருநகருக்கு மீனாட்சி அம்மன் ஆலயக் கோபுரம் அருள் நலம் புனைவது போல, தமிழ் நாட்டுத் தொழில் வளத்துக்கும் கல்வி நலத்திற்கும் ஆக்கம் தந்த தி யா க ரா சப் பெருந்தகை கோபுரம் போல் நின்று, காலமெல்லாம் மிகு நலம் புரிவார்.

இப் பெருந்தகையின் வரலாறு முழுவதும் அறியப் பட்டால் அது ஆயிரமாயிரம் பேருக்கு ஊக்கமும் உற்சாகமும் தரும் எனக் கருதினேன். அவர் அமரரான அணிமை யிலேயே அவ்வரலாறு வெளி வந்துவிட வேண்டுமென விழைந்து முயன்றேன். ஆனால் அது உடனே கைகூட வில்லை, 'கோடி கொடுத்த கொடைஞன்' எனும் பெயரில் வள்ளல் அழகப்பரின் வரலாற்றினை எழுதியமைக்காக மதுரை நகரத்தார் சங்கத்தினர் சில மாதங்கட்கு முன்னர் எனக்கொரு பாராட்டு நல்கினார்கள். அப்பாராட்டு விழாவுக்குத் தலைமை யேற்ற உயர்திரு, கருமுத்து தி. மாணிக்கவாசகனார் அவர்கள் தம் தந்தையாரின் வரலாற்றினையும் அவ்வாறே எழுத முற்பட வேண்டும் எனத் தெரிவித்தார்; அன்பர் பலர் வலியுறுத்தினர்.

ஆனால், "கருமுத்து எனும் கட்லனைய வாழ்வு பற்றி எனக்கு ஏதும் தெரியாதே!" என்றேன். "அது தான் நல்லது, அவரோடு பழகியவர்கள், தோ ழ மை கொண்டவர்கள்,

சமகாலத்தவர்கள் ஆகிய பலரையும் சந்தித்து, விவரங்கள் சேகரித்து, விருப்பு வெறுப்பின்றிச் சுவையான கதை போல எழுதலாம்'' என அருகிருந்த பேராசிரியர் ஒருவர் உற்சாகப் படுத்தினார். ஒரு விரதம் போல, இனிய தவம் போல இப் பணியினை மேற்கொண்டேன்.

1952 இல் 'தமிழ் நாடு' இதழுக்கு வேலை தேடி வந்த போது தூரத்தில் நின்றபடியே தொழில் மன்னர் கருமுத்துவை முதலில் கண்டேன்; அதன் பின்னர் பலதடவை அவரைக் கண்ணார மட்டுமே கண்டிருக்கிறேன். அவருடைய வரலாற்றினை எழுத முற்பட்ட பின்னர், அவர் என் கண்ணிலும் கருத்திலும் நீங்கா இடம் பிடித்துக் கொண்டார். அவரது வாழ்க்கைச் சுவடுகளின் தடம்பற்ற நான் முனைந்த ஒவ்வொரு வினாடியும் அவை ஒன்றாய்ப் பலவாய்ப் பரிணமித்து இத் திருநாட்டின் திசைதோறும், துறைதோறும் படர்ந்து செல்லக் கண்டு மனம் சொக்கிப் போனேன் ''ஓரிரு மாதங்களில் எப்படி எழுதி முடிப்பது?'' என மயங்கி மருகினேன். ஜனாதிபதி கிரி முதல் சாதாரண ஊழியர் வரை, தியாகராசரைப் பற்றித் தெரிந்த பலரோடு தொடர்பு கொண்டு, இரவும் பகலும் இதே சிந்தையாய் அலைந்தேன்; கருமுத்து தி. மாணிக்கவாசகனாரின் மணி விழா நினைவு வெளியீடாக இது வர வேண்டும் என்ற கால எல்லையால், ஒரு வழியாக இவ் வரலாற்றை எழுதி முடித்தேன்.

செட்டிநாட்டின் வரலாற்றைத் திறம்பட அறிந்த உயர் திரு 'சோமலெ' அவர்கள் என் இளமை தொட்டே பல துறையிலும் எனக்கு வழிகாட்டியாயிலங்குபவர். கலைத் தந்தையின் வரலாற்று நூலுக்குரிய வரையறையினையும் அவரே ஆக்கித் தந்தார்; தான் தேடித் தொகுத்த பல குறிப் புக்களையும் எனக்கு நல்கி உதவினார். மதுரை-காமராசர் பல்கலைக் கழகத் தமிழ்த்துறைப் பேராசிரியர் டாக்டர். தமிழண்ணல் அவர்கள், தியாகராசப் பெருந்தகையினையும்

என் எளிய முயற்சியினையும் நன்கறிந்தவர். தியாகராச மலையினை வலம்வர நான் மேற்கொண்ட பணிகளை யெல்லாம் ஒவ்வொரு நிலையிலும் ஊக்குவித்து வழி காட்டியவர். மீனாட்சி புத்தக நிலைய உரிமையாளர் திருமிகு. செ. செல்லப்பன் அவர்கள் பொது நலப் பணியிலும் தமிழ் இலக்கியப் பரப்பிலும் பேரார்வமுடையவர்; கலைத் தந்தையின் வரலாறு பொது நலப்பணிக்கும் தமிழ் இலக்கிய நலத்திற்கும் வழிகாட்டும் எனத்துணிபுடையவர்கள். — இம் மூவரின் இடையறாத உற்சாகத்தால் கலைத் தந்தை வரலாறு உரிய காலத்தே உருவாயிற்று. இப் பெருமக்களை நன்றியுணர்வுடன் போற்றுகின்றேன்.

புகழ்ந்தவை போற்றிச் செய்வதையே வாழ்க்கை வழியாகக் கொண்ட கருமுத்து தி. மாணிக்கவாசகனார் அவர்கள், தம் தந்தையாரின் வரலாறு மிகையுமின்றிக் குறையுமின்றிச் சீருற அமைய வேண்டும் எனக்கருதித் தக்காங்கு உதவினார்கள். நான் சென்ற போதெல்லாம் சிந்தை நோகாமல் விளக்கங்கள் சொன்ன அன்னாருடைய இனிமையையும் எளிமையையும் நெஞ்சாரப் போற்றி வணங்குகின்றேன். ''போராட்டமே வாழ்வின் போக்காகக் கொண்ட கலைத்தந்தையின் வரலாறு, இந்நாட்டு வரலாற்றின் ஒரு பகுதி'' எனக் கருதும் மதிப்பிற்குரிய திருமதி டாக்டர் இராதா தியாகராசன் அம்மையார் அவர்கள் எனக்கு நல்லாக்கம் நல்கினார்கள்; அவர்கட்கும் என் நன்றி உரியது.

இதனை எழுதி முடிக்க இயன்றவாறெல்லாம் உதவிய அன்பர்கட்கெல்லாம் நன்றி கூறி, வளரத்துடிக்கும் தலை முறையினர்க்கு இவ்வரலாற்று நூல் வழிகாட்டியாயிலங்கும் எனும் நம்பிக்கையுடன், கருமுத்து தி. மாணிக்கவாசகனாரின் மணிவிழாவில் இந்நூலினைக் காணிக்கையாக்குகின்றேன்.

பேராசிரியர் சு. குழந்தைநாதன் (சுகுநா)

(அருள் ஆனந்தர் கல்லூரி, கருமாத்தூர்)

மதிநுட்பம்



நூலோடு உடையார்!

ஆயிரம் பிறை கண்ட அரசியலறிஞரும் ஆலயரசரும்

கருமஞ்சிதையாமல்



கண்ணோடவல்லார்

கரும வீரரும் கலைத் தந்தையும்

'' உன்
பாதங்கள் இவை என்னில்
படிவங்கள் எப்படியோ ?
— கம்பன்

# ஆயிரம் பிறையும் அமைந்த வாழ்வும்

# 1

## ஆயிரம் பிறை கண்டவர்

''ஆலைகள் வைப்போம் — கல்விச்
சாலைகள் வைப்போம்
ஓயுதல் செய்யோம் — தலை
சாயுதல் செய்யோம்''

எனப் பாடிய பாரதியார் புதிய பாரத நாட்டவர்க்குரிய செயல் திட்டமொன்றை அன்றே கனவு கண்டார் ; கவிஞனின் அக்கனவுகளை அப்படியே செயலாக்குவதற்குத்தம் வாழ்க்கை முழுவதுமே முயன்று வெற்றிகண்ட சிலருள் சிறந்து விளங்கியவர் கருமுத்து தியாகராசச் செட்டியார். இப்பெருமகனார், ஆலை பல நிறுவிய திறத்தால் 'தென்னாட்டின் ஆலையரசர்'' எனவும், கல்விக்குப் பலகோடி ரூபாய்களை வழங்கிய வன்மையால் 'கலைத் தந்தை' எனவும், புகழார்ந்த குடும்பத்தில் பிறந்ததோடு அப்பெருமையினை எஞ்ஞான்றும் நிலைக்கவைத்த தலைமையால் 'கருமுத்து' எனவும் பொருத்தமுற அழைக்கப் பெற்றார். செந்தமிழ்ப் புரவலராயும் அறக்கொடையாளராகவும் திகழ்ந்த இப்பெருந்தகை 81 ஆண்டுகள் வாழ்ந்து

ஆயிரம் பிறை கண்டு நிறைவாழ்வுகொண்டார். ''அவரைப் போன்ற பேராற்றல் படைத்த பேரறிஞர்கள் ஆயிரம் ஆண்டுகளுக்கு ஒருமுறை தோன்றுவதும் அபூர்வம் என்றே கருதுகின்றேன்'' என அவருடன் நெருங்கிப் பழகிய அன்பர் 1 ஒருவர் பெருமையுடன் சொல்லியதுபோல, ஆயிரமாண்டு-கட்கு நிற்கும் புகழ் நலங்களையெல்லாம் தமக்கமைந்த ஆயிரம் பிறை ஆண்டுகளுக்குள் அவர் செய்து முடித்தார்.

## பட்டையிட்ட வைரம் போன்றார்

''இடையறாத எளிய முயற்சிகளாலேயே அருஞ்செயல்கள் ஆக்கப்படுகின்றன'' (Great things can have only humble beginnings) என மாணவரிடையே உரையாற்றும் போதெல்லாம் எடுத்துச் சொல்லிச் சிந்திக்கவைத்த கருமுத்து தியாகராசர் இடையறாத முயற்சிகளால் இன்னல்களை வென்று ஏற்றம் கொண்டவர்; உழைப்பையும் வளர்ச்சியையும் ஊடுபாவாக்கிக் கொண்டவர்; இத்தமிழ்நாடு தொழிலாலும் கல்வியாலும் தான் முன்னேறமுடியும் என நம்பி, அவற்றின் வளர்ச்சிக்கான சூழ்நிலைகளைத் திட்டமிட்டு அமைக்க முற்பட்டு, அதில் வெற்றியும் பெற்றவர்; தொழில் நாட்டம், கல்விப் பணி, மொழிப்பற்று, நாட்டுணர்வு, கலைத்தேர்ச்சி, சமூகத்தொண்டு எனத் தொட்ட தொட்டதுறைகளால் எல்லாம் பட்டையிட்ட வைரம்போல ஒளிபாய்ச்சியவர்.

இலங்கையில் தொழில்பழகச் சென்ற இளமைக் காலத்திலேயே பத்திரிக்கையாளராகப் பயிற்சி பெற்றார்; தோட்டத் தொழிலாளர்களின் துயர்துடைக்க அப்போதே உரிமைப் போர் தொடுத்தார்; தாயகம் போந்தபின் தேசீய விடுதலை இயக்கத்தில் இரண்டறக் கலந்தார்; காந்தி அடிகளால் கவரப்பெற்றுக் காங்கிரசுக் கட்சியின் செயல் வீரர்

---

1 திரு. எல். என். எஸ். சுந்தரராமன்

ஆனார். 27ஆம் வயதிலேயே தொழில் முயற்சியில் காலூன்றி நின்று, எதிர் நீச்சலிட்டுப் படிப்படியாக வளர்ந்தார்; பல நிறுவனங்களைப் பாடுபட்டு வளர்த்தார். ஐந்து லட்சம் கதிர்களும் இரண்டாயிரம் தறிகளும் கொண்ட 16 ஆலை-களைத் திறம்பட நடத்தினார். தொடர்புடைய பல தொழில் முயற்சிகளால் தென்னகமெங்கும் புது வரலாறு படைத்தார். மதுரையிலும் அதைச் சுற்றிலும் பல ஆலைகளை நிறுவி இத் தொன்னகரைத் தொழில் நகராய் மாற்றினார். பன்னருங் கல்விக்கூடங்களைப் பலகோடி செலவில் நிறுவி இதனைக் கலை நகராக்கவும், பல்கலை நகராக்கவும் அடித்தளமிட்டார். தமிழுக்கு இடர் என்ற போதெல்லாம் தனை மறந்து போரிட்டார்; இந்தி மொழித் திணிப்பு முறையை எதிர்த்துத் தான்இரண்டறக் கலந்திருந்த கட்சியிலிருந்தும் விலகிக் கொண்டார். தொழிலாளர் நலன் காப்பதில் முன்னோடியாகத் திகழ்ந்தார். அரசின் தாறுமாறான தொழிற் கொள்கைகளைக் கண்டபோதெல்லாம் கொதித்தெழுந்து விண்ணப்ப உரைகளால், தீர்மானங்களால், கருத்துரைகளால், இடித்துரைகளால் அரசையும் எதிர்த்து நின்றார்; வென்றார்.

## அரசுடனும் மோதினார்.

"ஓர் அரசாங்கம் செய்யவேண்டிய பணிகளைத் தியாகராசர் தனி ஒருவராகச் செய்து முடித்திருக்கிறார்" என ஒருவரியில் பாராட்டினார் தமிழர் தலைவர் கி. ஆ. பெ. விசுவநாதம்.[1] அரசாங்கம் தான் செய்ய வேண்டிய பணிகளில் பின்னிட்ட போதும், தனியார் துறைகளில் அது அத்துமீறித்தலையிட்டபோதும் தியாகராசர், நியாயத்தை நிலைநாட்டுவதற்காக அரசுடன் அஞ்சாது மோதியிருக்கிறார்.

---

1. 7-8-74இல் நடந்த மதுரைத் திருவள்ளுவர் கழக இரங்கற்கூட்டம்

இந்த அஞ்சாமையும் எதிர்நீச்சலுமே அவர் வாழ்வெனும் நாணயத்தின் இருபுறங்களாக, அவர் செயலோட்டப் பெருக்கின் இரு கரைகளாக, அவர் சிந்தனைத் தராசின் இரு தட்டுகளாக, அவர் வாழ்க்கை நோக்கின் இரு கண்களாக எஞ்ஞான்றும் அமைந்திருந்தன.

தியாகராசரின் பேருக்கும் புகழுக்கும் பெருவாழ்வுக்கும் காரணமாயமைந்தது அவரது அஞ்சாத் திறமும் அறமுள்ள நெஞ்சுமே எனக் கவியரசு கண்ணதாசன் பாடியுள்ளார்;

உரமுள்ள நெஞ்சம்; வாழ்வில்
உறுதியால் வளர்ந்த நெஞ்சம்,
திறமுள்ள நெஞ்சம்; நேர்மை
செம்மையால் மலர்ந்த நெஞ்சம்,
அறமுள்ள நெஞ்சம்; என்றும்
அன்புடன் பழகும் நெஞ்சம்,
கருமுத்து தியாகராசர்
கனிவுடன் வளர்த்த நெஞ்சம்.

## அண்ணல் 'நேருவுடனும் மோதினர்'

அவரது அஞ்சா நெஞ்சத்திற்கும், தளரா ஊக்கத்திற்கும் நியாய உணர்வுக்கும் நேர்மைத் திறத்திற்கும் சான்று பகரக் கூடிய ஒரு சம்பவம்; நேரு பெருமகனார்க்கும் கருமுத்து தியாகராசர்க்கும் நேரிட்ட ஒரு ''மோதலாகும்''.

மீனாட்சி ஆலையில் 1949இல் தொழில் தகராறு ஏற்பட்ட போது தொழிலாளர்கள் வேலை நிறுத்தம் செய்தனர்; நீண்ட நாட்களாகியும் தாவாவுக்குத் தீர்வுகாண முடியவில்லை. பின்னர் மத்திய அரசு தலையிட்டு, ஓய்வுபெற்ற உயர்

நீதிமன்ற நடுவர் ஒருவரை மத்தியஸ்தராக நியமிக்க முடிவு செய்தது. தகராறை நடுவர் நீர்ப்புக்கு விடுவதில் கருமுத்து தியாகராசர்க்கு மறுப்பில்லை. ஆனால் நடுவராகப் பதவிக் கால நிதிபதியையே அமர்த்துமாறு அவர் கேட்டுக் கொண் டார், நடுவராக அமையும் 'நபரில்' ஏற்பட்ட கருத்து வேறு பாட்டை அரசு ஏற்கவில்லை, தகராறு நீடித்தது. அப்போது தொழிலாளர் நலத்துறைக்கும் தற்காலிகப் பொறுப்பேற் றிருந்த பிரதமர் நேரு பெருமகனார் பார்வைக்கு இச்சிக்கல் வந்தது. "இச்சின்ன விஷயத்திற்காக இவ்வளவு தாமதமா?" எனச் சினமுற்று, விரைவில் நடவடிக்கை எடுக்குமாறு அதிகாரி களிடம் சொன்னார். ஆலை நிர்வாகத்தின் சார்பாக வழக்-கறிஞர் ஒருவர் டெல்லிக்குப் போனார். ''அரசு சொல்வதை ஏற்பதே செட்டியார் நலனுக்கு ஏற்றது'' எனக்கருதிய மீனாட்சி ஆலை மேலாளர் திரு. சி. எஸ். ராமாச்சாரி, நிர்வாக முகவராகச் சென்ற வழக்கறிஞரை அரசு சொல்வது போல ஏற்று, உடன்படிக்கையில் கையெழுத்திடுமாறு சொல்லிவிட்டார், இதைக் கருமுத்து ஏற்கமாட்டார் எனத் தெரிந்திருந்தும், பின்னர் சமாதானப் படுத்திக் கொள்ளலாம் எனச் சூழ்நிலையினைக் கருதி இந்த உடனடி முடிவுக்கு வந்துவிட்டார்.

நிர்வாகத்தின் முகவர் டெல்லியில் கையெழுத்துப் போட்டு விட்ட செய்தி தியாகராசர்க்கு எட்டியது. அப்போது அவர் கொடைக்கானல் இல்லத்தில் தங்கியிருந்தார். செய்தியறிந்த உடன், தபால் நிலையத்திற்குத் தானே புறப்பட்டுச் சென்று நீண்டதொரு தந்தியினை நேரு பெருமகனார்க்கு அனுப்பினார்.

''ஒரு தொழில் நிறுவனத்தின் முகவரை அச்சுறுத்திக் கட்டாயப்படுத்தி உடன்படிக்கையில் கையெழுத்துப் போடச்

செய்யும் அளவுக்கு இந்திய அரசு கீழிறங்கிப்போனது கண்டு வியப்புற்றேன். என் முகவர் சுயாதீனமாகச் செயல் படவில்லை ; முகவர் என்ற வரையறையினையும் கடந்து கையெழுத்துப் போட்டுள்ளார். மீனாட்சி ஆலையின் நிர்வாக இயக்குநர் என்ற முறையில், என் முகவர் செய்துகொண்ட உடன்படிக்கைக்கு நான் ஒப்புதலளிக்கவில்லை. அந்த உடன்படிக்கை என்னைக் கட்டுப்படுத்தாது'' — கருமுத்து தியாகராசன்" (Surprised that an Institution of the stature of Government of India stooped to the level of threatening an Agent of a Company and coercing him to sign a settlement. My Agent did'nt act as a free agent and he has exceeded his powers as an agent. I, as the Managing Director of Sri Meenakshi Mills do not ratify the settlement. It is not binding on me — Karumuttu Thiagarajan" எனும் இத்தந்தியினை, ''பண்டித ஜவஹர்லால் நேரு, புதுதில்லி'' என மட்டும் விலாசமிட்டு அனுப்பிவிட்டு வீடு திரும்பினார்.

இத்தந்தி நேருஜியின் பார்வைக்கு வைக்கப்பட்டது. சற்றுநேரம் யோசித்த பின், தன் செயலர் மத்தாயை அருகழைத்து அவர் பின்வருமாறு கூறினாராம். ''என்னைப் போலவே இன்னும் ஒரு பிடிவாதக்காரர் இந்த நாட்டில் இருக்கிறார். அவருடைய வேண்டுகோளை ஏற்றுக்கொண்டு, திருத்திய ஆணையினை உரியவாறு அனுப்புக' ("There is one more man in this Country who is as adament as I am. Concede to his request and issue necessary revised notification") !

## வெல்லமுடியாதவர் வியக்கத்தக்கவர்

மனத்திண்மையிலும் கொள்கைப் பிடிப்பிலும் உயர்ந்த இமயமாய் இலங்கிய நேருவின் சிந்தையினை அவர் காணாமலே கவர்ந்த விந்தை மனிதாரான தியாகராசர்க்கு, நேருவுடன் நெருங்கிய அறிமுகம் ஏற்படுதற்கு இந்த 'மோதல்' துணை புரிந்தது. நியாயத்திற்காக அஞ்சாமல் போரிடக்கூடிய இத்தென்னாட்டாரின் 'பெருமையை' உடனே அளவிட்டறிந்த நேருவின் நுண்ணுர்வினையும் இந்நிகழ்ச்சி புலப்படுத்துகிறது. ''எளிதில் வெல்லமுடியா தவர்'' எனவும் ''எவரும் வியக்கத்தக்கவர்'' [1] எனவும் கருதுமளவுக்கு மனத் திண்மையுடையவராகச் சிறந்தோங்கிய கருமுத்துவின் சிறப்பைச் சொல்லாமல் சொல்லுகிறது இச்சம்பவம்.

## செயற்கரிய செய்தார்

அவரிடம் இவ்வாறு ஒரு அரசியல்வாதிக்குரிய (Politician) துணிச்சலும், அரசியல் அறிஞர்க்குரிய (Statesman) நாணயமும் தொழில் மேதைக்குரிய திறமையும் பொருந்தியிருந்தன. எதிலும் வெற்றிபெறச் செய்யும் ஏதோ ஒன்று கருமுத்து தியாகராசரிடம் இருந்தது. ஒரு சக்தி, ஒரு வேகம், ஒரு கருவி, ஒரு விஞ்ஞான வழி, ஒரு பண்பாட்டு நெறி என என்னபெயரிட்டு அழைத்தாலும் சரி, அவரிடம் ஏதோ ஒருவகைத் தன்னம்பிக்கை இருந்தது. அவருக்குள்ளே வித்-தாகக்கிடந்த இத்தன்னம்பிக்கை அவர் வளர வளர, விரிந்த மர மாக அதுவும் கிளை பரப்பிக் கொண்டது. இத்தன்னம்பிக்கை

---

"He was a man of strong will power, appearing to some formidable and to others admirable" —
பேராசிரியர் T. V. சுப்பாராவ்-தியாகராசர் கல்லூரி மலர்

தந்த நிழலில் அமர்ந்து கொண்டு, தான் அடையக் கருதிய லட்சியத்தை அல்லது சாதனையைத் தெள்ளத் தெளிவாக மனதில் ஒரு படமாக வரைந்துகொண்டு, அதைச் செயலாக்கத் தன் முழுச் சக்தியையும் பயன்படுத்தி அவர் செயற்கரிய செய்தார். ஆயிரம் பிறை கண்ட அன்னவரின் வாழ்வெங்கும் இழையோடி நின்ற அரும்பண்புகளில் இதுவும் ஒன்று.

நாம் பலருடைய வாழ்க்கை வரலாறுகளைப் படித்து இருக்கிறோம். எண்ணங்களால் மட்டும் உருவாகிறவர் உண்டு, நிகழ்ச்சிகளால் மட்டும் உருவாக்கப்படுவோரும் உண்டு. எண்ணங்களால் நிகழ்ச்சிகளையும், நிகழ்ச்சிகளால் எண்ணங்களையும் (காந்தியடிகளைப் போல; ஆனால் தத்தம் வாழ்க்கைவட்டத்திற்குள்) உருவாக்கித் தம்மையும் உயர்த்திக் கொண்டோரும் உண்டு. அமெரிக்க நாட்டுத் தொழில் மன்னர் ராக்பெல்லரைப் போலத் தமிழ்நாட்டில் இவ்வாறு உருவாகி உயர்ந்த மேதையாகத் தியாகராசர் ஒளிவிங்கினார். மேதைகளின் உள்ளக்கிடக்கையில் உதய மாகும் சிந்தனைப் பொறி சுடராகிப் பரிணமிப்பதுபோல, தியாகராசரின் உள்ளத்தில் உருவான எண்ணங்கள் எல்லாம் தமிழகத்தில் ஒரு கல்விப்புரட்சியினை, ஒரு தொழிற் புரட்சியினை ஏற்படுத்தும் அளவுக்குச் சாதனைகளாயின.

## விரித்த புத்தகம் ஆனார்;
## விளங்கும் கோபுரம் போன்றார்!

துல்லியமான துலாக்கோல் போலக் கணிக்கும் திறமும், எந்நிலையிலும் தன்னிலை இழக்காத உரமும், தேர்ந்து தெளியும் நிதானமும், தொலைநோக்குமிக்க அறிவுத் தீட்சண்ணியமும் கொண்டவராகத் திகழ்ந்த கருமுத்து தியாகராசரின் வாழ்க்கை விரித்துவைக்கப்பட்ட புத்தகம்

போன்றதாகும். வரிக்குவரி படித்தாலும் அது வளர்ந்து கொண்டேபோகும். அந்த அளவுக்குச் சம்பவப் பின்னல்களும் சாதனைப் பட்டியல்களும் அவ்வாழ்க்கைப் பேரேட்டில் பொதிந்துள்ளன. ''மாநிதிச் செல்வமும் மாமனைச் செல்வமும் மக்கட் செல்வமும்'' தக்காங்குப் பெற்ற இத் தலைமகனின் வாழ்க்கைப் பக்கங்களைப் படித்த பின்னர் ஒருவருக்கு ஏற்படக்கூடியன மூன்றே எனத் தனவணிகத் தொழிலரசர் ஒருவர் கூறினார்.

''அவை - ''வியப்பு, மலைப்பு, பிரமிப்பு''

''எளிய வாழ்க்கை. ஏற்றமான சிந்தனை. கலையில் ஈடுபாடு, கல்வியில் கருத்து, திருவாசகத்தில் நெஞ்சுருகும் தோய்வு, திருக்குறளை எழுத்தெண்ணிக் கருத்தெண்ணிக் கற்ற உறுதி - இவ்வளவும் அயராத உழைப்போடு, தொழில் வளர்க்கும் மதிநலத்தோடு சேர்ந்தால் - அதற்குப் பெயர், கருமுத்து தியாகராசர்'' 1 - எனும் சூத்திரம் போலப் பண்புகளால் அமைந்த புகழ்வாழ்க்கை தியாகராசர் வரலாறு.

ஒருவர் பெற்றுள்ள பல பண்புகளில், சில பரம்பரைக் குணங்களாயிருக்கும், பல அவரவர் அனுபவ அறிவால் அமையும், 'கருமுத்து' எனும் குடும்பப் பெருமைகள் தியாகராசர்க்கு அடித்தளமாயின. 'ஆலையரசர்' எனும் செயலாற்றல் அவரைக் கோபுரமாயுயர்த்தின, கலைத் தந்தை' எனும் புகழ் அக்கோபுர வாழ்வுக்குப் பொன்முலாம் பூசின. தியாகராசர் உடலால் மறைந்தாலும் ''கலைத் தந்தை, கருமுத்து' எனும் பெயர்களால் ஆலயக் கோபுரம் போல அவர் காலமெல்லாம் வாழ்கிறார்!

---

1. டாக்டர் சுப. அண்ணாமலை - கட்டுரை

# குலமும் குடியும்

# 2

''சீரு பர்மா சிங்கபுரம் -
செல்வம் பொழியுமிலங்கை முதல்
நாலுதிசையும் தமிழ்க் கொடியை
நாட்டிப் பரத நாட்டினில்
ஆளுப் பொருளும் புகழும் நல்
லறமும் வளர்க்கும் தனவணிகர்
— கவிமணி

## இசைவிளங்குபெருங்குடி

''நம் குலமரபை 'ஏசாச்சிறப்யின் இசை விளங்கு பெருங்குடி, என்று இளங்கோவடிகளும் "மானமிகு தருமத்தின் வழிவந்து வாய்மையினில் ஊனமில் சீர்ப்பெரு வணிகர்' என்று சேக்கிழாரும் சிறப்பித்துப் பாடியுள்ளனர்'' 1 எனத் தியாகராசரே பெருமைப்படும் சிறப்புடையது தனவணிக சமூகம். தனவணிகர்கள், சம்புத்தீவில் நாகநாட்டில் வரலாற்றுக்கு எட்டாத நெடுங்காலமுதலே வாழ்ந்தனர் என்றும், இன்றைக்கு ஈராயிரம் ஆண்டுகட்கு முன்னரே தொண்டைமண்டலத்துக் காஞ்சிபுரம் வந்து குடியேறினர் என்றும், அதன் பின்னர் சோழநாட்டுக் காவிரிப் பூம்பட்டினத்தில் கி.பி. ஏழாம் நூற்ருண்டுவரை செல்வாக்குப் பெற்றிருந்தனர் என்றும், அதற்கும் பின்னர் பாண்டியநாடு வந்து சேர்ந்தனர் என்றும் வரலாறு அறியப்படுகிறது. 2

''மன்னர்பாங்கில் பின்னோர்' எனத் தொல்காப்பியத் தால் போற்றப்பெற்ற இவ்வணிகர் பெருங்குலத்தினர், காலப்போக்கில், பறம்புநாட்டையடுத்த பாண்டிநாட்டுப் பகுதிகளில் 'செட்டிநாடு' கண்டு, 96 நகர்களை அமைத்து வாழ்ந்தமையால், நகரத்தார்' என அழைக்கப்பட்டனர்.

---

1. நகரத்தார் சங்கம் - மதுரை. தலைமையுரை - 1962
2. டாக்டர் வ. சுப. மாணிக்கம். "The Ancient History of the Nagarathars" - Collected Papers. பூங்கொன்றை வேலங்குடிச் சிலாசாசனக் குறிப்புகள்

இத்தனவணிகர்கள், சிங்களம், புட்பகம், சாவகம் ஆகிய தீவு பலவினும் சென்றேறி வாணிகம் செய்து வருபொருள் சேர்த்தனர். வணிகத்தில் காணி காணியாக ஈட்டி, அறவழிக்குக் கோடி கோடியாகச் செலவிட்டுப் புகழும் புண்ணியமும் தேடினர்.

இச்செட்டிநாட்டின் எல்லைகள் வருமாறு:

''வெள்ளாறது வடக்காமேற் குப்பிரான் மலையாந்
தெள்ளார் புனல்வைகை தெற்காகும் - ஒள்ளியநீ
ரெட்டிக் கடற்கிழக்கா மிஃதன்றோ நாட்டாண்சேர்
செட்டிநாட்டெல்லே எனச் செப்பு''[1].

சோழ வள நாட்டிலிருந்து பாண்டி வள நாட்டிற்கு வந்த தனவணிகர் எக்காரணங்கொண்டோ இடைக்காலத்தில் பாண்டி நாட்டிற்கும் புனல்நாட்டிற்கும் இடையேயுள்ள தனித் தமிழரசாகிய புதுகோட்டை சமஸ்தான எல்லையிலும் குடியேறியிருக்கின்றனர். அக்காலத்தில் வாணிபத்தில் சிறந்து விளங்கியுள்ளனர், சமூகக் கட்டுப்பாடுகளையும் மிகுவித்துக் கட்டுக்கோப்புடன் வாழ்ந்துள்ளனர். இதுபற்றிய விவரங்களைப் புதுக்கோட்டை சமஸ்தானச் சரித்திரத்திலும் விளக்கமாகக் காணலாம்:

"The Nattukottni Chettiar :- The Nattukottai Chettiars are said to have come over to these parts from Kaverripattanam, a village at the mouth of the Kaveri. They are said to have been patronised by the Chola kings and to have enjoyed the honour of placing fhe crown on the head of every Chola King at the time of his installation

---

1. மகாவித்துவான் பாடுவார் முத்தப்பச் செட்டியார்.

The story that is given to account for their emigration is that a Chola King wanted to commit an outrage on a Chetti woman and that the Chettiars therefore left the Chola land in a body and settled to the south of the Vellar, the southern boundary of the Chola Kingdom, vowing never to permlt their woman to cross theV ellar and get into Chola land again. A different account is given however by Mr. Thurston, according to whom, " a Pandya King, named Sundara Pandya, is said to have asked the Chola King to induce some of the Vaisyas in his land to settle down in the Pandya territory and allowed them to settle in the tract of country north of the river Vaigai, east of the Piranmalai and south of the Vellar" 1.

இவ்வரலாற்றுக்குறிப்பு, தனவணிகர்களின் அரசியற் பெருமையையும் எடுத்துக் காட்டுகிறது.

## நாட்டுக்கோட்டை மரபு :

ஏற்றத்தாழ்வுகள் இருப்பினும் தொடர்ந்த வளர்ச்சியும் கட்டுக்கோப்பும் உடைய குலங்களில் 'மரபுகள்' எப்போதும் பேணப்படும். இம்மரபுகளே அவற்றின் பிற்கால எழுச்சிக்கும் துணை செய்யும். புராதன காலத்தில் தனவணிகர்கள் - பிரதான வைசியர், மகுட வைசியர், தனவைசியர், இரத்தின தனவைசியர், உபயகுல பூபாலவைசியர், சந்திர கங்காகுல வைசியர், சிவகோத்திர வைசியர், இளையாற்றங்குடி நகர வைசியர், நாட்டுக்கோட்டை வைசியர்

1. A General History of the Pudukottai State.

எனும் ஒன்பது காரணப் பெயர்களைப் பெற்றிருந்தனர். பின்னர் அவர்களில் ஓரிருபிரிவினர் நாட்டுக்குள் கோட்டைபோல் நடுமண்டலமாக அமைந்திருந்த பகுதியில் குடியேறியமையால் ''நாட்டுக்கோட்டை நகரத்தார்'' என அழைக்கப்பட்டிருக்கக்கூடும்.

நாட்டுக்கோட்டைப் பகுதியில் அமைந்த நகரத்தாரிடையே இடைக்காலத்தே ஏதோ காரணத்தால் ஒற்றுமை குன்றிய போது ஒன்பது குழுக்களாக அவர்கள் பிரிந்தனர். அப்போது அரசுபுரிந்த சவுந்தரபாண்டியமன்னனிடம் சென்று தங்களது ஒன்பது கூட்டத்தார்க்கும் ஒன்பது கோயில்கள் வேண்டுமென்று விண்ணப்பித்தனராம். அவ்வாறே பாண்டிய மன்னனும் அளிக்க அவர்களிடையே ஒன்பது கோயில் பிரிவுகளும், 23 உட்பிரிவுகளும் ஏற்பட்டனவாம். இந்தப் பிரிவுகளினடிப்படையிலேயே திருமண உறவுகள் கொள்ளப் பெறுகின்றன. இவ்வாறு அமைந்த அவர்களது ஒன்பது கோயில் பிரிவுகள் வருமாறு:

1. இளையாற்றக்குடிக்கோயில். 2. மாற்றூர்க்கோயில். 3. வைரவன் கோயில். 4. இரணியூர்க் கோயில். 5. பிள்ளையார்பட்டிக் கோயில். 6. நேமங்கோயில். 7. இலுப்பைக்குடிக் கோயில். 8. சூரைக்குடிக்கோயில். 9. வேலங்குடிக்கோயில்.

தனவணிகர்கள் சோழமரபு குன்றி, நாயக்க அரசு வீழ்ந்த காலம் முதல் ஆலயப்பணிகட்கு அள்ளி வழங்கினர். தூரகிழக்கு நாடுகளில் சைவ சமயத்தைப் பரப்ப உதவினர். தமிழகம் வடஇந்தியா, பர்மா, இலங்கை, மலேசியா. செய்கோன் முதலிய இடங்களில் ஆலயத்திருப்பணிகளுக்கென இதுவரை 60 கோடி ரூபாய் வரை செலவிட்டுள்ளனர்.

## வட்டித்தொழில் வழக்கம்

''கொள்வதூ உம் மிகைகொளாது கொடுப்பதூ உம் குறைபடாது பல்பண்டம் பகர்ந்து வீசும்'' 1 தொல்குடியின ராக விளங்கிய இச்சமூகத்தினர், அரசு மாற்றங்களாலும் காலப் போக்காலும், மேலை வணிகப் போட்டியாலும் தம் பரம்பரை வணிகத் தொழிலை விடுத்து வட்டித் தொழிலுக்கு வந்தனர்.

''நம்நாடு தொழிலில் மேன்மை பெற்றுச் செல்வச் சிறப்புற்ற காலத்தில் உள்நாட்டு, வெளிநாட்டு வாணிபம் செய்தனர். சில நூற்றாண்டுகளாக அன்னியர் வசம் வியாபாரம் ஒப்புவிக்கப்பெற்றுத் தொழில்களும் அழிக்கப் பட்டுப் போனபின்னர், காலத்தை அனுசரித்து வட்டித் தொழிலைக் கையேற்க வேண்டி நேர்ந்துவிட்டது. வெளி நாடுகளில் போதிய சுதந்திரமின்மையால் துன்பங்களை ஏற்று, தனிமைத் துயருக்குள்ளாகி இத்தொழிலைச் செய்ய வேண்டியிருக்கிறது'' எனச் செட்டி நாட்டின் சீர்திருத்த வீரர் சொ. முருகப்பா இதுபற்றிக்கூறினார். 2''வட்டித் தொழிலானது நான்கைந்து தலைமுறைகளுக்கு முன்னரே செட்டியார்களால் செய்யப்பட்டது. 3

''பெரும்பாலும் வட்டித் தொழில், சிறுபான்மை ஏனைய வியாபாரங்களும் தொழில்களும் செய்தனர். சிலோன், பர்மா, மலாய்நாடுகள், அன்னம் தேயங்கள். சுமட்ரா நாடுகள் ஆகியவற்றில் செல்வாக்குடன் உள்ளனர்.

---

1. பட்டினப்பாலை
2. தனவைசியர் வாலிபர் மாநாட்டு முன்னுரை - காரைக்குடி, 1922.
3. ஆராய்ச்சியாளர் டாக்டர் பிலிப் சிகல்மன் தமிழ்நேசனுக்கு அளித்த பேட்டி

என்றாலும் எதிர்காலத்தில் வட்டித் தொழில் அதிக நயந் தருவதாக இராது. வட்டித் தொழிலை மட்டும் நம்பிக் கொண்டிராமல் பற்பல வியாபாரங்களிலும் தொழிற் சாலைகளிலும் சமூகம் ஈடுபடவேண்டும்'' 1 என்ற கருத்து கொஞ்சம் கொஞ்சமாகக் காலூன்றி வந்தது.

ஆங்கில அரசு வேரூன்றிக் காலனி நாடுகளை அமைத்து ஏகாதிபத்தியக் கொடி நாட்டி ''சூரியன் அஸ்தமிக்காத சாம்ராஜ்யத்தை'' நிறுவியதைத் தொடர்ந்து உலகில் அமைதி நிலை ஏற்பட்டது. இவ்வமைதிச் சூழலைப் பயன் கொண்டு, தனவணிக சமூகத்தினர் தங்கள் தொழில்களை வளர்த்து வந்தனர்.

''இங்கிலீஷ் கொடி பறக்கவே
இளையாத்தக்குடி சிறக்கவே'' எனப் பாடுவார் முத்தப்பச் செட்டியார் பரவசமுற்றுப் பாடும் அளவுக்கு ஆங்கில அரசுக் காலத்தில் அவர்கள் ஆக்கமுற்று வந்தனர்.

''பலநூற்றாண்டுகளாக இரண்டு சிறந்த குணங்கள் தன வணிகர்களிடம் வளர்ந்திருக்கின்றன. ஒன்று, எளிமையான வாழ்க்கை, இரண்டு நாணயமாய் நடந்துகொள்வது. இந்த இரண்டு காரணங்கள் பற்றியே இவர்கள் தமிழ்நாட்டில் சிறந்த லேவாதேவி முதலாளிகளாய், இருந்து வந்திருக் கிறார்கள். தமிழ்நாட்டில் எந்த ஊரானாலும் சரி, சகல ஜனங்களும் இவர்கள் வைத்த கடையிலேயே நம்பிக்கை வைப்பார்கள். பணத்தைப் போடுவார்கள். கடை வைத்தவர் தனவணிகக் குலத்தைச் சேர்ந்தவரென்று தெரிந்தால் போதும், வேறொரு விவரமும் அவர்களைப் பற்றித் தெரிய

1. இளைஞர்கட்கு ஆலோசனை - எம். சின்னையா செட்டியார், மகிபாலன்பட்டி - 1938

வேண்டியதில்லை. பரம்பரையாய் உள்ளூரிலேயே பிறந்து வளர்ந்த மனுஷர்போல நம்பிக்கைக்கு ஆளாவார்கள்'' என செந்தமிழ்ச் செல்வர், ரசிகமணி டி. கே. சிதம்பரநாத முதலியார் ஒரு கட்டுரையில் எழுதியுள்ளார். 1

வட்டித் தொழிலில் நல்ல வருமானம் இருந்ததால் பிறதொழில்களில் ஈடுபடும் முயற்சியோ அவற்றின் நுட்பங்களைக் கற்கும் முனைப்போ தனவணிக இளைஞர் களிடம் மலரவில்லை. வயது வந்ததும் கப்பலேறிச்சென்று, 'பெட்டியடி'யில் கைபழகுவதும், கணக்குப் பார்ப்பதும் போதுமானது என்றிருந்ததால் மெத்த வளர்ந்து வந்த மேன்மைக் கலைகளை அப்போதே அறிந்துகொள்ளும் வாய்ப்புக்களில் அவர்கள் அக்கறை கொள்ளவில்லை. தம் மக்களில் ஆண்பிள்ளைகளை மட்டும் ஓரளவே படிக்க வைத்தனர். திண்ணைப் பள்ளிகளில் பெருக்கல், எண்சுவடி, கீழ்வாயிலக்கம், நீதிநூல் ஆகியவற்றை ஓரளவு எழுத்துக் கூட்டிப் படிக்க வைப்பதுடன் நிறுத்திக் கொண்டனர். அந்த அளவுக்குக்கூடப் பெண்பிள்ளைகளைப் படிக்கவைப்பதில்லை.

## ஐரோப்பிய வணிகர்க்கு நிகர்:

தென்னிந்தியச் சாதிகளையும் குடிகளையும் பற்றிப் பெரியதொரு ஆய்வுநூலைத் தொகுத்தெழுதிய திரு எட்கார் தர்ஸ்டன் என்பவர், தொழிலமைப்பிலும், கூட்டுறவிலும், நிர்வாக முறையிலும் ஐரோப்பிய வணிகர்களுக்கு நிகராக விளங்கிய தனவணிகர்கள், ஆங்கிலக் கல்வியில் நாட்டம் செலுத்தவில்லை என்றும் தம் குலத்தொழிலுக்கு வேண்டிய கல்வியினைத் தம் பிள்ளைகளுக்குத் தருவதை ஒரு மரபு போல ஆக்கிவிட்டனர் என்றும் எழுதியுள்ளார். அவர் தம் கருத்துக்கள் இவை :

1 தனவணிகர் தன்மை - கதிரேசனார் வானொலி உரை -1940

ஒரு வானில்



மூன்று சுடர்கள்

அறிஞர் அண்ணா, மேதை ஜி. டி. நாயுடு., கலைத் தந்தை

தனவணிக



முவேந்தர்கள்

ஆலையரசர் தியாகராசர், தொழில் மன்னர் ஏ. எம். எம்., செட்டி. நாட்டரசர் முத்தைய செட்டியார்

"Chettiars — In Organisation, Cooperation and Business methods, they are as remarkable as the European merchants. Very few of them have yet received any English Education. They regard education, as at present given in public schools, as worse than useless far professional men, as it makes them theoretical and scarcely helps in practice. The simple but strict training which they give their boys, the long and tedious apprenticeship, which even the sons of the richest among them have to undergo make them very efficient in their profession and methodical in whatever they undertake" 1

தனவணிகர்கள் இந்த அளவு பெற்ற கல்வியைக் கொண்டே தொழிலில் மிகுந்த திறமையையும் எதை மேற்கொண்டாலும் அதில்வரையறுத்த ஒழுங்கு முறையினையும் பெற்றுத் திகழ்ந்தனர் என அவ்வாங்கிலப் பெருமகன் வியந்தெழுதுகிறார்.

### நிகரில்லாத்திறமை

நகரத்தார்கள் பெற்றிருந்த மூவகைத் திறமைகளைக் கவியரசு கண்ணதாசன் பின் வரு மா று பட்டியலிட்டுப் பாடுவார் :

"திரைகடல் ஓடினாலும்
சிறந்ததோர் தொழில் செய்தாலும்
வரையிலாப் பொருள் சேர்க்கின்ற
வளமான திறமை ஒன்று

---

1. Edgar Thurston - "Castes and Tribes of Southern India" - Quoted in "A Tourist Guide" by Higginbothams - 1913

கரையிலாததனைச் சேர்த்துக்
கணக்குடன் வைப்பதொன்று
நிறைவுடன் செலவு செய்யும்
நிகரிலாத் திறமை ஒன்று [1]

பம்பாயைச் சுற்றிலும் கால் பாவி நின்று வடஇந்தியத் தொழிற்புலத்தில் செல்வாக்குப் பெற்று வந்த பார்சி மக்களைப் போல, நகரத்தார்கள் செட்டி நாட்டில் வேரூன்றியபடி வெளிநாடுகளில் வாணிகக் கிளைகளைப் பரப்பி வந்தார்கள். இந்த நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்து இரண்டாம் உலகப் போர்க்காலம் வரை அவர்களது வளர்ச்சிக்கு இணையாக இந்தியாவில் வேறொரு குல மரபைச் சுட்டிக்காட்ட வியலாது.

''தனவணிகர், வடநாட்டு குஜராத்தி சேட்டுகள் போன்று வாணிகத்துறையில் ஈடுபட்டுச் செல்வப் பெருமக்களாக விளங்குகிறார்கள். அவர்களிடம் செல்வத்திருவும் கல்வித் திருவும் சேர்ந்து விளங்குகின்றன. தமிழ்நாட்டிலும் இந்தியாவிலும் விளங்கும் எந்த முன்னேற்ற இயக்கத்திலும் தனவணிகர் பெரும்பங்கு கொண்டு உழைக்கின்றனர்'' என சுவாமி சுத்தானந்த பாரதியார் பாராட்டி எழுதினார். [3]

கண்காணாச் சீமையில் தேயிலையும் ரப்பரும் நெல்லும் தேக்கும் விளைவிப்பதைவிடத் தாய்நாட்டிலேயே பல தொழில்களைத் தொடங்கும் முயற்சிகள் அவர்களிடையே அரும்பு கட்ட ஆரம்பித்தன; செல்வம் பெட்டியில் உறங்காமல் அது உழைப்பும் பிழைப்புமாக மாறும் எண்ணங்கள்

---

1. கவியரசு கண்ணதாசன் - அண்ணாமலைப்பல்கலைக் கழகப் பொன்விழா மலர்
2. ''தனவணிகர் முன்னேற்றம்'' - ஆவினிப்பட்டி விவேகானந்தர் கல்விக் கழக வெளியீடு - 1936

மலரத்தொடங்கின ; தொழிலும் செல்வமும் மேகமும் கடலும் போன்றவையாதலால் இரண்டையும் பொருத்தி வளமை சேர்க்கும் செயல்கள் மணம் பரப்பி வந்தன.

## முன்னணிக் குடும்பங்கள்

இவ்வாறு பெரும்பாலும் வெளிநாட்டு லேவாதேவித் தொழிலோடு ஓரளவு உள்நாட்டு வணிக, தொழில் முயற்சி களிலும் ஈடுபட்டுச் சீருற வளம்பெற்றுவந்த செட்டிநாட் டவர்களில், சில குடும்பங்கள் முன்னிடம் பெற்றுத் திகழ்ந்தன.

கானாடுகாத்தான் சா. ராம. மு. அ., பெத்தாச்சி செட்டியார், காரைக்குடி ஏ. வி. பி. எல்., எம். எஸ். எம். எம்., தேவகோட்டை ஏ. எல். ஏ. ஆர். நற்சாந்துபட்டி, பெ. ராம. ராம சித., கண்டவராயன்பட்டி பழ. கரு. நெற்குப்பை முரு. பழ.; ந. பழ; பூலாங்குறிச்சி, வி. எஸ். ஆர். எம்., புதுவயல் எ. மு., பள்ளத்தூர் ஓ. ஏ. பி. ஆர். எம்., ஏ. எம். எம்., கோட்டையூர் க. வீ. அள. இன்னும் பல குடும்பங்களும் உண்டு. இப்பெயர்ப் பட்டியலில் தனியிடம் பெற்றிருந்த ஒன்று ஆ. தெக்கூர் கருமுத்து விலாசம் ஆகும். முன்னைப் பெருமையுடைய கருங்குளத்தார் வீடும் கருமுத்து விலாசமும் பின்னைப் புதுமைகள் பலவற்றைப் படைக்க முற்பட்டுக் கொண்டிருந்தன.

# வீடும் விலாசமும்

# 3

''சொல்லாலிசை கொண்டநகரம் –
சகிர்த வாவிகள் கொண்ட நகரம்
நெல்லினால் நிதிதேடும் நகரம்
நிதியினால் தர்மம் நீடு நகரம்
எல்லவர்க்கு முகந்த நகரம்
இளசைவாழ்வு மிகுந்த நகரம்''

– முத்து நாயகப்புலவர்

## மலையாளம் கருப்பர்

இராமனாதபுர மாவட்டத்துத் திருப்புத்தூருக்கு அருகில் பட்டமங்கலம் எனும் சிற்றூர் உள்ளது. இதற்கு அணிமையில் உள்ள சிறுகிராமம் கருங்குளம். இந்தச் சின்னக் கிராமம் ''கருங்குளத்தார் வீடு'' எனும் ஒரு குடும்பத்தால் என்றென்றும் பெயர் விளங்கக் காத்திருந்தது. இவ்வூரையடுத்த சொக்கனாதபுரத்தின் ஒரு பகுதியாகிய கத்தப்பட்டில் ஐயனார் கோவில் ஒன்றுண்டு. மலையாளம் தொட்டியத்துக் கருப்பர் எனவும் இத்தெய்வம் சக்தியுடன் விளங்கியது.

நகரத்தார்களுக்கு மரபுப்படி அமைந்த பிரிவுக்கோயில் தவிரக் குலதெய்வக் கோயில் எனவும் ஒன்றிருக்கும். அவர்கள் பாண்டிநாட்டுப் பகுதிகளில் குடியேறிய பின்னர். அவ்வப் பகுதிகளில் ஏற்கெனவே மக்களால் பூசிக்கப்பட்ட தெய்வங்களையும் தம் வழிபாட்டிற்குரிய சிறு தெய்வமாக ஏற்றுக்கொண்டார்கள்.

தம்வீட்டில் பிறக்கும் குழந்தைக்கு இக்குலதெய்வக் கோவிலில்தான் முடியெடுப்பார்கள்; தொட்டில் கட்டி நேர்த்திக்கடன் நிறைவேற்றுவார்கள்; நல்லகாரியம் செய்யத் தொடங்குமுன் இந்தச் சாமிக்குத்தான் அரைக்கால் ரூபாயைக் காசு முடிவார்கள். வீட்டில் சிறுசிறு வேண்டுதலாக முடியும்

காசுகளை மகாசிவராத்திரி முதலிய விழா நாட்களில் கோவிலுக்குக் கொணர்ந்து உண்டியலில் சேர்ப்பார்கள். இக்கோவில்களுக்குரிய காரியக்காரர்கள் சுற்றுமுறையில் பொறுப்பேற்பார்கள்.

அவ்வாறு புகழ்பெற்று விளங்கிய தொட்டியத்துக் கருப்பர், கருங்குளத்தார் வீட்டின் குலதெய்வமாகப் பூசிக்கப் பட்டார். அக்கருங்குளத்தார் வீட்டில் பிறக்கப்போகும் வாரிசுகளின் வழியாகத்தன் பெயரையும் இந்தக் கருப்பர் விளங்கச் செய்யத் திருவுளம் கொண்டார்.

## மாமன் மது. பழ.

வேளாண்மை செய்துவந்த கருங்குளத்தார் வீட்டில் பிறந்த கருப்பன் செட்டியார் வழியாகப் புதிய வரலாறு படைக்கக் காலம் காத்திருந்தது. இந்தக் கருப்பன் செட்டி யாருக்கு இருதாரங்கள் : ஆ. தெக்கூர் மதுவன் செட்டியார் வீட்டில் முதல் திருமணம் செய்து கொண்டார். இந்த முதல் மனைவி பெற்றபிள்ளைக்கு முத்துக்கருப்பன் எனப் பேரிட் டார்கள். பையனின் சின்ன வயதிலேயே 'ஆத்தாள்' கால மானாள். கருப்பன் செட்டியாருக்கு இரண்டாம் திருமணம் செய்யப்பட்டது. மூத்தாள் பிள்ளையைச் சிற்றன்னை பரிவோடு பேணினும் கூடப் பெற்ற அன்னையின் பாசத்தை இழந்த முத்துக்கருப்பன் முகம் வாடியே இருந் தான். இச்சமயத்தில் கருங்குளத்திற்கு இவனுடைய தாய் மாமன் மதுவன் பழனியப்பச் செட்டியார் வந்திருந்தார். இந்த மது. பழ.வுக்குக்கொழும்பில் கடை நடந்து கொண்டி ருந்தது. தன் அம்மானைக் கண்டதும் அவருடனேயே ஆயாள் வீடு போய்விட முத்துக்கருப்பன் முரண்டு பிடித் தான். அப்பச்சியும் அவ்வாறே போயிருக்கச் சம்மதித்து விட்டார்.

முத்துக்கருப்பன் ஆ. தெக்கூர் வந்து சேர்ந்தான். அங்கேயே திண்ணைக் கல்வி கற்றான். தாய் மாமன் வழியாகத் தெக்கூர் வந்து சேர்ந்து தனிவீடாகிவிட்ட இந்த முத்துக்கருப்பன் இல்லம் 'கருங்குளத்தார் வீடு' என அடையாளப் பெயரால் அழைக்கப் பட்டது. கொழும்புக் கடையில் அம்மான் அரவணைப்பில் முத்துக்கருப்பன் தொழில் பழகி வந்தான்.

"இன்றைக்குச் சற்றேறக்குறைய 300 ஆண்டுகட்கு முன்னர், தனவணிகர் பொருளீட்டுதற் பொருட்டு, இலங்கை போந்தனர் என்று சொல்லப்படுகிறது. முதன் முதலாக லேவாதேவித் தொழில் செய்யப் புகுந்த நாடு இலங்கை தானென்றும் சொல்லப்படுகிறது. பின்னர்தான் பர்மா, மலேயா, சைகோன் போன்ற ஏனைய நாடுகளில் தனவணிக மரபினர் குடியேறி வட்டித் தொழில் செய்யத் தொடங்கினார்கள் என்று அறியப்படுகிறது" 1

## மாற்றூர் மரபு

முத்துக்கருப்பன் குடும்பத்தார் மாற்றூர்க் கோவிலைச் சேர்ந்த பிரிவினர். சவுந்தரபாண்டியன் காலத்தில் முதன் முதலில் நகரத்தார்க்குப் பிரித்தளிக்கப்பெற்ற இரு கோவில் களில் மாற்றூர்க்கோவில் முதன்மையானது. மற்றது வைரவன்பட்டிக் கோவில். இவ்வாறு அளிக்கப்பட்டது கி. பி. 712இல் என்பார்கள். இரணியூர்க் கோவில் முதலியன இதற்குப் பிந்திய ஆண்டுகளிலேயே வழங்கப் பட்டன. மாற்றூர்க்கோவிலைப் பெற்றவர்கள் வணிகச் சிறப்புடைய 501 குடும்பத்தவர் ஆவர். இவர்கள் ஒரு குழுவாக (Guild) விளங்கி இந்தக் கோவிலைக் கட்டித்

---

1. தனவணிகர்தன்மை - கதிரேசர்

திருப்பணி செய்து வந்தார்கள். இக்கோவின் அம்மை - அப்பர் பெயர்: பெரிய நாயகி - ஐந்நூற்றீசர். இந்த மாற்றூர்க் கோவிலிலும் இரு கிளைகள், மாற்றூர், மணலூர் என விளங்கின. இதில் மணலூர்ப் பிரிவைச் சேர்ந்தது முத்துக்கருப்பன் குடும்பம்.

## மாப்பிள்ளை நிபந்தனை:

செட்டிநாட்டு 'மேலவட்டகை' ஊர்களில் பிரபலமாகப் போகும் ஆத்திக்காடு தெற்கூர், ஆத்திமரங்கள் அடர்ந்த காடாயிருந்ததால் 'ஆத்திக்காடு' என அழைக்கப்பட்டது. இங்கே காடு வெட்டிப் போட்டுக் கடிய நிலம் திருத்தி வீடு கட்டி விளங்க வேள் வணிகர்கள் வந்தார்கள். ஊரின் தெற்குப் பக்கத்தில் வீடமைத்து அப்பகுதியைத் தெற்கூர் என அழைத்தார்கள். இந்தத் திருவாத்தி மரங்களை வெட்டி அழிப்பது மிகக் கடினமாயிருந்ததாம். முல்லை நில ஆயர் குடும்பங்களில் காளையின் திமில் பிடித்து வென்ற இளைஞனுக்கே மகளைத்திருமணம் செய்விக்கும் மரபு போல, செட்டியார் குடும்பங்களில் ஆத்திக்கட்டையை வெட்டிப் போடும் சாதனையில் வெற்றி பெறும் வீரனுக்கே பெண் கொடுப்பார்களாம்.[1]

இத் தெற்கூரில் மீனாட்சி சுந்தரேசுவரர், ரெங்கநாதர் கோயில்கள் உள்ளன. பச்சை மூங்கிலுடைய ஐயனார் கிராம தேவதையாக விளங்குகிறார். நகரத்தார் குடும்பப் புள்ளிகள் 200ம், பிறவகையார் புள்ளிகள் 500ம் உள்ளன.

---

1. ''அந்தக் காலத்தில் குப்பைமேட்டில் ஆத்திக் கட்டையைப் போட்டு அதை விறகாக வெட்டும்படி செய்து அப்படிச் சீக்கிரம் வெட்டிய மாப்பிள்ளைக்குத் தான் பெண் கொடுக்க இசைந்தார்களாம்''

— மகிபாலன்பட்டி., எம். சின்னையா செட்டியார்.

### செட்டியும், வட்டியும் :

'கருமுத்து' குலத்தைத் தோற்றுவித்த கருப்பன் செட்டியார் மகன் முத்துக்கருப்பன் செட்டியார் தெற்கூர் நகரத்தாரின் தொழில் போக்கில் புதிய திருப்பத்தை ஏற்படுத்த முன் நின்றார்.

''செட்டி, தமிழ் உலகில்
கண்டதெல்லாம் வட்டி'

என நிலவிய வன்சொல்லை மாற்றி, 1860ஆம் ஆண்டிலேயே ஏற்றுமதி, இறக்குமதி வணிகத்திலும், துணி வாணிகத்திலும் இறங்கி, வட்டித் தொழிலே நம் குடும்பம் செய்யக் கூடாது என்று உறுதி எடுத்துக்கொண்ட பெருந்தகையாளர் அம் முத்துக்கருப்பன் செட்டியார் அவர்கள். ஆருயிர்க் கெல்லாம் அன்பு செய்யவேண்டும் என்று இடையருது எடுத்து விளம்பியவர் அவர். தமிழும் சிவநெறியும் தழைத்து ஓங்க வேண்டும் என்ற ஆன்றோர்களின் வழியிலேயே தோன் றியவர் ; சந்ததிகளுக்குத் தந்தையாகவும் விளங்கி ''கருமுத்து'' என்னும் பெயரை உலகம் உள்ளளவும் அழியாது நிலைபெறச் செய்யும் வழித்தோன்றல்களைப் பெற்றவரானர்.[1]

வட்டித் தொழிலைவிட்டு வாணிபத்துறைக்கு வர வேண்டும் என்ற இயக்கம் அக்காலத்தில் செட்டிநாட்டில் பரவிவந்தது.

''தொழில் விஷயமாக வட்டித் தொழில் செய்வது வைசிய தர்மமேயாயினும், நமது தேசத்தில் வியாபாரப் பொருள்கள் மிகுந்து தேசநலத்தைப் பலரும் தேடுமிக்

---

1. கருமுத்து தி. மா. கட்டுரை - விசாலாட்சி கலாசாலை வெள்ளி விழாமலர் - 1972.

காலத்தில் வியாபாரத் துறையில் நம்மவர் விரைவாகக் கலந்துகொள்ளவேண்டும். வட்டித்தொழிலால் கோடீசுவரர் களாவது துர்லபம். எந்தக் காலத்திலும் எந்த தேசத்திலும் வியாபாரிகள் தாம் கோடீசுவரர்களாமி யிருக்கின்றனர்.''

''எதிர்காலத்தில் வட்டித்தொழில் அதிக நயம் தருவ தாக இராது. வட்டித் தொழிலை மட்டும் நம்பிக்கொண் டிராமல் பற்பல வியாபாரங்களிலும் தொழிற்சாலைகளிலும் சமூகம் ஈடுபடவேண்டும். 1

'' கருமுத்து '' குடும்பத்தோன்றல் முத்துக்கருப்பன் — இந்தப் புதுநெறியில் முன்நின்றார்.

தன் தந்தையாரைப் போல முத்துக்கருப்பனும் இருதாரங்கொள்ள வேண்டியதேற்பட்டது. நெற்குப்பையின் சீர்சால் குடும்பத்திலிருந்து மீனாட்சியை முதல் மனைவி யாகக் கொண்டார்.

## மணிவயிறும் மக்களும்

முதல் மனைவி இறக்கவே, கண்டவராயன்பட்டியில் புகழார்ந்த அழ. அ. அழ. குடும்பத்திலிருந்து வினைதீர்த் தாள் எனும் மாதரசியை இரண்டாம் தாரமாக மணந்தார். பிள்ளைச் செல்வங்களால் பெருமையுறும் அக்காலத்தில், இந்த அன்னையின் மணிவயிற்றிலிருந்து 10 பிள்ளைகள் பிறந்தனர்.. இவர்களில் அறுவர் பெண்கள், நால்வர் ஆண்கள்.

முதலில் நாச்சம்மை பிறந்தாள். அருணாசலமும், அழகப்பனும் அடுத்து வந்தனர். மீனாட்சி, கல்யாணி

---

1 'குமரன்' வீரகேசரி — கட்டுரைப் பகுதிகள்

ஆச்சிகளுக்குப் பின்னர், ராமனாதன் பிறந்தார், சீதை, கண்ணாத்தாள், உண்ணுமுலை எனும் செல்வியருக்குப் பின், பத்தாவது செல்லப் பிள்ளையாகத் தியாகராசர் உதித்தார். பெண்மக்களில் பெரும்பாலோர் கண்டவராயன் பட்டியில் உறவுக் குடும்பங்களில் உரிய காலங்களில் திருமணம் செய்விக்கப் பெற்றனர். அப்பெண்மக்களிடமும் 'கருமுத்து மரபு' தொண்டுணர்வாகச் சீதனம் போலச் சென்று சேர்ந்தது. 1911-ம் ஆண்டளவில் கண்டவராயன் பட்டிப் பகுதியில் கடும்பஞ்சமொன்று ஏற்பட்டபோது, இந்தக் 'கருமுத்துச் சகோதரியர்கள்' ஒன்றுகூடி, எழை களுக்குப் பல உதவிகளைச் செய்தனராம். ஊரில் சாலை போடுதல் முதலிய நற்பணிகளுக்கு நிதியளித்துப் பல நூறு குடும்பங்களுக்கு வாழ்வளித்தனராம். கண்டவராயன் பட்டி, நெற்குப்பைச் சாலைகளையமைத்தனராம்.

## நான்கு தூண்கள் :

ஆண் மக்கள்-அருணாசலம், அழகப்பன், இராமனாதன், தியாகராசன் எனும் நால்வரும், ஒவ்வொரு வகையில் சிறப்புற விளங்கி, கருமுத்து எனும் குடும்பத்தின் சால்புடைய நான்கு தூண்களாக இலங்கினர்.

மூத்தவரான அருணாசலம், மதிநுட்பமுடையவர், தம் குடும்பத்துக்கு நாகபட்டினத்தில் இருந்த புடவைக்கடைக்குப் போய்வருவார், அங்கு வெளிப்பாளையத்தில் ஓடிய கைத் தறிகளை நேரில் பார்த்துத் தொழிற்பாங்கினை அறிந்தார். கொழும்பில் இலங்கிய கேஆர்எம்டிடி (KR M.T T.) எனும் கரு முத்து விலாசக் கடையை வளப்படுத்தியதோடு, ''அருணசலம் பிரதர்ஸ்'' எனும் பெயரில் தந்தையார் காலமான பின்னர் நிறுவனப் பெயரை மாற்றி 1904 முதல் அதனைக் கட்டிக் காத்து வந்தார். * இங்கிலாந்து, ஹாலந்து, பெல்ஜியம்,

* சோமலெ' - ருக்மாக் - கட்டுரை

ஜெர்மனி முதலிய மேலை நாடுகளிலிருந்து உயர்ந்த மல் ரகங்களையும் துகில் துணிகளையும் வருவித்து விற்பனை செய்தார். 4 முழச் சாரம், 8 முழக் கம்பாயம் எனும் வகை களைத் தரம் பார்த்தறிவதோடு, அவற்றில் இரட்டை, ஒத்தைமுட்டு ரகங்களையும் வெளிநாட்டில் 'டிசைன்' போடச் செய்து வருவித்தார். திருமணக் குண்டஞ்சி வேட்டிகள், லண்டன் பெட்டி வேட்டிகள் என அக்காலத்தில் பிரபலமாக விளங்கிய ரகங்களுக்கு இங்கிருந்தே மாதிரி போட்டு அனுப் புவார். கலர்ப்பென்சிலால் அவர் போட்டனுப்பும் வரை படங்களை வைத்துக்கொண்டே லண்டனில் டிசைன்களை நிர்ணயிப்பார்களாம். ''அருணாசலம் செட்டியார், எந்தத் துணியை (வேட்டி, சேலை முதலியவற்றை) நெடுந்தூரத்தி லிருந்து பார்த்தால் கூட அது இன்ன நம்பர் நூலில் நெய்யப் பெற்றது, அதனுடைய எடை இவ்வளவு, விலை என்ன என்று சொல்லக்கூடிய ஆற்றல் பெற்றிருந்தார்''

## மாறாத பாக்கியம் :

அருணாசலத்தின் புகழைப் போற்றும் வகையில் செவி வழிப்பாட்டொன்றும் செட்டி நாட்டில் புழங்கி வந்தது. அந்தப் பாட்டு வருவாறு :-

> ''வீராதி வீரனாம் வீரப்பச் செட்டி,
> வெகுபேரு மெச்சிடும் பெரியணன் செட்டி
> வாராத கடன்களை வாங்குவதில் வல்லோன்
> வலிமையுடைய பெத்த பெருமாள்
> மாறாத பாக்கியம் அருணாசலம் செட்டி
> சீமை லண்டன் போகுவதில் கெட்டி''

அருணாசலம் இலண்டனுக்குப் போகாவிட்டாலும் அவர் ஒன்றுவிட்ட தம்பி ராமனாதன் நகரத்தார்களிலேயே முதன் முதலாக மேலைநாடு சென்று தங்கிய பெருமைக்குள்ளானார்.

மான்செஸ்டர் ஆலைகளின் நடைமுறைகளைப் பற்றித் தெரிந்து கொள்வதற்காக 1904இல் இவர் 10 ஆயிரம் ரூபாயுடன் இங்கிலாந்திற்குச் சென்றார். அங்கேயே 1908 இல் ''கே. ராமனாதன் கம்பெனி'' எனும் பெயரில் கொழும்புக் கடையின் கிளையாகத் தொழில் தொடங்கினார். அவர் மனைவி பம்பாய் தாண்டிப் போகவில்லை. இவர் மீண்டும் கொழும்பு வந்து திருநாவுக்கரசு, அழகப்பன் எனும் தன் இருமகன்களை இலண்டனுக்கு கூட்டிச் சென்று விட்டார். அருணாசலம் பிரதர்ஸ் இலண்டன் இராமனாதனனின் தொழிற் போக்கை ஏற்க இசையாமையால், 1911இல் சகோதரர்களுடன் பாகப்பிரிவினை செய்துகொண்டு, இவர் இலண்டனிலேயே தங்கிவிட்டார்.

### சீர்திருத்தச் செம்மல் :

கருமுத்து குடும்பத்தின் இரண்டாமவரான அழகப்பர் அக்காலத்தில் ''செட்டிநாட்டுச் சீர்திருத்தச் செம்மல்களில்'' ஒருவராகப் புகழ்பெற்றார். சமயத்துறையிலும். சமூகத் துறையிலும் பல அருஞ்செயல்களைச் செய்த முன்னோடி யாகத் திகழ்ந்தார். ''மேலைச்சிவபுரி சன்மார்க்க சபை'' தொடங்க உதவி செய்தார். அதற்கு நிறையப் பொருளுத வினார். சோழவந்தான் அரசன் சண்முகனாரை ஈழநாட்டில் அறிமுகப்படுத்தி அவர் பல பரிசில்கள் பெறச் செய்தார். சோழநாட்டுச் 'சிக்கல்' எனும் பாடல் பெற்ற தலத்துச் சிங்காரவேலர் ஆலயத் திருப்பணிக்கு அள்ளி வழங்கினார்''

அழகப்பச் செட்டியார், தாலுகா போர்டு உறுப்பின ராக ஆற்றிய பணிகள் வரலாற்றுச் சிறப்புடையவை. இராமனாதபுரமாவட்டப் பகுதிகளில் சாலை அமைக்க அவர் மேற்கொண்ட ஆரம்பப் பணிகளே இன்றளவும் அடிப்படை யாயமைந்துள்ளன. மதுரைக்கு முறையூர் வழியாக

---

1. 'செட்டிநாடும் தமிழும்' -1920-30 ஆம் ஆண்டளவில் மட்டும் 10 இலட்ச ரூபாய் வரை செலவிட்டனர்.

நெடுஞ்சாலையமைக்க அவர் அன்றே செய்த முயற்சிகள் வெற்றி பெற்றிருந்தால், செட்டிநாட்டுப்பகுதி மதுரையோடு அப்போதே நேரடியாக இணைக்கப் பட்டிருக்கும்.

செட்டிமார் சமூகத்தளத்தில் பல சீர்திருத்தக் குரல்கள் அப்போது எதிரொலித்துக் கொண்டிருந்தன. சின்னையா செட்டியார், சொ. முருகப்பா, ராய. சொக்கலிங்கம், வை. சு. சண்முகம், கருமுத்து சிவலிங்கம்[1] போன்ற இளைஞர்கள், பழைய கண்மூடி வழக்கங்களைக் களையச் செய்து தேசீய நீரோட்டத்தில் செட்டி நாட்டையும் சங்கம மாக்கும் திருப்பணியில் ஈடுபட்டிருந்தனர்.

## தாலிகட்டத் தடையா?

நெடுங்கால மரபுடைய குலத்தில், பல பழக்கவழக் கங்களும் கட்டுப்பாடுகளும் காலப் போக்கில் ஏற்படுவது இயல்பு. மகமதியர் படையெடுப்புக் காலந்தொட்டு, நகரத் தாரில் பெண்ணுக்கு மாப்பிள்ளை தாலிகட்டும் வழக்கம் விட்டுப் போய்விட்டது. நகரத்தார் குடும்பங்களில் நன்றாக வாழ்ந்து மக்களைப் பெற்ற மகராசராகத் திகழ்ந்த ஒருவரே பெண்ணுக்குத் தாலிகட்டத் தேர்ந்தெடுக்கப்படுவார். முகூர்த்தநாளன்று 'உண்மை மாப்பிள்ளை' வேறு வீட்டி லிருக்க, இந்தக் 'கிழட்டுமாப்பிள்ளை' தலையில் உறுமால் வைத்து ஊர்வலமாக அழைத்து வரப்படுவார். மணப் பந்தலில் பலரறியத் தாலிகட்டும் சடங்கு நடைபெறாது. வீட்டிற்குள் உள்ளதோர் அறையில் வைத்தே இந்தச் சடங்கு நிகழ்த்தப்பெறும். இந்த மணவறைக்கெதிரே குத்து விளக்கேற்றி வைக்கப்பெறும். மாப்பிள்ளை வீட்டைச் சேர்ந்த 'மாமக்காரர்' இருவர். மாப்பிள்ளையின் பெற்றோர் அல்லது பங்காளிகளில் இருவர் என இவர்கள் முன் னிலையில் 'திருப்பூட்டு' நடைபெறும். மறுநாள் உண்மை

1. இன்னும் பலர் இருக்கலாம்

மாப்பிள்ளை குதிரையில் ஏறி மணப்பெண் வீட்டின் முன் வந்து நிற்பார். அப்போது பெண்ணுக்கு அத்தை, இவள் தான் மணப்பெண்'' என அவளைத் தன் இடுப்பில் தூக்கி வைத்து, மாப்பிள்ளைக்கு மட்டும் தெரிவதுபோல 'இடுக்கிக் காட்டவேண்டும். ஒரு பெண்ணைக்காட்டிவிட்டு வேறொரு பெண்ணைத் தலையில் கட்டாது தடுக்கவே இந்த இடுக்கிக் காட்டும் ஏற்பாடு. மாப்பிள்ளை 'சரி' என்று தலையசைத்துச் செல்வார். மூன்றாம்நாள், மணவறையில் சடங்குகள் நிகழும். அன்று இரவு மாப்பிள்ளை வீட்டிற்குக் 'குடியழைப்பு'' ஏற்பாடாகும், நான்காம் நாள் மஞ்சள் நீராட்டு. ஐந்தாம்நாள், பெண்ணழைப்பு. மாப்பிள்ளையின் சொந்த ஊருக்குப் பெண் கோலாகலமாக அழைத்துச் செல்லப்படுவாள்.

எல்லாச் சிறப்புமுடைய இந்தத் திருமண நிகழ்ச்சிகளில் மாப்பிள்ளையே தாலி கட்டும் வழக்கம் வரவேண்டுமெனப் புதிய தலைமுறையினர் இயக்கம் கண்டனர். தொன்று தொட்ட வழக்கமான இதனை மாற்றுதற்குப் பழமை வாதிகள் மறுத்தனர்.

### பெண்ணுக்குப் பணம் :

இதுபோலப் ''பெண்ணுக்குப் பணம் வாங்கும்'' மற்றொரு வழக்கமும் இருந்தது. இப்பணத்தைக் கொடுத்துப் பெண் பெற இயலாது ஆயிரமாயிரம் வாலிபர்கள் கலியாணமின்றியிருந்தனர்: 1

மேலும் திருமணச் செலவுகள் பலவகைகளில் பெருகியிருந்தன. திருமாங்கல்யத்திற்குப் பொன் கொடுக்கையில் ஒருவிருந்து, கல்யாணவிருந்து, பெண்ணழைப்பு, மாப்பிள்ளையழைப்பு விருந்து எனப்பல விருந்துகள்; மாமியார் சாமான் வைக்கும் செலவு, மாமவேவு, கல்யாண வேவுச்செலவு,

---

1. 1922இல் இவ்வாறு 2000 பேர் விவாகமில்லாமல் இருந்தனர் என்பார் சொ. முருகப்பா,

வேறுவைத்தல் எனும் செலவுகள், தீர்த்தம் சாப்பிடுதல் பிள்ளைப்பேறு, காப்புக் கட்டுப்புதுமை, கார்த்திகைப்புதுமை, திருவாதிரைப் புதுமை, காச்சி ஊத்துதல், பள்ளிக்கூடம் வைத்தல் எனச் செலவுப் பட்டியல்கள் நீண்டுகொண்டே போயின. வெளியூர் சென்று தொழிலைப் பார்க்கமுடியாத அளவுக்கு இச்சடங்கும் சம்பிரதாயமும் ஊரிலேயே ஆண்களைச் சிறைப்படுத்தி வைத்துவிடும். இந்த வேண்டாத செலவுகளைக் களையவும் சிந்தனைகள் வளர்ந்தன.

இவ்வகையில் சமூகப் பணிகளைச் செய்வதற்கென 1920இல் தனவைசிய ஊழியர் சங்கம் காரைக்குடியில் நிறுவப் பெற்றது. நகரத்தார்களின் பொதுக்கோவிலாகிய ‘கோவிலூரில்’ 1 தொண்ணூற்றாறூர்க் கூட்டங்கள் கூட்டப் பெற்று விவாதிக்கப்பட்டன.

## வீடுவிடமாட்டோம் :

இச்சமூக சீர்திருத்த இயக்கத்தில் கருமுத்து அழகப்பர் ஆவேசக்கனலாகச் சுழன்றார். பெண்கள் ரவிக்கைபோடும் பழக்கத்தை முதன்முதல் ஆதரித்து ஊக்குவித்த பெருந் தகையின் பிள்ளையன்றோ இவர்? பெண்ணுக்கு மாப்பிள்ளையே தாலிகட்டும் வழக்கத்தைக் கொணர்ந்து பழமைக்கோட்டையைத் தகர்ப்பதன் மூலம் பல புதுநெறி களுக்கு வழியமைக்க முற்பட்டார் இவர். [இந்த இயக்கத்தில்

---

1. கோவிலூர் என்பது தமிழ்நாட்டில் 10ஆம் நூற்றாண்டில் மிகப் பிரபலமாயிருந்த கழனிவாயில் எனும் ஏழகப் பெருந்தெருவின் ஒரு பகுதியாகும் - (கம்பன்அடிப்பொடி) காரைக்குடி - மதுரைப் பெருவழியில் உள்ள இவ்வழகிய ஊர் சிற்பச்செல்வமுடைய கொற்றவாளீசுவரர் - திரு நெல்லையம்மன் கோவிலால் புகழ்பெற்றது. இங்குள்ள மடத்தின் ஆதினகர்த்தர்களாக நகரத்தார் மரபினைச் சேர்ந்தோரே ஞானப்பேரொளி வீசியுள்ளனர்,

தியாகராசரும் தம் சகோதரருடன் சேர்ந்து ஊர்ஊராகச் சென்று பேசினார். 'வித்தியா பாநு' என்ற இதழில் கட்டுரைகளும் எழுதினார். அகோர சிவாச்சாரியார் பத்ததிகளை ஆதாரமாகக் காட்டினார். வைசியமித்திரன் இதழ். 28 - 4 - 1913 ]. மேலைச்சிவபுரி சன்மார்க்க சபை நிறுவனரான பழனியப்பச் செட்டியார் மகன் சாமினாதனுக்குத் தன் மகள் நாச்சம்மை ஆச்சி திருமணத்தின்போது மாப்பிள்ளை தாலிகட்டும் வழக்கத்தை முதன்முதலில் தொடங்கியும் விட்டார். இதற்கு நகரத்தாரில் ஒரு சாரார் கடுமையாக எதிர்ப்புத் தெரிவித்தனர். சீர்திருத்தக் கலியாணங்களுக்கு மாப்பிள்ளை வீடுபிடிக்க இடம் தரக்கூடாது எனக் கட்டுப்பாடு செய்தார்கள். அழகப்பச் செட்டியார் வீட்டுத் திருமணமொன்றிற்கு வலையப்பட்டியில் வீடுவிடமாட்டோம் என்று மறுத்தேவிட்டார்கள். சமூகத்தில் கட்சி பிரிந்து சின்னக்கட்சி பெரியகட்சிகள் ஆகிவிட்டன.

விவகாரம் தொண்ணூற்றாறூர்க் கூட்டத்திற்கு வந்தது. [1] தொண்ணூற்றாறூர்க் கூட்டத் தீர்மானம் என்றால் அது வேதவாக்காக ஏற்கப்படும். சீர்திருத்தம் வேண்டும் என்பது பலர் விருப்பமாபினும் பூனைக்கு யார் மணி கட்டுவது எனப் பலர் பம்மிப் பதுங்கியிருந்தனர். புகழ்பெற்ற கோவிலூர் கயிலாசக் கொட்டகையில் நடந்த அந்தக் கூட்டத்தில் கருமுத்து அழகப்பர் எழுந்து ஆணித்தரமாகப் பேசினார். அவரது வரலாற்றறிவையும், வாதத்திறமையையும் கண்டு மகாசபையார் மனம் சொக்கிப் போயினர். சீர்திருத்தத்

---

1. தொன்றுதொட்டே குடியாட்சி முறையினைப் போற்றி வரும் தனவணிகர் சமூகத்தில் நடைபெறும் சமூகக் கூட்டங்கள் பலவகைப்படும். வகைக்கு வகை கூட்டங்கள் உள்ளூர்ப் பங்காளிகள் கூட்டங்கள், ஊர்க்கூட்டங்கள், கோவில்வாசல் கூட்டங்கள், மடத்துவாசல் கூட்டங்கள் - ஆகிய இத்தனைக்கும் மேலாக அமைவன தொண்ணூற்றாறூர்க் கூட்டங்கள்

திருமணம் காரணமாகத் தள்ளிவைக்கப்பட்ட குடும்பங்கள் மீண்டும் இணைய வழிபிறந்தது. பழைய வழக்கம் 1935 வரை நீடித்தாலும் முதல் புரட்சிக்கு வித்தூன்றியவர் கருமுத்து அழகப்பரே ஆவார்.

**சப்தகிரகயோகம் :**

செயல் திறமிக்க சகோதரர் ஒருவர், சீர்திருத்தச் செம்மலான சகோதரர் ஒருவர், துணிச்சல் மிக்க சகோதரர் ஒருவர், தொண்டுள்ளம் அமைந்த சகோதரியர் அறுவர் - இந்தச் சூழலில் பத்தாவது கடைக்குட்டியான தியாகராசர், 1893, சூன் 16இல் - விஜய வருடம் ஆனி 4, புனர்பூச நட்சத்திரம், மிதுன லக்கினத்தில் பிறந்தார். ராகு, கேது தவிர ஏனைய எல்லாக் கிரகங்களும் ஒரே லக்கினத்தில் அமைந்திருந்த ஒப்பற்ற ஜாதகம் இது. இதனை ‘‘ சப்தகிரக (7 கிரக) யோகம்’’ என்று ஜாதகம் பார்ப்போர் கணித்துச் சொன்னார்கள்.

தியாகராசர் பிறந்த நான்காம் நாளில், இவரது ஜாதகத்தைப் பார்த்தவர், ‘‘இவர் ஒன்று சாமியாராகப் போவார் அல்லது கோடீசுவரராக ஆவார்’’ என்றாராம். அபூர்வமாக அமைந்த இந்த ஜாதகத்தைப் பார்த்த புகழ்பெற்ற கணிதர் ஒருவர், ‘‘இப்படியொரு ஜாதகத்தை நான் என் 62 வயதுவரை கண்டதில்லை’’ [1] என்றாராம். இந்தப் பத்தாவது பிள்ளையின் வளர்ச்சிப் போக்கில் கோடீசுவர இயல்புகள் குடிகொள்ள ஆரம்பித்தன. தெய்வத் திருமகளே' தாலாட்டக் கைநீட்டும் செல்வக் குடும்பத்தைக் கட்டியாளவும், ‘கருமுத்து’ எனும் குலப் பெயரால் தன் பெயரை வளர்த்ததோடு, தன்முயற்சியால் ‘கருமுத்து’ எனும் பெயரை நூற்றாண்டுப் பெருமையுறச் செய்யவும் தம்பி தியாகராசன் வளரத் தொடங்கினான்.

---

1. நெற்குப்பை - கண்ணாட்டி ஐயர்

# இலங்கையும் இளமையும்

# 4

'திருவாக்கும் செய்கருமம்
கைகூட்டும், செஞ்சொல்
பெருவாக்கும் பீடும்
பெருக்கும், உருவாக்கும்
— கபிலதேவர்

## சீமான் வீட்டுச் செல்லப் பிள்ளை

பெரிய குடும்பத்தில் கடைசிப் பிள்ளையாகப் பிறப்பதில் இலாபமும் உண்டு. சங்கடமும் உண்டு. மூத்த பிள்ளைக ளெல்லாம் கடைக்குட்டியைப் பாசத்தோடு நடத்தினுல் அது இலாபம், எல்லோரும் சேர்ந்துகொண்டு எடுத்ததற் கெல்லாம் இந்தப் பிள்ளையை ஏவினுல் அது சங்கடம். இவ்வகையில் தியாகராசன் கொடுத்து வைத்திருந்தான். வயது வரவர மூத்த ச கோ த ர ர் க ள் நாகப்பட்டணம், கொழும்பு, மதுரை முதலிய இடங்களுக்குப் போவதும் வருவதுமாயிருந்தனர். தி ரு ம ண ம் செய்விக்கப்பெற்ற பெண்கள் பிறந்தகம் வருவதும் பெருமையோடு திரும்பு வதுமாயிருந்தனர். பல பெண்களுக்குப் பின் பி ற ந் த தி யா க் ர ா ச ன் செல்லப்பிள்ளைபோலக் கருங்குளத்தார் வீட்டில் வளர்ந்தான்.

வயதால் நலிந்துவந்த தந்தைக்குத் த ன் க டை சி ப் பையனின் எதிர்காலம் பற்றி ஏதோ ஒரு கவலை ஏற்பட்டு விட்டது. கொழும்பிலிருந்து ஊர் திரும்பிய தன் மூத்த பையன் அருணாசலத்தின் கைகளில் தியாகராசனை ஒப்பு வித்து ''இவனைக் கண்கலங்காமல் பார்த்துக் கொள். வேண்டியதை வாங்கிக்கொடு. நன்றாகப் படிக்கவை'' எனக்கேட்டுக் கொண்டார். தந்தையின் பாசமும் அருணாசல

அண்ணனின் நேசமும் தியாகராசனுக்குத் துணையாயின. அவன் ''இளவரசனைப்' போல எல்லோராலும் நடத்தப் பட்டான்.

## தொடக்கக்கல்வி :

அவனுடைய தொடக்கக் கல்வி தெக்கூரில், வெங்கட் ராமய்யரின் திண்ணைப் பள்ளிக்கூடத்தில் அக்கால மரபுப்படி ஆரம்பமாயிற்று. எண்சுவடிவரை படித்தான். மகர்நோன்புச் சமயத்தில் ''கிலுக்கி யெடுப்பு'' நடக்கும். மேலைச் சிவபுரியில் உள்ள தாய்மாமன் வீடு செல்வதும் கிலுக்கி குத்தித் திரும்புவதும் அவனுக்கு உற்சாகமளித்த சம்பவங்கள்.

தெக்கூரில் மூன்றாண்டுப் படிப்பு முடிந்தவுடன். மதுரை சேதுபதிப் பள்ளிக்கு அனுப்பப்பட்டான். தன் இரண்டாவது சகோதரர் மகன் நடராசனும் கீழ்வகுப்பில் தியாகராசனொடு படிக்கச் சேர்க்கப்பட்டான். மதுரையில் பெரிய விளக்குத்தூணருகில் இருந்த கடை வீட்டிலிருந்து இருவரும் குதிரை வண்டியில் பள்ளிக்கூடம் செல்வார்கள்.

''அப்போதே தியாகராசன் நன்றாகப் படிப்பான். எதையும் விரைவில் புரிந்து கொள்வான். எப்போதும் சுறு சுறுப்பாயிருப்பான். எந்தக் கெட்ட பழக்கமும் அவனிடம் இருந்ததில்லை'' என்று இன்றும் சொல்லி மகிழ்கிறார் திரு. நடராசன் செட்டியார். அப்போதே ஆங்கிலம் நன்றாகப் படிப்பாராம். கையெழுத்து முத்துமுத்தாக இருக்குமாம். மெதுவாக, ஆனால் அழகாக, தெளிவாக எழுதுவாராம். மீனாட்சி அம்மன் கோவிலுக்குப் போவதும் அங்குள்ள சிற்பங்களைப் பார்ப்பதும் தான் அக்காலத்தில் அவருக்குப் பொழுது போக்காயிருந்தனவாம்.

சேதுபதி உயர்பள்ளியில் மீனாட்சி பட்டணத்தில் பயில வந்த தியாகராசனின் பிஞ்சு மனத்தில் 'சேதுபதியும் மீனாட்சியும்' எப்படியோ அப்போதே இடம் பெற்று விட்டனர். பிற்காலத்தில் இராமநாதபுர சேதுபதியுடன் அவர் நேயநட்புப்பூண்டொழுகினார். மீனாட்சியம்மன் பெயரால் ஆலையினை நடத்தினார். மதுரைத் திருத்தலம் - தான்தந்த தொடக்கக் கல்விக்கு நிகரான தொண்டினைத் தியாகராசனிடம் எதிர்பார்த்திருந்தது.

சேதுபதி உயர்பள்ளியில் படித்தபோது தமிழவேள் பி. டி. ராசன் 1 எனப் பின்னாளில் 'நீதிக்கட்சித் தலைவராகப் பிரபலமான, பொன்னம்பல தியாகராசனும் உடன்பயின்றார். இந்த இரு தியாகராசர்களும் அரசியல்களத்தில் எதிரெதிர் அணிகளில் நின்றாலும், மதுரை நகரை மேம்படுத்துவதிலும், தமிழ்நலம் காப்பதிலும் தோளோடு தோள்நின்று சமகாலப் புகழ் பெருக்கினர்.

## கொழும்பு பயணம் :

ஒன்பதாம் வயதிலேயே தந்தையை இழந்துவிட்ட தியாக ராசனைக் கொழும்புக்குத் தரவழைத்துத் தங்கள் நேரடிப் பார்வையிலேயே படிக்கவைக்கச் சகோதரர்கள் கருதினர். 'KRMTT FIRM' எனும் கருமுத்து விலாசக் கடையை நோக்கித் தியாகராசன், தன்பங்காளி நடராசனுடன் தூத்துக் குடி வழியாக நீராவிப் படகில் ஏறி இலங்கைக்குப் புறப்பட்டான்.

---

1. உத்தமபாளையம் தொண்டைமண்டல முதன்மை வேளாளர் குலமுதல்வரான தியாகராச பொன்னம்பல முதலியாரின் மகன் தியாகராசன் - பிறப்பு 1892. இவர் இங்கிலாந்தில் பார்அட்லா பட்டம் பெற்று (1919) மதுரையில் வழக்கறிஞர் பணிபுரிந்தார்

''மலர் மொட்டு லங்கையென்னும் மகளைப் பெற்றாள்'' எனக் கவிஞன் இலங்கைக்கும் தமிழகத்துக்கும் உறவு சுட்டிப் பாடினான்.[1] ''தென்னிந்தியத் திருமுகத்தின் தாடையி லிருந்து சிதறி விழுந்த சிறு முத்துப் போல''[2], 70 மைல் களுக்கு அப்பால் இந்த அழகுத்தீவு அமைந்துள்ளது. அமைப்புக்காலந்தொட்டே இந்தியாவுடன் ஒரு நிலமாயிருந்த இப்பகுதி, கடல் பிரளயங்களால் காலப்போக்கில் துண்டிக்கப் பட்டுப்போயிற்று. என்றாலும் கூட இந்தியத் தாய்நாட்டின் ஒரு மாவட்டம் போலத் தொழிலாலும் பண்பாட்டு உறவாலும் அது பிணிக்கப்பட்டே இருந்தது. எழுநூறு ஆண்டுகட்கு முன்னர் உலகம் சுற்றி வந்த மார்கோபோலோ ''உலகில் உள்ள தீவுகளையெல்லாம் விஞ்சி நிற்கும் எழில் தீவு இலங்கை''[3] எனப்பாராட்டியிருந்தது, மேலை நாட்டவரைக் கவர்ந்திழுத்தது. இலங்கைத் தீவு அவர்களின் ஆதிக்க வேட்டைக் காடாயிற்று. இறுதியில் ஆங்கிலேயர் சாம் ராஜ்யப் பிடிக்குள் இலங்கையும் வந்து சேர்ந்தது. 'கொழும்பு' எனும் பெயர் புதுநாடுகளைக் கண்டுபிடித்த 'கிறிஸ்தோபர் கொலம்பஸ்' என்பவர் பெயரால் வந்தது எனச் சொல்லும் அளவுக்கு வரலாற்றைத் திரித்து எழுதினர். ஆனால் அரபுநாட்டு வணிகரான 'காளாம்பு' என்பவரின் பெயரால் அதற்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்பே 'கொழும்பு' பெயர் பெற்றுவிட்டது என்பதைப் பூசி மறைத்துவிட்டனர்.

270 மைல் நீளமும் 100 மைல் அகலமும் கொண்ட மைந்த இலங்கைத்தீவின் இயற்கை வளங்கள் எண்ணிறந்

---

1, தமிழ்க்குமரிப்பாடல்கள் - சதுசுயோகி
2. "A Tear dripping from the chin of India" - The Readers' Digest, July, 1957
3. "This Is better than any other island in the world" Marco Polo

தவை. காடடர்ந்த மலைப்பகுதிகளில் தேயிலைபும் ரப்பரும் பயிரிட ஆங்கிலேயர் ஆக்கம் தந்த நாள் முதல் அங்கே பாட்டாளிகளுக்குத் தேவை மிகுந்தது. ஏற்கெனவே அங்கு சுதேசிகளாக வாழ்ந்த சிங்களர்களைக் காட்டிலும்'' உழைப்பாற்றலும் நம்பிக்கையுமுடையவர்களாகக் (indus-trious, dependable Tamils'') கருதப்பட்ட தமிழர்கள், கூலித் தொழிலாளர்களாக இங்கே கொண்டு செல்லப் பட்டனர்.

## தமிழர்களும் தனவணிகர்களும் :

வணிகத்திற்கும் வளர்தொழிலுக்கும் துணை புரிய நாளடைவில் தனவணிகர்களும் இலங்கை வந்து சேரத் தொடங்கினர். 300 ஆண்டுகளாக இலங்கையின் வணிகத் திற்கும் புதுவாழ்வுக்கும் அவர்கள் பெரும் தொகையினை முதலீடு செய்தனர். ''இலங்கையை எழிலுறச் செய் தவர்கள் தமிழ்நாட்டுத் தொழிலாளர்கள், அதற்குப் பொருளுதவி புரிந்தவர்கள் இந்திய முதலாளிமார்கள்[1]. இதனை இலங்கைக்கு வருகைந்தபோது, பண்டித ஜவஹர்லால் நேருஜியே வியந்துபாராட்டினார். அவர் சொன்னார். ''நண்பர்களே, செட்டியார் சமூகத்தின் தொழில் ஆர்வம் எனக்கு நன்கு தெரிந்திருக்கிறது. இந்நாட்டின் (இலங்கையின்) அபிவிருத்திக்கு நீங்கள் பேருதவி செய்திருப்பதை நானறிவேன். இலங்கையில் உங்கள் மரபினர் 10 கோடி ரூபாய்க்கு மேல் முடக்கியிருப் பதாக நீங்கள் சொல்லியிருக்கிறீர்கள்.''[2] இலங்கைத்தீவு முழுவதிலும் நகரத்தார்க்குச் சொந்தமாக 750 கடைகள் இருந்தனவென்றும், கொழும்பில் மட்டும் 350 கடைகள்

1. இலங்கை இந்தியத் தொடர்பு * வானவசனி உரை' 1937
2. 19—7—1939 இல் கொழும்பில் நாட்டுக்கோட்டை நகரத்தார் சங்க வரவேற்பில் பேசியது

அமைந்துள்ளன வென்றும். இலங்கைக்கு இந்தியாவி லிருந்து நாள்தோறும் வரும் பயணிகளில் 25 சதவீதத்திற்கு மேற்பட்டவர்கள் நகாத்தார்களும் அவர்களைச் சார்ந் தோர்களும் என்றும் கருமுத்து தியாகராாசர் ஒரு விசாரணைக் கடிதத்தில் விளக்கியுள்ளார். [1]

அங்கே அறப்பணியினையும் அருட் தொண்டினையும் அவர்கள் மறக்கவில்லை. கொழும்பில் 'Sea Street' எனும் அகல் நெடுந்தெருவைச்' "செட்டியார் தெரு" எனச் செல்லமாக அழைக்கச் செய்யும் அளவுக்குச் செல் வாக்குப் பெற்றிருந்தனர். கொழும்பின் துணை மேயராக ஒரு செட்டியார் [2] தேர்ந்தெடுக்கப்படும் அளவுக்குக் பெருமையுற்றிருந்தனர். குறிஞ்சிக் கடவுளான முருகனிடத் திலே ஈடுபாடுடைய இவர்கள், கதிர்காமக்கடவுளான கதிரேசர்க்குப் பல ஆலயங்களை அங்கே கட்டியெழுப் பினர். கதிர்காமத் தலத்தில் ஆண்டு தோறும் ஆடிவேல் விழாவைச் சன்மார்க்கத் திருவிழாவாக நடத்தி வந்தனர்.

## பிறந்தமண்ணும் புகுந்த நிலமும்:

கருமுத்து நிறுவனமும் இத்திருப்பணிகளில் முன்னிடம் பெற்றுத் திகழ்ந்த காலம் அது. இந்தத் திருப்பணிக் கேற்ற பயிற்சி பெறுதற்குத் தம்பி தியாகராசன். அண்ணனால் அழைக்கப்பட்டுப் புறப்பட்டு வந்து கொண்டி ருந்தான். நீராவிப்படகு இலங்கையை நெருங்கநெருங்க தியாகராசனுக்கு நிலை கொள்ளவில்லை. படகில் வந்த பிறரெல்லாம், புதிய நிலமான இலங்கையின் வனப்பையே

---

1. Karumuttu Thiagaraja's Letter to his Excellency The Right Hon'ble The Lord Pentland, Governor of Madras 15—11—1916.
2. திருவாளர் எம். சுப்பையா செட்டியார்

வைத்நகன் வாங்காமல் பார்த்துக் கொண்டிருந்தார்கள். ஆனால் தியாகராசன் படகின் எதிர்புறத்தில் நின்றபடி, இந்தியக் கரையினையே ஏக்கத்துடன் பார்த்துக் கொண்டிருந்தான் ''பிறந்த மண்ணைவிட்டு வெளியே சென்று பிழைக்க எல்லோரும் போய்விட்டால், அன்னைநாட்டுக்கு அணி சேர்ப்பது யார்?'' என்ற கேள்விக்குறி அவன் மனதில் படர்ந்தது. கூலித் தொழிலாளர்களாகப் பிழைப்புத் தேடி வரும் மக்கள், அடிமைகள் போல, விலங்குகள் போல அந்தப்படகிலேயே அச்சுறுத்தி நடத்தப்பெறும் 'கண்காணித்தனம்' அவன் பிஞ்சு நெஞ்சில் தீர்க்கப்பட வேண்டிய ஒரு பிரச்சினைபோலத் படிந்தது.

## ஆங்கிலமும் அருந்தமிழும் :

கொழும்பில் வந்திறங்கிய தியாகராசனுக்கு எல்லாம் பழக்கமான இடம் போலவே தோன்றியது. அப்பச்சியின் அரிய உழைப்பால் உருவாகி அண்ணன்மாரால் நடத்தப் படும் நிறுவனமும், அம்மான்வழி ஐயா வீட்டு நிறுவனமும் அவருக்கு அறிமுகச் சூழலை அமைத்துத் தந்தன. தன் தந்தையாரிடம் வாக்களித்தபடி தம்பி தியாகராசனை நன்கு படிக்கவைப்பதில் அருணாசலம் சிரத்தை கொண்டார். முதலில் இலங்கையில் ("Central College") எனப் புகழ் பெற்று, கொழும்பு முகத்துவாரத்தில் அமைந்திருந்த புனித தாமஸ் பள்ளியில் ஆங்கிலக் கல்வி பயில அவரைச் சேர்த்தார். ஒரு சர்வதேச நகரம் போல அப்போது கருதப்பட்ட கொழும்பில், ஆங்கிலப் பண்பாட்டுக் கோலங்கள் மெருகு குறையாமல் வந்திறங்கிய காலம் அது. எனவே ஆங்கில மொழிப் பயிற்சியை ஆங்கிலச் சிறுவர்கள் பயில்வது போலவே அப்பொழுது கற்பித்து வந்தார்கள். தியாகராசனுக்கு அங்கே ஆங்கிலத்தில் சிறந்த அடிப்படை

கிட்டியது. 1910 வரை புனிததாமஸ் ஆங்கிலப் பள்ளியில் (Upper IV) வகுப்பு வரை படித்தான். கொழும்பில் குடியேறி வாழ்ந்த தமிழர் தலைவரான சர். பொன்னம்பலம் குடும்பத்தைச் சேர்ந்த அருணாசலத்துடன் (தன் அண்ணன் பெயரும் அருணாசலம் தான்) சேர்ந்து ஈழத்துச் சித்தாந்தப் புலவர், சிற்கைலாச பிள்ளையிடம் தமிழும் சித்தாந்தப் பாடமும் பயின்றார். பிற்காலத்தில் தியாக ராசரிடம் விளங்கிய சித்தாந்தப் புலமைக்கெல்லாம், இந்தப் புலவர் பெருந்தகையிடம் பயின்றமையே காரணம் ஆகும்.

## நல்ல இடம், நாடாண்டார் வீடு :

அக்கால வழக்கப்படி, அவருக்கு 1910இல் திருமணம் நிகழ்ந்தது. ஆ. தெக்கூரிலேயே, வயிரவன் கோவிற் பிரிவைச் சேர்ந்த கா. மு. முத்துக்கருப்பன் செட்டியார் புதல்வி விசாலாட்சியை மணந்தார். விசாலாட்சி கொழும்பு வாணிகமுடைய பெரிய குடும்பத்தில் பிறந்த பெருந்தகவும், எளிமைப் பண்பும் உடையவர் ஆகத் திகழ்ந்தார்.

> ‘‘ நல்ல இடம் பார்த்து
> நாடாண்டார் வீடு பார்த்து
> விளையும் நிலம் பார்த்து
> விதைபாவி வைத்தார்கள் ’’

எனும் செட்டிநாட்டுத் தாலாட்டுப் பாடலைப் போல, நல்ல இடம் பார்த்து, நாடாண்டார் வீடு பார்த்து, விளையும் நிலம் பார்த்து விசாலாட்சி வந்தமைந்தார் ; அன்புப் பேரொளியாக வந்த அவர் புகுந்த வீட்டின் பொற்பமைந்த விளக்கானார்.

‘‘கருமுத்து குடும்பச் சிறப்பிற்கு அடித்தளமாக அமைந்து தொழிலிலும் வாணிபத்திலும் பாரதத்தில் ஒரு தனி இடம் பெறப் போகும் அண்ணலை, சீரும் சிறப்பும்

பெற்ற குடும்பத்திலே பிறந்த அன்னை கணவராகப் பெற்றது, தமிழும் இனிமையும் இணைந்தது போலும் என்று மக்கள் கூறும் வண்ணம் இருந்தது''. 1

இதில் வேடிக்கை என்னவென்றால் தியாகராசர்க்குப் பெண் கொடுக்கவே முதலில் சிலர் தயங்கினார்களாம். இவருடைய சகோதரர் இராமனாதன் செட்டியார் லண்டனுக்கே போய்விட்டது போல, ஆங்கிலம் பயின்ற இவரும் லண்டனுக்கே போய்விடுவாரோ எனும் அச்சமே காரணம்.

திருமணமான இடைக்காலத்தேயும் தியாகராசர் கல்வியை மறந்துவிடவில்லை. மதுரை புனிதமரியன்னை உயர்பள்ளித் தலைமை ஆசிரியரான சுவாமி சைமன் எனும் பிரெஞ்சுநாட்டுப் பாதிரியாரிடம் ஆங்கிலக் கல்வியைத் தனிப் படிப்பாகத் தொடர்ந்து பயின்றார். இப்பாதிரிப் பெரு மகனார் தொண்ணூறு ஆண்டுகளைக் கடந்த தொண்டுக் கிழவராயிருந்த போதும், தியாகராசர் தன் ஆசிரியரை மறவாமல் கொடைக்கானல் அருகேயுள்ள செண்பகனூர்க் கல்லூரி சென்று அவரிடம் அடிக்கடி நலம் விசாரித்து வருவார். எத்தனை அலுவல் இருப்பினும் கொடைக்கானல் போகையில் தன் ஆசிரியப் பெருமகனாரைச் சந்திக்க ஒரு போதும் மறவார்.

## எழுத்தாளராகிறார்:

திருமணமாகித் 'தனிப் புள்ளியாகி' விட்ட தியாகராசனை இலங்கை அழைத்தது. 1912 இல் 'KR. M. T. T.' அருணாசலம் செட்டியார் பிரதர்ஸ்

1. தி. மாணிக்கவாசகம் - கட்டுரை - விசாலாட்சி கலா சாலை வெள்ளிவிழா மலர்

நிறுவனத்தில் சேர்ந்தார். இவர் நிறுவனத்தில் ஒரு பாகஸ்தர் ஆகிவிட்டாலும் பொறுப்புகள் எல்லாம் பெரியவ ரிடமே இருந்ததால், தனக்குப் பிடித்த பிற துறைகளில் அவர் நாட்டம் செலுத்த முடிந்தது.

அவ்வாறு அவருக்கு பிடித்தமான ஒரு துறை — பத்திரிக்கைத் தொழில். கொழும்பில் 'ஆர்மாண்டி கோஷிலா' என்பவரை ஆசிரியராகக் கொண்டமைந்த 'மார்னிங் லீடர்' எனும் ஆங்கிலப் பத்திரிக்கையில் 1914 இல் செய்தியாள ராகவும் துணை ஆசிரியராகவும் சேர்ந்தார்.

''பிரச்சாரமும் ஆரவாரமும் பெருகிவரும் இப்புதிய யுகத்தில் பத்திரிக்கைத் தொழிலுக்கு மிகுந்த சிறப்பிடம் உண்டு. தேசீய பிரச்சனைகளுக்குத் தீர்வுகாணும் வகையில் திறமையுடனும் விசுவாசத்துடனும் உழைப்பவர்களைக் கொண்டு அது நடத்தப்படவேண்டும்''[1] எனும் இலட்சிய முடைய ஆங்கில இதழாசிரியரிடம் தியாகராசர் பத்திரிக்கை தொழில் பழக வாய்ப்புப் பெற்றது ஒரு பேறே ஆகும்.

## இலட்சியப் போர் செய்கிறார்:

மார்னிங் லீடர் பத்திரிக்கை ஆசிரியர், லாபநோக்க மின்றி நம்பகமான செய்திகளையும் நடுநிலை தவறாத கருத்துக்களையும் பரப்பவே பத்திரிக்கையை நடத்தியது தியாகராசர்க்குப் பிடித்திருந்தது. இலங்கைத் தோட்டங் களில் கூலிகள் நடத்தப்படும் கொடுமைகள் பற்றிய

---

1. Journalism is a great profession of constantly increasing importance in the modern world of propaganda and loud speaking. That it should be efficiently manned by men of ability and sincerety who take their work seriously is the highest national importance,"

செய்திகள் அந்தப் பத்திரிக்கையின் பத்திகளில் செய்தித் துணுக்குகளாக வரவர தியாகராசனின் சிந்தையும் தொழிலாளர் நலனில் தோய்வுறத் தொடங்கியது. இந்த 'முதலாளி' அப்போதே தொழிலாளர் நலங்காக்கும் தொண்டனாகி விட்டான். அங்கேயே தோட்டத்தொழிலாளர் நலக்கழகத்தை நிறுவி,[1] அக்கிரமம் செய்த தோட்ட முதலாளிகள் மீதும் அக்கறையற்ற அரசு மீதும் கண்டனப் போர் தொடுத்தான். தியாகராசன் இந்தியத் தொழிலாளர் நலனுக்காக இலங்கையில் நடத்திய போராட்டமே ஒரு வீரகாவியம் ஆகும். காந்தியடிகள் தென்னாப்பிரிக்காவில் நடத்திய உரிமைப் போரின் எதிரொலி போலவே அந்தக் காவியக் கதையும் அமைந்திருந்தது. தியாகராசனின் இலட்சியப் பிடிப்பிற்கும் இடையரு முயற்சிக்கும், அஞ்சாப் பண்பிற்கும் ஆக்கத்திறத்திற்கும் கட்டியங்கூறுவது போல அந்த எழுத்துப் போர் நடந்தது.

---

1. மறைந்த பி. அருணாசலத்துடன் சேர்ந்து தொழிலாளர் நலக் கழகத்தை நிறுவி, ஏழு ஆண்டுகள் காரியதரிசியாக இருந்தார்.

'' கல்வியைப் போல் அறிவும், அறிவினைப் போலக்
கருணையும், அக்கருணைபோலப்
பல்விதவூக்கங்கள் செயும் திறனுமொறு
நிகரின்றிப் படைத்த வீரன்
வில்விறலாற் போற் செய்தல் பயனிலதாம்
எனவதனைவெறுத்தே உண்மைச்
சொல்விறலாற் போர் செய்வோன் பிறர்க்கன்றித்
தனக்குழையாத் துறவியாவோன் ''

- தாதாபாய் நவுரோஜி பற்றிப் பாரதியார்.

# போரும் புகழும்

# 5

## ஒப்பந்தக் கூலிகள் :

இலங்கையில் தேயிலை, காப்பி, ரப்பர்த் தோட்டங்களை ஆங்கிலேயர்கள் உருவாக்கிய பின்னர் அவற்றில் பாடுபட்டு உழைப்பதற்குத் தென்னிந்தியாவிலிருந்து ஆட்களைக் கூட்டிச் செல்ல ஆரம்பித்தனர். 1871 இலிருந்து ஆண்டுதோறும் 70000 முதல் 80000 பேர்வரை ஒப்பந்தக் கூலிகளாகக் 'கங்காணிகள்' மூலம் இவர்கள் கூட்டிச் செல்லப்படுவதாகச், சென்னை ஆட்சிக்குழுவில் 1915 இல் தெரிவிக்கப்பட்டது.[1] 1915இல் இலங்கையில் 10 லட்சத்திற்கு மேற்பட்ட இந்தியர்கள் இருந்தனர். இவர்களில் பாதிக்கு மேற் பட்டவர்கள் அங்கே நூற்றாண்டுகளாக வாழ்ந்திருந்தனர். எஞ்சியோர் 50 ஆண்டுகளில் வந்தவர்கள். இவர்களது வாரிசுகள் மட்டும் 2 லட்சம்பேர் இருந்தனர் என்று 'இந்தியன் எமிக்ரண்ட்' பத்திரிக்கை விவரம் தந்திருந்தது.

---

1 Ceylon Quarantine Regulations-The Madras Legislative Council - Quoted in the Mail.

இவ்வாறு தோட்டத் தொழிலுக்குப் போனவர்கள், சிலோன் சென்று சேருவதற்குள் பயணவழியிலேயே அடிமைகள் போல அடக்கப்பட்டனர். அங்கே போய்ச் சேர்ந்ததும் நாயினும் கீழாக நடத்தப்பட்டனர். இந்த இரு நிலைகளிலும் இந்தியர்கெதிராக இழைக்கப்பட்ட இன ஒதுக்கல் கொள்கைக் கெதிராக தியாகராாசர். இளமை யிலேயே, தனியொருவராக நின்று போரிட முற்பட்டார்.

## ஓயாத போராட்டம்:

ஒரு பத்திரிக்கையாளனுக்கு அழுத்தமான சமூக உணர்வு இருத்தல் வெண்டும். தான் சந்திக்கும் சமூக நிலைமைகள் நடுநிலையில் நின்று சீர்தூக்கிப் பார்க்கவும், நல்லவற்றைப் பாராட்டவும் தீயவற்றைக் கண்டிக்கவும் அவனுக்குத் துணிச்சல் வேண்டும். உண்மையை நேரடியாகக் கண் டறியவும் அதை அவ்வாறே உலகோர்க்கு உணர்த்தவும் அவன் அயராது உழைக்கவேண்டும்.

தியாகராாசர், பத்திரிக்கைத் தொழில் பழகச் சேர்ந்த ''மார்னிங் லீடர்'' இதழின் ஆசிரியர் பத்திரிக்கை உரிமையை மதிப்பவர். அடிப்படை மனித உரிமைகள் பாதிக்கப் பட்டபோதெல்லாம் ஆங்கில அரசையும் எதிர்நின்று தாக்கத் தயங்காதவர். பத்திரிக்கையை நடத்தும் ஆசிரியனின் மனப்பண்பே, நல்ல தீய விளைவுகளுக்குக் காரணம் என்பதை அறிந்தவர். 1 தியாகராாசர்க்கு இந்தப் பின்னணி நல்ல வலுவை, நலம் தரும் வாய்ப்பை வழங்கியது. அங்கே இந்தியர்களுக்கு எதிராகக் கட்டவிழ்த்துவிடப்பட்ட கயமை களுக்கு எதிராகப் பேனா முனையை ஏந்தினார்.

---

1 The Press is good or evil according to the character of those who direct it" - BRYANT

அவருடைய கண்டனக் கடிதங்களும், கவன ஈர்ப்புக் கட்டுரைகளும் பிரபலமான ஆங்கில இதழ்களில் வரத் தொடங்கின. The Hindu, The Madras Mail, Ceylon Morning Leader, Commonweal, Ceylon Observer, The Indian Emigrant, Madras Times, The Peoples' Magazine, The Ceylonese, The Indian Patriot, The Ceylon Independent'' ஆகிய இதழ்களில் அவர் எழுதிய கடிதங்களும், அவருடைய உரிமைப்போர் பற்றிய கருத்துரைகளும் 1914 முதல் 1917 வரை தொடர்ந்து வெளிவந்தன. இக்கடிதக் கட்டுரைகள் எல்லாம், பிற்காலத்தில் தியாகராசராலேயே தொகுக்கப்பெற்று ''Emigrant Difficulties at Mandapam or Ceylon Quarantine Regulation Difficulties'' எனும் பெயரில் பெரியதொரு கையேடாக, உரிமைச் சாசனமாக வெளியிடப் பட்டுள்ளன. இதனை இந்தியத் தொழில் முனைவரும் தேச பக்தருமான தாதாபாய் நவுரோஜிக்குத்[1] தியாகராசன் உரிமைப் படையல் ஆக்கித் தன் அன்புணர்வைப் புலப்படுத்தி யுள்ளார். ''Indian Emigrant on Ceylon Estates'' எனும்

---

1. தாதாபாய் நவுரோஜி (1825 - 1916) இந்திய தேசியக் காங்கிரஸ் இயக்கத்தை நிறுவிய பெரியார்களில் ஒருவரான இவர் பம்பாயில் வணிகக்குடும்பத்தில் பிறந்தார். இலண்டனில் இந்திய வாணிகக் கூட்டொன்றில் பங்கு தாரராகச் சேரப் போனார். அந்த நிறுவனம் மது வகைகளை விற்றதால் அதற்கு உடன்படமறுத்துப் பெரும் நட்டத்திற்கு உள்ளானார். அங்கிருந்த இந்தியர்களின் துன்பங்களைக் கண்டு பொறுக்காமல் பத்திரிக்கைகளில் எழுதியும் கூட்டங் களில் பேசியும் நலன்காக்கப் போர் தொடுத்தார். பிரிட்டிஷ் நாடாளுமன்றத் தேர்தலில் போட்டியிட்டு வெற்றிபெற்ற முதல் இந்தியராகப் புகழ்பெற்றார். ''இந்தியாவின் குரல்'' என்ற பத்திரிகைக்யை நடத்தினார். ''பிச்சை கேட்கவில்லை, உரிமையைக் கேட்கிறோம்'' எனச் சுதந்திர முழக்கம் செய்தார். 1916இல் காலமானார். தியாகராசனின் நெஞ்சம் கவர்ந்த தியாகத் தலைவர்களில் தாதாபாய் நவுரோஜி முதன்மையானவர்.

தலைப்பில மூன்று விளக்க ஏடுகளை தொடர்ந்தெழுதி அங்கே காபித் தோட்டத்திலே கால்களும் கைகளும் சோர்ந்து ஆவி துடித்து நின்ற அபலைகளைப் பற்றிப் படம் பிடித்துக் காட்டினார். தன் சொந்தச் செலவிலேயே இவற்றை அச்சிட்டு அதிகாரிகளுக்கும் அரசியல் தலைவர்களுக்கும் அனுப்புவித்துத் தேசமெங்கும் சிந்தனைப் பொறி பறக்க வைத்தார். அவருக்குத் துணையாக நடுநிலை பிறழாத ஆங்கிலப் பிரமுகர்களாள ஜே. எம். ஹென்ஸ்மென் முதலியோர், ஈழத்தில் இருந்த பொன்னம்பலம்பிள்ளை, டபிள்யூ. எஸ் நாயுடு ஆகியோர் அணி திரண்டனர்.

### இலங்கைக்கு இரு முகாம்கள் :

கடல்வழியாக இலங்கைக்குப் போக அப்போது இரு வழிகள் இருந்தன. தூத்துக்குடித் துறைமுக வழி ஒன்று, தனுஷ்கோடி தலைமன்னார் பாதை மற்றொன்று. தூத்துக் குடியிலிருந்து நீராவிப் படகில் 12 மணி நேரம் பயணம் செய்ய வேண்டும். வாரத்தில் செவ்வாய், சனிக்கிழமைகளில் மட்டுமே 'போட்' வசதி உண்டு. இதன் வழியாகச் செல்லும் பயணிகளுக்குத் தட்டப்பாறை எனுமிடத்தில் ஒரு முகாம் இருந்தது. தனுஷ்கோடியிலிருந்து மன்னார் ஜலசந்தி வழியாகச் சில மணி நேரங்களில் சேர்ந்துவிடலாம். இது தினமும் செல்லக்கூடிய வசதியான வழி. இவ்வழியாகச் செல்லும் பயணிகளுக்கு மண்டபத்தில் ஒரு முகாம் புதிதாக அமைக்கப்பட்டது. இலங்கைக்கு திருட்டுத்தனமாாக, வந்து குடியேறுவோரைத் தடுக்கவும், அம்மை, பிளேக் முதலிய தொத்து நோய்களையும் அவர்கள் அங்கே குடியேற்றிவிடாமல் தவிர்க்கவும், தட்டப்பாறை, மண்டபம் முகாம்களில் கடுமையான நோய்த்தடுப்பு விதிகளை அரசாங்கத்தார் பின்பற்றினர். அதிலும் குறிப்பாக, தமிழ்நாட்டிலிருந்து வரும் கூலிகளை அவர்கள் ஈவிரக்க மின்றி நடத்தினர்.

ரயிலிலும் 'போட்'டிலும் மூன்று வகுப்புக்கள் உண்டு. முதல் வகுப்பில் வெள்ளைக்காரர்களும் அதிகாரிகளும் தான் பயணம் செய்யலாம். இரண்டாம் வகுப்பில் 'சுதேசித்' துரைகளும் வசதியுடையோரும் போகலாம். மூன்றாம் வகுப்பில் பிறரெல்லாம் 'மிருகங்கள்' போல அடைக்கப் படலாம். முதல் வகுப்புக் கட்டணம் 21 ரூபாய். இரண் டாம் வகுப்புக் கட்டணம் 10-50. முதலிரண்டாம் வகுப்பினர்க் கெல்லாம் தனிச் சலுகைகள் உண்டு. மூன்றாம் வகுப்பி னர்க்கு எந்தச் சலுகையும் இல்லை. இன்னலும் துன்பமுமே உண்டு. எப்படியாவது போய்ச் சேர்ந்தால் சரி என அவர்களும் பொறுத்துக் கொண்டார்கள்.

இலங்கை செல்லும் பயணிகள் மண்டபம் வந்து சேர்ந்த வுடன் அங்குள்ள தடுப்புக்காவல் முகாமில் இறங்கிவிட வேண்டும். அங்கு 7 நாட்களுக்கு நோய்த் தடுப்புக் கண்காணிப்பில் இருக்கவேண்டும். ரயிலைவிட்டு இறங்கி யவுடன், அவர்கள் தம் உடைகள் அனைத்தையும் களைந்து தந்துவிடவேண்டும். அங்கேயே அரசாங்கத்தால் விற்கப்படும், 'ஏழனாக் கோவணத்தை' வாங்கி அத்தனை பேருக்கும் முன்னால் ஆண்கள் அசிங்கமின்றிக் கட்டிக் கொள்ளவேண்டும். பெண்கள் கதையும் இப்படித்தான். கூலிப் பெண்கள் தானே! எப்படியிருந்தால் என்ன? உடைகளைக் களைந்துதர என்று மறைக்கப்பட்ட ஒதுக்கிட வசதி கூடக் கிடையாது. களைந்து வாங்கப்பட்ட துணிகளும் பொருள்களும் கிருமி நாசினிச் சூட்டறையில் வைத்து (fumigation) எடுக்கப்படும். அம்மை, பிளேக் நோய்க் கிருமிகள் தொற்றிவராமல் இவ்வாறு தடுத்தவுடன் பயணிகளிடமே அவை திருப்பித்தரப்படும். இந்தப் பயணி களுடன், பிறர் வந்து சேர்ந்துவிடாமல் தடுக்கவும்,

நோய்த் தடுப்புற்றவர்கள் என அடையாளம் காணவும், அவர்கள் நெஞ்சில், சேங்கொட்டையால் சூடுபோடுவார்கள். ஆரம்பத்தில் மையால் குத்தப்பட்ட இந்த அடையாள முறையினைத் தமிழர்கள் தன்மான உரிமை உணர்வுடன் அப்போதேஎதிர்க்காமல்விட்டமையால், ஆங்கிலஏகாதிபத்திய அதிகாரிகளுக்கு அது இளக்காரமாகிவிட்டது. இவ்வாறு சேங்கொட்டையால் போடும் சூடு, தோலில் பட்டதும் தீயாக எரியும்; பல ஆண்டுகளுக்கு மறையாத தழும்புபோலச் சுவடு பட்டுவிடும். பரம்பரைக் காலத்துக்குக் கூலிகள் எனப் பறை சாற்றுவது போல இந்த அடிமை அடையாளத்தைக் கையாண்டார்கள்.

## சூடுபோடும் வழக்கம் :

ஆடுமாடு போலச் சூடு போட்டனுப்பும் இந்தக் கொடுமையைக் கண்டு தியாகராசர் கொதித்தெழுந்தார். ''இது வெறும் அடையாளம், ஐந்தாறு நாளில் மறைந்துவிடும்'' என்றெல்லாம் இலங்கை அதிகாரிகள் மழுப்பிய போது, ஆண்டாண்டுகளாகச் சூட்டுத் தழும்பு மறையாதிருந்த நபர்களைத் தேடிப்பிடித்து அதிகாரிகள் முன்னர்க் கொணர்ந்து அம்பலப் படுத்தினார். அந்தக் கொடுஞ்செயல், தியாகராசரின் அயராப் போரால் நிறுத்தப் பட்டது.

இந்தத் தடுப்புக் காவல் முகாமில் வைக்கப்படும் ஏழு நாட்களும் பயணிகள் நரகத்தையே அனுபவித்தார்கள். 1 சுமார் 1000 பேர் வரை தங்குதற்காக முதலில் நிறுவப் பட்ட இம்முகாம்களில் ஒரு நாளைக்கு 3000 முதல் 4000

---

1. A week in Quarantine Camp is necessarily very much like a week in prison, but the authorities should see to it that the seven days imprisonment is not made seven days suffering". Quoted in the Madras Times

தோட்டக் கூலிகள் வந்து சேரத் தொடங்கியதால் நிலைமை அருவருக்கத் தக்கதாகிவிட்டது. அங்கே கூலிகளுக்காக 17 தகரக் கொட்டகைகளும் பயணிகளுக்காக 8 கொட்டகை களும் போடப்பட்டன. 100 / 25 அளவுள்ள சுற்றடைப் பில்லாத இக்கொட்டடிகளில் 160 பேர்தான் தங்கமுடியும். ஆனால் எத்தனைபேர் வந்தாலும் இவற்றில் தான் போடப்பட்டனர். கூலிகளும் வேறு காரியங்களுக்காகச் செல்லும் பயணிகளும் 'ஒரு மாதிரியாகவே' நடத்தப் பட்டார்கள். தூத்துக்குடியிலோ மண்டபத்திலோ ஒரு ஆங்கிலேயரை நோய்த் தடுப்புப் பரிசீலனைக்காக நிறுத்தி வைத்ததே இல்லை. ஆங்கிலேயர் மூலமாக எந்தக் கிருமியும் தொற்றிக் கொண்டு இலங்கைக்கு வந்துவிடாதாம். தென்னாப்பிரிக்காவில் தேசபிதா காந்தியடிகளையே முதல் வகுப்பில் பயணம் செய்யவிடாத ஆதிபத்திய அரசின் கொள்கை இதைவிட வேறு எப்படி இருக்கும்? அன்று முதல் காந்தியடிகள் மூன்றாம் வகுப்பில் மட்டுமே பயணம் செய்வதைப் பெருமையாகவும் அடிமைத்தன அவமானத்தை எதிர்த்து நடத்தும் போர் முறையாகவும் கையாண்டார் அல்லவா?

## ஒவ்வொரு தடவையும் ஊசி:

பயணிகள் முகாமில் வைக்கப்பட்ட நாட்களில் அடிக்கடி காலரா, அம்மைத்தடுப்பு ஊசிகள் குத்தப்பட்டார்கள். ஒரு மாதத்தில் எத்தனை தடவை இலங்கை போய்த் திரும்பி னாலும் மண்டபத்தைத் தாண்டும் ஒவ்வொரு முறையும் இந்த ஊசிக்குத்து நடைபெறும். தென்னிந்தியாவில் பல ஆண்டுகளாக பிளேக் முதலிய கொடிய நோய்கள் ஏற்பட வில்லை என மருத்துவ அறிக்கை இருந்தும் கூட இந்தப் பாடு. மருத்துவ முறைக் கெதிரான இந்தத் தொடர்

ஊசிக்குத்தை எதிர்த்தும் தியாகராசா போர் தொடுத்தார். பல மருத்துவச் சான்றுகளை எடுத்தனுப்பி இலங்கை அரசைத்தலை குனிய வைத்தார்.

முகாமில் உணவளிப்பது, ஸ்பென்சர் கம்பெனி எனும் ஆங்கில நிர்வாகக் கம்பெனியின் முழு ஆதீனத்தில் விடப் பட்டிருந்தது. ஒரு வேளைச் சாப்பாட்டிற்கு 6 அணு, 4 அணு, 2 1/2 அணுச் சாப்பாடு என மூன்று பிரிவுகள் இருந்தாலும் அதை வாயில் வைக்கமுடியாத வகையில் சமைத்துக் கொட்டுவார்கள். அப்போதெல்லாம் மிகச்சிறந்த தென்னிந்திய ஒட்டலில், முதல் தரச் சாப்பாட்டிற்கே 4 அணாத்தான். மண்டபம் அருகில் வேறு ஒட்டல்கள் நடத்த உரிமையும் இல்லை. முகாமில் ஸ்பென்சர் கம்பெனி தவிர வேறு நபர்கள் ஓட்டல் நடத்தவும் முடியாது. காலைச் சாப்பாடு 9 மணிக்கும், இரவுச் சாப்பாடு மாலை 5 மணிக்கும் போடப்படும். இதற் கிடையில் முகாமில் இருப்போர் வேறு எந்த உணவையும் சாப்பிட்டு விடக்கூடாது. அப்படி ஒரு வேளை சாப்பிடுவதாகக் கண்டு பிடிக்கப்பட்டால், கூடக் கொஞ்ச நாட்கள் முகாமில் இருக்க வேண்டியதேற்படும்.

## அன்றே லஞ்சம் :

மண்டபத்திற்கு வருவோர் அங்குள்ள மதுரைக் கம்பெனி ஏஜெண்டிடம் டெபாசிட்டாக 52 ரூபாய் 10 அணாக் கட்ட வேண்டும். ஆனால் 50 ரூபாய்க்குத் தான் ரசீது கொடுப் பார்கள். (அப்போதே அரசு முறை லஞ்சலாவண்யம் வந்து விட்டது.) இதில் ஒரு ரூபாய் ஸ்டாம்புக் கட்டணம். அதிகப் படியாக வசூலிக்கப்படும் 1 ரூ 10 அணா ஏன் எனக் கேட்க யாருமில்லை. இப்போது தியாகராசரின் கவனத்திற்கு இது வந்ததும், அவர் துணிச்சலாக, எங்கு, எப்படிக் கேட்க வேண்டுமோ அங்கே அப்படி விவரம் கேட்டார். ஆங்கிலக்

கம்பெனியார் புருவங்கள் உயர்ந்தன. அரசாங்கத்தின் கவனத்திற்கு இது பலரால் கொணரப்பட்டதும் ஆண்டாண்டு களாய்க் கொள்ளையடித்து வந்த கம்பெனி நிர்வாகத்தின் பாடு தர்ம சங்கடமாகிவிட்டது.

டெபாசிட்டாகத் தரப்படும் 50 ரூபாய் எதற்காக? இலங்கை போய்ச் சேர்ந்த பின்னர் ஒவ்வொரு பயணியும் அங்குள்ள மருத்துவ அதிகாரியிடம் 18 நாட்கள் தினமும் வந்து ஆஜராக வேண்டும். தன்னிடம் தொற்றுநோய் ஏதுமில்லை என நிரூபிக்க வேண்டும். அப்படி வந்து ஆஜராகாவிட்டால் டெபாசிட் பணம் பறிமுதல் செய்யப் படும். 18 நாள் கழித்த பின்னர், வேறு ஒரு விண்ணப்பத்தில் முத்திரை ஸ்டாம்பு ஒட்டி இந்த டெபாசிட் தொகையினை இலங்கை அரசிடமிருந்து பெற்றுக் கொள்ளலாம். பாதிப் பேர் அப்படியே 'தொலையட்டும்' எனப் போய் விடுவார்கள். அவ்வளவும் அரசுக்கு லாபம்? இந்தத் தலைவரிக்கெதிராகத் தியாகராசர் கண்டனக் குரல் எழுப்பினார். இந்த 50 ரூபாய்க்காகப் பல கூலிகள், வீடு மனைகளையெல்லாம் தம் தாயகத்தில் விற்றுவிட்டு வரும் அவலத்தைச் சுட்டிக்காட்டிப் பத்திரிக்கைகளுக்கு எழுதினார்.

அரசு ஆணைகள் ஒருபுறம் இருக்க, அவற்றைச் செயல்படுத்திய அதிகாரிகள் பயணிகளைப் படுத்திவைத்த பாடுகளுக்கு எல்லையில்லை. சூரியனை விடச் சுடுமணல் அதிகச் சூடாயிருப்பதில்லையா? இலங்கை செல்லும் கூலிப் பயணிகள். கங்காணிகளாலோ அல்லது அவர்கள் ஏசண்டுகளாலோ கூட்டிச் செல்லப்படுவர். இந்தக் கங்காணிகள் சொன்னபடி கேட்காவிட்டால் சிலோன் போய்ச்சேர்ந்த பின்னர் தோலை உரித்து விடுவார்கள். மண்டபம் முகாமில் இருந்த மருத்துவ அதிகாரிகள்,

பயணிகள் யாராவது தம்மை முறைத்துப் பார்ப்பதாகக் கண்டுவிட்டால் போதும், அந்தப் பயணிக்குத் தொத்து நோய் அறிகுறியிருக்கிறதெனச் சொல்லி வாரக்கணக்கில் அங்கேயே இருக்கச் செய்து விடுவார்கள். பாதிப்பேர் மண்டபம் முகாமிலிருந்தபடியே தம் சொந்த ஊருக்குப் படமுடியாதினித்துயரம், பட்டதெல்லாம் போதும் எனத் திரும்பி ஓடிவிடுவார்கள். இதையும் மீறிப் படகில் ஏறிவிட்டாலும் சிலோன் போய்ச் சேருவது நிச்சயமில்லை. படகில் வரும் போலிஸ் அதிகாரிக்கு எந்தப் பயணி மேலாவது கோபம் வந்துவிட்டால், அந்த பயணியை இலங்கை யில் கரையிறங்க விடமாட்டார். மறுபடகிலேயே இந்தியா வுக்குத் திருப்பி அனுப்பிவிடுவார், இத்தத் தொந்தரவெல்லாம் வேண்டாமென்று பல கூலிகள் உயிருக்கும் அஞ்சாமல் கள்ளத் தோணிகளில் எப்படியோ போய்ச் சேர்ந்து விடுவார்கள். இந்த இட்லர் தர்பார்களுக்கு எதிராகவும் தியாகராசர் கொடிபிடித்தார். உயரதிகாரிகளின் கவனத் திற்கு இவர்களின் காட்டுத்தனங்களைக் கொணர்ந்தார். இதனால் இலங்கையிலிருந்த கீழ்மட்ட அதிகாரிகளுக்குத் தியாகராசர் என்றால் ஒன்று பயம், அல்லது கோபம்'.

## பாராட்டுரைகள் :

இலங்கைக்கு வேண்டிய உணவுப் பொருள்கள், காய் கறிகள் எல்லாம் இந்தியாவிலிருந்துதான் இறக்குமதி செய்யப்பட்டன. இவற்றின் மூலம் மட்டும் தொத்து நோய்க் கிருமிகள் வரமாட்டாவா? எனச் சிந்திக்கச் செய் தார் தியாகராசா. ஆண்டுதோறும் ஒரு லட்சம் மக்களுக்கு இழைக்கப்படும் அநியாயத்தையும் அவமானத்தையும் எதிர்த்து அவர் தொடுத்த எழுத்துப்போர்கள் பல பத்திரிக்கைகளாலும் பிரமுகர்களாலும் பாராட்டப்பட்டன. ''கருமுத்து தியாகராசாவின் பொது நல உணர்வாலும்

முயற்சியாலும் இந்தியப் பயணிகள் அனுபவித்த பல துன்பங்கள் களையப்பட்டன'' என சிலோன் மார்னிங்லீடர் எழுதியது.1 உண்மையான குறையொன்றை எப்படி அதிகாரிகளின் கவனத்திற்குக் கொணர்வதென்றும் அக்குறை களைய எப்படி உடனடி நடவடிக்கை எடுப்பதென்றும் அவர் தெரிந்து வைத்துள்ளார் என மற்றொரு ஏடு பாராட்டியது. ("... thus showing that he understands how to expose a genuine grievance and secure its prompt redress". ஹிந்து, மெயில் போன்ற இந்தியப் பத்திரிக்கைகள், தியாகராசாவின் கடிதங்களையும் கட்டுரைகளையும் வெளியிட்டு இந்தியாவில் பொதுஜன அபிப்பிராயத்தை உருவாக்கின. அரசின் கவனத்திற்கும் கொணர்ந்தன.

## மற்றொரு பாரதப் போர் :

மதராஸ் சட்டமன்றத்தில், திரு. ராமச்சந்திரராவ், திரு. அகமது தம்பி மரைக்காயர், டாக்டர் டி. எம். நாயர், கே. ராமஐயங்கார் ஆகியோர் தீர்மானங்களை நிறைவேற்றி இந்திய இனத்தார்க்கு இழைக்கப்படும் நிற ஒதுக்கல் கொடுமையை நிவர்த்தி செய்யச் சென்னை கவர்னர் நடவடிக்கை எடுக்குமாறு வற்புறுத்தினர். ''சென்னை மாநில மாநாடு'' ஒன்று மதுரையில் இதற்கெனக் கூட்டப்பட்டு இலங்கை அரசின் தடுப்புக் காவல் கொடுமைகளும் இந்திய அரசின் ஏனோதானோத் தனமும் கண்டிக்கப்பட்டன. தென்னாப்பிரிக்க உரிமைப்போர் போல இங்கும் நடத்தப்படும் என எச்சரிக்கை செய்யப்பட்டது.

---

1. Thanks to the activity and public interest of Mr. Karumuttu Thiagaraja, one of the partners of the local chetty firm of K. R. M. T. T., two fairly serious difficulties experienced by people coming over from India have been redressed quite recently" - The Ceylon Morning Leader - 22—6—1914.

1914 முதல் 1917 வரை தியாகராசர் இடைவிடாது நடத்திய அறப்போரால் இலங்கை செல்லும் பயணிகள் மனிதாபிமானத்துடன் நடத்தப்பட்டனர். பாஸ்போர்ட், விசா முறைகள் கொணரப்பட்டன. இத்தப் பாஸ்போர்ட் முறையையும் எதிர்த்து, ஆ. தெக்கூரிலிருந்தபடி தியாகராசர் பத்திரிக்கைகளுக்கு 1917 வரை எழுதினார். இலங்கையில் அவரைப்போலத் தொடர்ந்து போரிட ஆளில்லாமையாலும், தியாகராசரின் கவனம் மதுரையை நோக்கிச் சென்றதாலும் போராட்டம் பிசுபிசுத்து, எல்லாம் சம்பிரதாயமாகி விட்டது.

இந்தப் போராட்டமே இப்படி என்றால், இலங்கையில் இந்தியக் கூலிகள் நடத்தப்பட்ட கொடுமைக்கு எதிராக தியாகராசர் நடத்தியதை மாபெரும் மகாபாரதப் போர் என்றே சொல்லலாம்.

“ ... ... ... ... ... ... அந்த
ஏழைகள் அங்கு சொரியும் கண்ணீர்வெறும்
மண்ணிற் கலந்திடுமோ? - தெற்கு
மாகடலுக்கு நடுவினிலே, அங்கோர்
கண்ணற்ற தீவினிலே — தனிக்
காட்டினிற் பெண்கள் புழுங்குகின்றார்

எனப் பாரதியார் கசிந்துருகிக் கண்ணீர் விட்டது போல, இலங்கைத் தோட்டங்களில் இந்தியக் கூலிகள் நெஞ்சு குமுறிக் கிடந்தார்கள்.

தென்னிந்தியாவிலிருந்து ஏசண்டுகள் மூலம் கங்காணிகள் கூலிகளை முன்பணம் கொடுத்துக் கூட்டிவருவார்கள். தோட்ட முதலாளிகள் 30 ரூபாய் கொடுத்தால் அதில் 10 ரூபாயை மட்டும் கூலித் தொழிலாளிக்குக் கொடுத்து

விட்டுப் பாக்கியை இவர்கள் பையில் போட்டுக் கொள்ளு வார்கள். அதுமட்டுமில்லை, இலங்கையில் மிகச் சொகு சான வாழ்க்கை இருக்கிறது என்றெல்லாம் பொய் சொல்லிக் கூட்டிவந்து, மீளமுடியாத கங்காணிகளிடம் ஒப்பந்த அடிமைகளாக விற்று விடுவார்கள்.

தோட்டவேலை செய்வோர்க்கு ஆண்டு முழுவதும் கூலி கொடுக்கப்படுவதில்லை. தேயிலைக் கொழுந்து பறிக்கும் சீசனில் மட்டும் தினமும் ஊதியம் கிடைக்கும். தேயிலைத் தொழிற்சாலைகளில் வேலை பார்ப்போர்க்கும் நல்ல சம்பளம் தரப்படுவதில்லை. சராசரியாக ஒரு தொழி லாளிக்கு, ஒரு நாளைக்கு அப்போதைய கணக்குப்படி 33 செண்டுகள் (காசு) மட்டுமே அளிக்கப்பட்டன.

கூலிக்காரனுக்கு அங்கே நோயே வரக்கூடாது. அப்படி வந்து விட்டால் அவன் தொலைந்தான். எந்த மருத்துவ வசதியும் தரமாட்டார்கள். எத்தனையோ அரசாணையிருந்தும் எந்த முதலாளியும் இதுபற்றிக் கவலைப் படுவதில்லை.

### நெஞ்சுருக்கும் நிகழ்ச்சி:

கூலிகளுக்கு இழைக்கப்படும் அராஜகங்களும் அத்து மீறல்களும் வரம்பில்லாதவை. வேலை செய்ய நியாயமான காரணங்களுக்காக மறுப்போரையும், வேறு தோட்டத் திற்குப் போக விரும்புவோரையும் கொடுமைப்படுத்துவது சர்வ சாதரணம். வேலையில் அசட்டையாயிருந்தால் அபராதம் விதிப்பார்கள். அன்றாடக் கூலியைவிட இந்த அபராத் தொகை அதிகமாயிருக்கும்.

''ஒரு தோட்டத்தில் முனியம்மா வேலைக்குப் போகாமல் வீட்டிலேயே இருந்து விட்டாள், தோட்டக்

காவல்காரன், துப்பாக்கியை ஏந்தியபடி கூலிகள் குடியிருப்பிற்கு வந்தான். முனியம்மாளிடம், ஏன் வேலைக்குப் போகவில்லை? எனக் கேட்டான், நாளைக்குத்தான் போக முடியும் என்று பதில் சொன்னாள், இதைக் கேட்ட காவல்காரன் சினமுற்றுத் துப்பாக்கியால் அவளைச் சுட்டுக் கொன்று விட்டு ஒடி விட்டான். அண்டையிலிருந்தவர்கள் காவல்காரனைப் பிடித்து வந்து போலிசில் ஒப்படைத்தார்கள். வழக்கு நடந்தது. காவல்காரன் அனியாயமாக ஒரு கொலை செய்து விட்டான் எனத் தீர்ப்பளிக்கப்படவில்லை. அவசரப்பட்டுப் பொறுப்பில்லாமல் நடந்து கொண்டான் என நூறு ரூபாய் மட்டும் அபராதம் விதித்தார்கள்'' என தியாகராசாவே பல நெஞ்சுருக்கும் நிகழ்ச்சிகளைப் பட்டியலிட்டுள்ளார். 1 ஒரு கூலித்தொழிலாளியின் வயிற்றைக் கழுவுவதற்கே வாரம் 8 அணா முதல் 10 அணாவரை தேவைப்படும். 1916இல் இலங்கை அரசால் நியமிக்கப் பெற்ற விசாரணைக்குழு, தோட்டத் தொழிலாளர்க்கு மாதம் தோறும் வழங்கப்படும் 5 ரூ அரிசிப் படியோடு இதர செலவுகளுக்காக 4 ரூபாய் தரவேண்டும் என தீர்ப்பிட்டிருந்தது. ஆனால் அந்த அளவுக்கு யாரும் தருவதில்லை. அங்கு சிறைக்கைதிகளுக்குக் கூட மாதம் தோறும் 7 ரூபாய் செலவிடப்பட்டது. ஆனால் கூலிகள் அதைவிடக் கேவலமாகவே நடத்தப்பட்டு இரவும், பகலும் வேலை வாங்கப்பட்டனர்.

இலங்கைக்கு வரும் கூலி கடனோடேதான் காலெடுத்து வைக்கிறான். அவனை இந்தியாவில் வேலைக்குத் தேடிப் பிடித்த நாள் முதல் ஏற்பட்ட செலவுகளையெல்லாம் அவன் தலையில் கட்டிவிடுவார்கள். கடனை உழைத்துக் கழிப்பதற்குள் புதுக்கடன்கள் சேர்ந்துவிடும். நாளெல்லாம்

---

1. A White Washing Commission - Karumuttu.

அடிமைகளாகவே அவர்கள் அடங்கிக் கிடக்க வேண்டியிருந்தது. கடனைத் தீர்க்காமல் யாராவது ஓடிப்போக முற்பட்டால் பிடித்துவந்து தோட்டக் காட்டிலேயே சிறை வைத்து விடுவார்கள். அரசாங்கம் வந்து விசாரிப்பதற்குள் கூலியின் அரை உயிரை வாங்கி அவனை நடைப்பிணமாக்கி விடுவார்கள். 1915இல் இலங்கைத் தோட்டங்களில் இவ்வாறு 8894 பேர் அடைக்கப்பட்டிருந்தனர் எனத் தியாகராாசர் புள்ளி விவரமெடுத்துப் பிரகடனப்படுத்தினார்.

### நல்ல மாடு:

ஒரு தடவை தோட்ட முதலாளியான வெள்ளைக்காரத் துரை, ஒரு விருந்தாளியைக் கூட்டிக்கொண்டு எஸ்டேட்டைச் சுற்றி வந்தார். அங்கு வேலை செய்து கொண்டிருந்த ஒரு கூலியை அழைத்து, காலாலும் கையாலும் தவழ்வது போல நடந்துபோகச் சொல்லியிருக்கிறார். அந்தக் கூலி விவரம் தெரியாமல் சற்றுத்தூரம் நடக்க ஆரம்பித்தவுடன், ''இது நல்ல மாடு'' என ஆங்கிலத் தமிழில் சொல்லிச் சிரித்திருக்கிறார். இதைக்கேட்ட் கூலிக்குக் கொஞ்சம் தன்மான உணர்வு வரவே அவன் எழுந்து நின்றுவிட்டான். முதலாளி மறுபடியும் நடக்கச் சொன்ன போது அவன் மறுத்து விட்டான். வழக்கம்போல உதை விழுந்தது. அதன் பின்னர் விஷயம் விபரீதமாகிக் கோர்ட்டுக்குப் போய் விட்டது. தோட்ட முதலாளி மீதே குற்றம் உள்ளது எனக் கண்டறிந்த நீதிபதி ''சட்டப்படி குற்றமானவரே'' என்று 10 ரூபாய் மட்டும் அபராதம் விதித்தார்.

இலங்கையிலிருந்த 2000 தோட்டங்களில் 4 லட்சம் இந்தியத் தொழிலாளர்கள் இப்படிக் கண்ணீர் விட்டுக் கொண்டிருந்தனர். இவர்கள் இலங்கையில் நிலையாகக் குடியேறவோ வேறு தொழில் செய்யவோ உரிமை

கிடையாது. திரு கருமுத்து தியாகராசர் போன்றோரின் முயற்சியால், சென்னை மாநில அரசு தட்டியெழுப்பப் பட்டது. அதன் 'பிரஜைகள்' இப்படி நடத்தப்படும் கொடுமையைக் கண்டறிய வேண்டுமென வற்புறுத்தப் பட்டது. அப்போது சென்னை கவர்னராயிருந்த லார்டு பென்ட்லண்ட் ஒரு விசாரணைக் குழுவை நியமித்தார். மர்ஜோரி பாங்க்ஸ் ( N. E. Marjoribanks ) எனும் ஆங்கில ஐ. சி. எஸ். அதிகாரி, சாகிப் பகதூர் அகமது தம்பி மரைக்காயர், ஆகியோர் விசாரணைக்குழு உறுப்பினர்களாக வந்தனர். ஒரு சில தோட்டங்களை மட்டும் பார்வை யிட்டுவிட்டு, கொழும்பில் விருந்து சாப்பிட்டுவிட்டுப் பூசி மெழுகினாற்போல ஒரு அறிக்கையினை இந்தக் குழு அனுப்பிவிட்டது.

## மழுப்பல் குழு :

இந்தக் குழு கண்டறிந்த பல பொய்யான தகவல்கள் பத்திரிக்கைகளில் பிரபலப்படுத்தப்பட்டன. கூலிகள் நல்ல படியாகவே நடத்தப்படுவதாகவும், இலங்கை - இந்திய உறவைக் கெடுப்பதற்காகச் சில விஷமிகளால் திட்டமிட்டுப் பொய்ப் பிரச்சாரம் செய்யப்படுவதாகவும் செய்திகள் பரப்பப் பட்டன. ஆனால் நிலைமை வேறு, நாளுக்கு நாள் தொழிலாளர்களின் நிலைமை மோசமாகி வந்தது. அத்தொழிலாளர் நலனுக்கெனவே சங்கம் அமைத்து இயக்கம் கண்ட தியாகராசர் வாளாயிருக்கவில்லை. மேலை நாடுகளில் தொழிலாளர்க்கான 'உரிமை இயக்கங்களும்' 'அகிலங்களும்' உண்டாகும் முன்னரே அவர் தொழிலாளர் நலம்போண இலங்கையில் இயக்கம் கண்டு விட்டார்!

விசாரணைக் குழுவின் அறிக்கையைப் பத்தி பத்தியாகப் படித்து அதன் தகவல்களை எல்லாம் வரிக்கு வரி மறுத்தார்.

கூலிகளுக்கு இழைக்கப்படும் கொடுமைகளையெல்லாம் பட்டியலிட்டு ஆணித்தரமான சான்றுகளுடன் நிறுவினார்.

விசாரணைக் கமிஷன் உண்மை நிலவரத்தைக் கண்டறிய அமைக்கப் பட்டது. மூடி மறைக்கப்பட்ட செய்திகளைத் தோண்டியெடுத்துக் கொணர வேண்டுமென்பதே அதனிடம் எதிர்பார்க்கப்பட்ட பணி. ஆனால் மர்ஜோரி பாங்ஸ் தலைமையில் வந்த விசாரணைக் கமிஷன் தனக்கு நன்றாகத் தெரிந்த குற்றங் குறைகளைக்கூடப் பெரிது படுத்தாமல், அதற்கு மாறான செய்திகளைச் சோடித்துச் சேகரித்து வெளிப்படையாகத் தெரிந்த 'விஷயங்களைக்கூட வெள்ளையடித்தாற்போல மறைத்து விட்டது.'

இது கண்ட தியாகராசா, தானே ஒரு விசாரணையைத் தொடர்ந்தார், இவருடைய தனிமுறை விசாரணையினைத் தோட்ட முதலாளிகளும் கண்காணிகளும் எதிர்த்தனர். பத்திரிக்கைகள் செய்தியாக வெளியிடப் பயந்தன. அவர் விடவில்லை. துண்டுப் பிரசுரங்களாக எழுதி நாடெங்கும் பரப்பினார். 1 தன் கருத்தை வெளியிடத் தயங்கிய பத்திரிக்கைகளைக் குத்தலாகத் தாக்கினார். கவர்னருக்கும், கமிஷன் மெம்பர்களுக்கும் தன் உண்மை விசாரணையை அச்சிட்டு அனுப்பினர்ர். அதற்கு அவர் வைத்த பெயர் என்ன தெரியுமா?

---

1. The Madras Mail", the 'Times of Ceylon" and "The Ceylon Observer" who resented my independent inquiry, have neither published this criticism nor have they remarked on it. I am afraid that in this case, it is not true that "Silence gives consent"

- K. T.

## வெள்ளையடிப்பா? விசாரணையா?

"A white washing Commission". "வெள்ளையடிப்பு விசாரணைக்குழு" என அதைக் கேலி செய்தார். உண்மைகளை அமுக்கி மறைத்துவிட்டுத் தக்க முறையில், உரிய இடங்களுக்குச் சென்று கமிஷன் விசாரணை செய்யத் தவறியதைக் கண்டித்தார். 2000 தோட்டங்களில் ஏழெட்டை மட்டும் பார்வையிட்டு விட்டு, கூலிகளை விசாரிக்காமல், கண்காணிகளை மட்டும் கேட்டுவிட்டு அறிக்கை எழுதுவது என்ன நியாயம் எனக் கேட்டார். விசாரிக்க வந்த ஒரு உறுப்பினர் கொழும்பு ஓட்டலிலேயே அரசு விருந்தினராகத் தங்கிக் கேளிக்கையில் ஈடுபட்டிருந்ததையும் அங்கிருந்தே அறிக்கையைத் தயாரித்துக் கொண்டதையும் சுட்டிக் காட்டினார். அறிக்கையில் தரப்பட்டுள்ள புள்ளி விவரங்கள் எல்லாம் பொய்யானவை என நிரூபித்தார். விசாரிக்க வந்த அதிகாரி வெள்ளையடிக்கும் பணியினைச் செய்ய, உடன் வந்த இந்தியப் பிரமுகர் சுண்ணாம்பு கலக்கிக் கொடுப்பதுபோல நடந்துகொண்ட வயிற்றெரிச்சலை வரிந்து தள்ளினார்.

இதனால் தியாகராசர் மீது அதிகார வர்க்கத்திற்கு ஆத்திரம் வந்தது. மெட்ராஸ்மெயில், சிலோன் டைம்ஸ் போன்ற வெள்ளைக்காரப் பத்திரிக்கைகள் தியாகராசரின் தலையீட்டைக் கண்டித்தன. இலங்கைத் தோட்ட முதலாளிகள், இலங்கை அரசாங்கத்திடம் தியாகராசர் மீது புகார் செய்தனர், அரசாங்கம் தியாகராசர் பற்றி ரகசியமாக விசாரிக்கத் தொடங்கியது. இதனைத் தியாகராசரே பின்வருமாறு குறிப்பிடுகிறார். "The Ceylon Government also seems to have suspected my motives, and instituted enquiries regarding my person and character. I have naturally incurred the displeasure of the planting interests of Ceylon"

ஆனால் எந்த அச்சுறுதலுக்கும் அவர் அஞ்சவில்லை. வழியில் அடிப்பட்டுக் கிடந்தவனுக்கு உதவ வந்த சமாரியனைப் போலவே தன்னைக் கருதிக்கொண்டார் தியாகராசாவின் தனிப்போரை 'இந்து' இதழ் நடு நிலையில் நின்று ஆதரித்தது. 'நியூ இந்தியா' இதழ், தியாகராசரின் முயற்சியைப் பாராட்டியது. ''மலேயாத் தோட்டத் தொழிலாளர் பற்றியும் உண்மை விபரங்களை அறிந்து சொல்ல இப்படியொரு தியாகராசர் கிடைக்க மாட்டாரா?'' எனக் கேட்டிருந்தது. (நியூ இந்தியா, மார்ச் 8, 1917), தியாகராசர் கண்டறிந்த விவரங்களையே அரசாங்கம் ஏற்கவேண்டுமென 'இந்தியன் பாட்ரியட்' (மார்ச் 7, 1917) எழுதியது.

### எத்தனை பாராட்டுக்கள் :

தியாகராசர் மேற்கொண்ட அருமுயற்சியால் தொழி லாளரிடையே உரிமை உணர்வு தலை தூக்கியது. அரசாங்கம் பல சீர்திருத்தங்களைச் செய்யமுன்வந்தது, குறைகள் எல்லாம் உடனடியாகக் களையப்படாவிட்டாலும் பல மாற்றங்கள் ஏற்பட வழிபிறந்தது.

தியாகராசரின் அரும்பணியினைப் பாராட்டி ''சிலோன் மார்னிங் லீடர்'' எனும் பிரபலமான நாளேடு 1914, சூன் 23இல் பின்வருமாறு எழுதியது. "The whole community owes a large measure of thanks to Mr. Thiagaraja, It is a promising augury that a member of the Nattukkottai Chetti Community should be so public spirited and show his interest in these things so effectively and yet so unobtrusively".

''ஹிந்து'' நாளேட்டில் திரு W. S. Naidu என்பவர் பின்வருமாறு பாராட்டினார். "The thanks of the Indian Public are due to Mr. Thiagaraja for speaking on behalf of them. His efforts, it is hoped, will be crowned with success". (Hindu, April 22, 1917)

அவருடைய வாக்குப் பொய்க்கவில்லை. தியாகராசர் தொடுத்த போரில் வெற்றியும் பெற்றார், புகழும் பெற்றார். அது மட்டுமா? இந்தியத் தொழிலாளர் துயர் பற்றி அன்றே அவர் கண்டுணர்ந்தார். இவர்கட்டு இந்தியாவிலேயே வேலை வாய்ப்பளிக்க வேண்டுமென உறுதிபூண்டார். பேனாமுனை யால் எந்த அதிகார அமைப்பையும் கிடுகிடுக்க வைத்து விடலாம் எனப் புரிந்து கொண்டார். நியாய உணர்வோடு நடத்தப்படும் எந்தப் போரும் தோற்றுப் போகாது எனக் கண்டுணர்ந்தார். இலங்கை அரசும் தோட்டத் தொழிலாளர் களும் தன்மீது ஒரு கண்வைத்திருந்தாலும் கூட அவற்றிற் காக அஞ்சவில்லை. பாரதிபாடியது போல, அவர் செம்புக்கும் அஞ்சவில்லை, கொம்புக்கும் அஞ்சவில்லை.

தியாகராசரின் இந்த அஞ்சாத்திறம் இலங்கை வாழ்வில் அவரிடம் அச்சாரம் வாங்கி அமர்ந்தது. அந்த அஞ்சாமை சாதிக்கப்போகும் ஆக்கத்திறத்தையும் அருஞ் செயலையும் அவரது பிற்கால வாழ்வு புலப்படுத்தக் காத்திருந்தது.

அதுபோகட்டும். அரசுடனே மோதும் அளவுக்கு தியாகராசர் இவ்வாறு துணிந்து நின்றாரே. அப்போது அவருக்கு வயதென்ன தெரியுமா? 22 தான்!

"He looked every inch a man of strength and purpose"
— On John D. Rockfeller

# தொண்டும் தொழிலும்

## 6

**தமிழகத்திற்கு நல்லது.**

கேஆர். எம். டி. டி. எனும் கருமுத்து விலாசக்கடை, கொழும்பில் 1886இல் ஆரம்பிக்கப்பட்டது. 1904இல் அது "அருணாசலம் பிரதர்ஸ்" நிறுவனமாயிற்று. 1911இல் இலண்டன் ராமனாதன் பாகப்பிரிவினை செய்து விலகிக் கொண்டார். 1912இல் தியாகராசர் அதில் ஓர் பாகஸ்தர் ஆனார். பெரியவர்கள் கடைப்பொறுப்பை நிருவகித்தமையால், பத்திரிக்கைத் தொழிலில் பழகவும், தோட்டத் தொழிலாளர் உரிமைபற்றி வழக்காடவும் தியாகராசர்க்கு வாய்ப்புக்கிட்டின. 1916இல் நிறுவனம் கலைந்து, பாகப்பிரிவினை ஆயிற்று. தியாகராசர்க்குத் தொழிலில் ஈடுபடுவதா தொண்டில் நாட்டம் கொள்வதா என்பது பிரச்சினையாயிற்று. தொழிலாயினும் தொண்டாயினும் தாயகம் திரும்புவதே மேல் என முடிவு செய்தார். அவர் அவ்வாறு முடிவு செய்தது தமிழகத்திற்கு நல்லதாகப் போயிற்று.

ஆ. தெற்கூர் வந்து சேர்ந்தார். அங்கிருந்தவாறே இலங்கைவாழ் தமிழர்களின் இன்னல் களையத் தாம் தொடுத்த போரைத் தொடர்ந்தார். ஆங்கில அதிகாரிகளுக்கும் பத்திரிகைகளுக்கும் விடாது எழுதினார். அவர்

ஏழு ஆண்டுகள் நடத்திய ''தர்ம யுத்தத்தின்'' பலனாகப் பல உரிமைகள் இந்தியர்களுக்கு வழங்கப்பட்டன.

## விடுதலைப்போர் மூண்டது:

இந்தியாவில் நாட்டு உரிமைப் போர் அப்போது களை கட்டிக்கொண்டிருந்தது. 1855 இல் ஆரம்பிக்கப்பட்ட இந்திய தேசீயக் காங்கிரஸ் மக்கள் உணர்வோட்டத்தில் இரண்டறக் கலக்கத் தொடங்கி வந்தது. 1905 இன் வங்கப் பிரிவினை எதிர்ப்பியக்கம் நாடெங்கும் கிளர்ச்சி செய்ய அணிசேரும் துணிவை இந்தியர்களுக்கு அளித்தது. வங்கத்தில் விபின சந்திரபாலர், மகாராட்டிரத்தில் திலகர், பஞ்சாபில் லாலா லஜபதிராய், தமிழ்நாட்டில் வ. உ. சி., பாரதியார் ஆகியோர் தீவிர வாதிகளாகச் செயல்பட்டு ''சுதந்திரம் எனது பிறப்புரிமை'' எனத் தோள்கொட்டினர். மக்கள் உள்ளத்தில் விடுதலை வேட்கை மூண்டது. கிளர்ச்சி வலுத்தது. திலகர் நாடு கடத்தப்பட்டார். இந்நிலையில் காந்தியடிகள், தென்னாப்பிரிக்காவிலிருந்து 1916இல் இந்தியா போந்து, விடுதலைப் போரை முடுக்கிவிட்டார்.

இந்திய உரிமைப் போரில் காந்தியடிகள் பல புதுமைகளைப் புகுத்தினார். ஒத்துழையாமை இயக்கத்தைத் தொடங்கினார். நாடெங்கும் சுதந்திரக் கனல் மூண்டது.

இந்த வேள்வித் தீ வளர்க்கும் திருப்பணியில் தியாகராசரும் முன் நின்றார். 1917இல் காங்கிரஸ் இயக்கத்தில் உறுப்பினர் ஆனார். அதிலும் தொழிலாளர் நலத்துறையின் தலைவர் ஆனார். அவருக்கு அனுபவ முடைய துறையல்லவா இது? இந்தியத் தொழிலாளர்கள், ஆங்கில நிறுவனங்களில் 'அடிமாடுகளைப்' போல நடத்தப்பட்ட அநீதியை எதிர்க்க ஆவன செய்தார்.

மாகாணக் காங்கிரஸ் கமிட்டிச் செயலர் ஆகத் தேர்ந் தெடுக்கப்பட்டார். அகில இந்தியக் காங்கிரஸ் கமிட்டி உறுப்பினர் ஆகவும் தெரிவு செய்யப்பட்டார். கல்கத்தாவில் நடந்த அனைத்திந்தியக் காங்கிரஸ் மாநாட்டிற்கு ஈ.வே.ரா. வுடன் சென்றார். இருவருக்கும் அப்போதே ஒரு ஒற்றுமை உண்டு. இரு குடும்பத்தவரின் வியாபாரமும் ஜவளி தான், அன்று அவருக்குப் பெரியார் ஈவேராவுடன் ஏற்பட்ட அறிமுகம், நேயம் நிறைந்த நட்பாகி, நெருக்கமாகி, நல்லுறவாகி இறுதிவரை நிலைத்திருந்தது.

## திலகரை ஏற்றது:

காந்தி சகாப்தத்திற்கு முன்னர் இந்திய சுதந்திரப் போரில் வியூகம் அமைத்த தலைவர் திலகரே ஆவார். இவர் ஆங்கிலம் கற்றவர்களே, காங்கிரசில் உறுப்பின ராயிருக்க முடியும் என்ற விதியை மாற்றினார். ‘மராட்டா’ ‘கேசரி’ போன்ற’ இதழ்களை நடத்தி எழுச்சியூட்டினார், வரிகொடா இயக்கம் நடத்தினார்; ஆறாண்டுச் சிறைத் தண்டணை பெற்றார், ‘சுயாட்சி’ தீர்மானத்தை நிறை வேற்றினார். பஞ்சாப் படுகொலையைக் கண்டித்தார். திலகரின் தீவிரவாதப் போக்கு அந்நாளில் தியாகராசர்க்குப் பிடித்திருந்தது. அனைத்திந்தியக் காங்கிரசு மாநாட்டுக்குச் சென்ற போது, திலகருடன் அருகிலிருந்து புகைப்படம் எடுத்துக் கொண்டார்.

திலகரின் தீவிரமான கொள்கைகளளத் தமிழ்நாட்டில் பரப்பி வந்த வ. உ. சி. யிடமும் அவருக்கு வாஞ்சை மிகுந்தது. சிதம்பரம் பிள்ளை வங்கப் பிரிவினை எதிர்ப்புப் போரில் தமிழகத்தில் தலைமை ஏற்றார். அந்நியத் துணிகளை பகிஷ்கரிக்க அணி திரட்டினார். தூத்துக்குடியில் தரும நெசவுச் சாலையும் சுதேசிப் பண்டகசாலையும்

நிறுவினார். சுதேசிக்கப்பல் கம்பெனி நடத்தினார். ஆங்கில அரசின் அடக்கு முறைக்குள்ளானார். தீவாந்திர சிட்சை விதிக்கப்பட்டார். ''வல்லாளன் சிதம்பரனார் சிறையில் பட்டவருத்தமெல்லாம் விரித்துரைத்தால் வாய் விட்டேங்கிக் கல்லான மனத்தவர்க்கும் கண்ணீர் கொட்டும் [1] எனும்படி துன்புற்றார்.

சிறையில் செக்கிழுத்த சிதம்பரச் செம்மல் செந்தமிழ்ப் புலவரும் ஆனார். தொல்காப்பியத்திற்கும் திருக்குறளுக்கும், சிவஞானபோததிற்கும் விளக்கம் தந்தார். ஜேம்ஸ் ஆலனின் வாழ்க்கை வழியமைப்பு நூல்களைத் தமிழாக்கித் தந்தார். அஞ்சாமையும் நேர்மையும் கொண்ட இத்தென்னாட்டுத் திலகரின் நட்பு தியாகராசர்க்கு கிட்டியது. தூத்துக்குடி வழியாக இலங்கை செல்ல நேர்ந்த போதெல்லாம் அங்கே சென்று வ. உ. சி. யைக் கண்டு அளவளாவுவார். அவருடைய வெள்ளை ஏகாதிபத்திய எதிர்ப்பும் பிடிக்கும். வேதாந்த சித்தாந்த அறிவும் பிடிக்கும். தன்னை மறந்து சிதம்பரனாரை வணங்கி விடைபெறுவார். இந்த நட்பு 1935 வரை நீடித்தது.

## அன்னிபெசண்டைப் போற்றியது :

சுதந்திரப் போர்க்காலத்தே படித்த இளைஞர்களிடம் நாட்டன்பை மூட்டி அவர்கள் நெஞ்சில் நிறைந்த மற்றொரு தலைவர் அன்னிபெசண்ட் அம்மையார். ஆங்கில நாட்டில் பிறந்து, இந்தியாவைத் தாயகமாக ஏற்று, அடையாற்றில் பிரம்மஞான சபையினை நிறுவி, பல சீர்திருத்தங்களை உருவாக்கி, இந்திய இளைஞரிடையே எழுச்சியூட்டினார். 'நியூ இந்தியா' 'காமன்வீல்' எனும் ஏடுகளை நடத்தினார். ஹோம்ரூல் இயக்கம் கண்டார். 1917இல் கல்கத்தாவில்

1. நாமக்கல் கவிஞர்

நடந்த இந்திய தேசீய காங்கிரசு மாநாட்டில் தலைவியாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். அந்த மாநாட்டிற்குச் சென்றிருந்த தியாகராாசரின் மனத்தில் அன்னிபெசண்ட் நீங்கா இடம் பெற்றார். 1

தென்னகத் தலைவர்களில் சீனிவாச சாஸ்திரியாரும், டி. பிரகாசமும், ராஜாஜியும் தியாகராசரால் பெரிதும் மதிக்கப்பெற்றனர். காந்தி நடத்திய விடுதலைப் போரின் தென்னகத் தளபதிகளான இவர்களோடெல்லாம் அவர் நெருங்கிய நட்புக் கொண்டார். என்றாலும் காந்தியடிகளே அவர் நெஞ்சில் என்றென்றும் நின்று நிலவினார். காந்தி அடிகள் தென்னாப்பிரிக்க இந்தியர் உரிமைக்காக நடத்திய போரின் எதிரொலி போல இலங்கை வாழ் இந்தியரின் உரிமைக்காகப் போர் நடத்திய தொண்டனன்றோ தியாகராசர்!

## 'மகாத்மா'வை மதித்தது:

மகாத்மா என மக்களால் அழைக்கப்பட்ட காந்தியடிகள் தலைமை ஏற்று நடத்திய சுதந்திரப் போராட்டம் ஆங்கில அரசுக்கு அச்சத்தை ஊட்டியது. 'ரௌலட்' சட்டத்தை இயற்றிப் பல கொடுமைகளை இழைத்தது. இதை எதிர்த்து காந்தியடிகள் சத்தியாக்கிரகப் போர் நடத்தினார். ஜாலியன் வாலாபாக்கில் பஞ்சாப் படுகொலை நடந்தது. காந்தி அடிகளின் வரிகொடா இயக்கமும் சட்ட மறுப்பியக்கமும்

---

1. "Wake up India - "India a Nation" என்பன அவர் எழுதிய நூற்கள் இதில் ஒன்று தியாகராசர் நூலத்தில் இன்றும் உள்ளது.

2. அன்னிபெசண்டால் கவரப்பட்ட மற்றொரு நகரத்தார் இளைஞர் டாக்டர் அழகப்பச் செட்டியார். அந்த அம்மையாரின் நூற்றாண்டு விழா நினைவாலே அவர் அழகப்பா கல்லூரியை நிறுவினார்.

நாடெங்கும் பரவின. மகாத்மா எனும் பெயர் மந்திரச் சொல்லாகிவிட்டது. மோகன்தாஸ் காந்தியெனும் மோகன சக்திக்குள் தியாகராசரும் ஆட்பட்டார்.

## மதுரைக்கு வந்தது :

ஆ. தெற்கூரில் இருந்தே நாட்டுத் தொண்டிலும் சமூகப் பணியிலும் ஈடுபடநாட்டங் கொண்ட அவருக்கு அங்கே போதிய உற்சாகம் கொடுப்பாரில்லை. ஏதேனும் தொழில் செய்யவேண்டிய நிர்பந்தம் ஏற்பட்டது. மதுரையில் ஏற்கெனவே தம் குடும்பத்தவர்க்கு இருந்த வாணிகத் தொடர்பை வலுப்படுத்த முயன்றார். 1920இல் மதுரைக்கு மறுபடி வந்தார். இப்போது மதுரையில் புதுஜெயில் ரோடு என அழைக்கப்படும் சரகத்தில், ஹார்வி மில் அருகில் சின்னச்சாமி பிள்ளை என்பாரின் பங்களாவை வாடகைக்கு எடுத்துக் கொண்டார். துணி வணிகத்தில் ஈடுபடவே விருப்பம் கொண்டார். ஆனால் அதற்குப் போதிய அளவு முதலீடு வேண்டும். அப்பொழுதுதான் பெரிய நிறுவனங் களோடு போட்டியிட்டு நிற்க முடியும். ‘கருமுத்து’ எனும் நாடறிந்த தன் குடும்பப் பெயர் பின்பலம் ஆகப் பல பங்குகளைச் சேர்த்துக் கூட்டுப்பங்கு நிறுவ்னமாக்கலாம் எனத் திட்டமிட்டார்.

## ஆலைத்தொழிலுக்கு வந்தது :

உணவுக்கு அடுத்தபடியாக முக்கியமானது துணி உற்பத்தித் தொழில். 250 ஆண்டுகளுக்கு முன்னர் கிழக்கு இந்தியக் கம்பெனியார் பாரதத்திற்கு வந்தபோது, இங்கிருந்து துணி வாங்கி இங்கிலாந்தில் வியாபாரம் செய்வதையே முக்கியமான நோக்கமாகக் கொண்டிருந்தனர்.

இந்நாட்டில் கிராமந்தோறும் ராட்டையில் நூற்பதும் கைத்தறியில் நெய்வதும் பிரபலமான தொழில்களாக இருந்தன. கரடு முரடான துணி முதல் டாக்கா மஸ்லின் வரை பாலாவியன்ன மென்துகில்கள் இங்கே நெய்யப்பட்டன.

நீராவி மூலம் யந்திரங்களை ஓட்டும் துணி ஆலைகள் இங்கிலாந்தில் தொழிற் புரட்சி வழியாக அமைக்கப் பட்டதும்[1] துணிக்குப் பதிலாக பஞ்சைக் கொண்டுசென்று, ஆலைகளில் நூல் நூற்றுத் துணி நெய்து அதை இந்தியாவுக்கு மீண்டும் கொண்டுவந்து விற்பது லாபம் உடையதாயிருந்தது. முதன்முதலில் ஆலைத்துணிகளை விற்க ஆங்கில அரசு அக்கிரமமான முறைகளைக் கையாண்டது. உள்நாட்டுச் சுதந்திரப் போர் காரணமாக அமெரிக்காவிலிருந்து கச்சாப்பருத்தியை இறக்குமதி செய்வது நின்றுபோனதால், இந்தியாவில் பருத்தி விளைச்சலுக்குப் புதிய ஆக்கங்களை அளித்தது. துணி நெய்த நாடு துணியின்றி நலிந்தது. மலிவான ஆலைத் துணி வருகையால் இந்தியத் துணி நசித்தது.

காத்தியடிகள் சீமைத்துணிகளைப் பகிஷ்கரிக்க இயக்கம் கண்டதற்குரிய காரணங்கள் இவைதான். அந்த இயக்கம் 1920இல் சூடுபெற்று 1930வரை உச்சகட்டத்தில் இருந்தது. இதனால் இலண்டனில் பாதிப்பு ஏற்பட்டது. பிளாக்பர்ன் முதலிய நகர்கள் சீர்கெட்டுத் தறிகள் மூடப் பட்டன. பல ஆண்டுகளாக இந்தியர்களுக்குத் துணி நெய்து கொடுத்துக் கொண்டிருந்தவர்கள் எல்லாம் பட்டினி கிடக்கவேண்டியதாயிற்று. 30 ஆலைகள் அடியோடு

---

1. 1764இல் ஹார்கிரீவ்ஸ் விசைத்தறியைக் கண்டு பிடித்தார். 1765இல் ஜேம்ஸ்வாட் நீராவியந்திரத்தைச் செய்துகாட்டினார். 1769இல் ஆர்க்ரைட் நூற்பு யந்திரத்தைப் பிரபலப்படுத்தினார்.

அழிந்தன. 100 ஆலைகள் மூடப்படும் நிலைக்குச் சென்று விட்டன. இந்தியாவில் இதுவே சமயமென்று சுதேசி ஆலைகளை ஏற்படுத்திக் கொள்ளை லாபம் அடிக்கப் பல முதலாளிகள் முயன்றனர். ஜப்பானும் கழுத்தை அறுக்கும் போட்டாப் போட்டியில் இறங்கியது [1].

## ஆங்கிலேயர் தொடங்கியது :

இந்தியாவில் முதல் நூற்ப்பாலை ஆங்கிலேயர் முயற்சியால் 1817இல் ஹௌராவில் காலூன்றியது, ஆனாலும் 1854இல் பம்பாயில் தான் முழுமையானதொரு நூற்பு, நெசவாலை உருவாக்கப்பட்டது. அந்த நூற்றாண்டின் இறுதியில் 144 பஞ்சாலைகள் இந்தியா வெங்கிலும் ஏற்பட்டுவிட்டன. லங்காஷயர் ஆலைகளுடன் போட்டியிடும் அளவுக்கு இந்திய ஆலைத்தொழில் வளரத் தொடங்கியது, குறைந்த ஊதியம் தந்து இரவு பகலாக வேலை வாங்குதல் - மலிவாகக் கச்சாப் பொருள்களைப் பெறுதல். எனுமிவற்றால் ஆலைகள் நல்ல லாபம் பெற்றன. தமிழ் நாட்டில் சென்னையில், தென் தமிழ்நாட்டில், மதுரையில் எல்லாம் ஆங்கிலேய முதலீட்டால் நூற்பாலைகள் தொடங்கப் பெற்றன. ஹார்வே சகோதரர்களின் மதுரை நூற்பாலை 1892இல் இயங்கத் தொடங்கிற்று. தமிழ் நாட்டில் மதுரை பஞ்சாலைத் தொழிலின் கேந்திரநகரமாகத்திகழ்ந்தது. பட்டுநூல்காரர்கள் எனும் சௌராட்டிர சமூகத்தவர் ஜரிகை, ஜமுக்காளம்/ஜவுன்னடித் தொழில்களில் தலைசிறந்து விளங்கினர். சாயந்தோய்க்கும் தொழிலில் பல சமூகத்தவர் ஈடுபட்டிருந்தனர். சித்திரக் கைத்தறிகள் மதுரையெங்கும் ஓடிக்கொண்டிருந்தன, மதுரையைச் சுற்றிய கரிசல் காடுகளில் நல்லரகப் பருத்தி பயிராகி வந்தது.

---

1. ''நியூஸ்கிரானிகள்'' இதழில் மிஸ்டர் ஹாட்சன் எழுதிய கட்டுரை—சுதந்திரச் சங்கு 26-1-1934

### தனவணிகர் போற்றியது :

கருமுத்து தியாகராசருக்கு மட்டுமில்லை, நகரத்தார் சமூகத்தவர்க்கே நூல் நூற்பது என்பது பரம்பரை வழக்க மாகவே இருந்தது, ஆய்ச்சிமார்கள் கையால் நூற்றுத்தறி நெய்து வந்திருக்கிறார்கள். (இதற்குச் சான்றாக தனவணிகர் இல்லங்களில் பழைய உருச்சிதைந்த ராட்டி னங்களை இன்னும் காணலாம். பெண்ணுக்கு இராட்டினத் தையும் பஞ்சு கொட்டும் கருவியையும் வில்லையும் சீதனமாகத் தருவது தனவணிகர் வழக்கம்) எனவே தியாகராசர் தன் குடும்பத்தவர்க்கு உரிய, ஓரளவு தனக்கும் தெரிந்த துணி வாணிகத்தில் ஈடுபடக்கருதினார், வாணி கத்தைவிட, ஆலை உற்பத்தித் தொழில் அவர் இலட்சிய மாயிற்று. எண்ண அலைகள் எழுந்து பரவின: அவை அவருடைய செயலார்வக்கப்பலை உந்தி உந்தித் தள்ளின. அவர் கனவு நனவாகிக் கொண்டிருந்தது.

ஆங்கிலேயர்களால் இந்நாட்டில் ஆரம்பிக்கப்பட்ட தொழிற்சாலைகளில் எல்லாம் தொழிலாளர்கள் ஈவிரக்க மின்றிச் சுரண்டப் பட்டனர். லாபமே நோக்கமாகக் கொண்ட முதலாளிகள் அவர்களிடமிருந்து இயந்திரங்களை விட மோசமாக இரவும் பகலும் வேலை வாங்கினர். இதனால் தொழிலாளரிடையே அமைதியின்மை ஏற்பட்டது. அவர்களுடைய உரிமைக்காகப் போரிடக் காந்தியடிகள் முன் வந்தார்.

### தொழிற்சங்கம் தோன்றியது :

''இந்தியாவில் தொழிற் சங்க வரலாறு காந்தியடிகள் தலைமையில் அகமதாபாத்தில் நடந்த நெசவாலைத் தொழி லாளர் போராட்டத்தோடு உதயமாயிற்று. அவர்

தலைமையில் 25 நாட்கள் போராடி, அகமதாபாத் தொழிலாளர்கள் தம் நியாயமான உரிமைகளைப் போராடிப் பெற்றனர்'' [1]

என்றாலும் இந்தியாவிலேயே முதன்முதலில் தொழிலாளர் சங்கம் அமைந்தது சென்னையில் தான். 1918இல் சென்னைத் தொழிலாளர் சங்கம் நிறுவிய தலைவர்கள் ஐவரில் திரு. வி. க. வும் ஒருவர். டாக்டர் வரதராஜுலு நாயுடு, ஈ. வே. ரா., திரு. வி. க. போன்றோர் காங்கிரஸ் கட்சியின் தொழிலாளர் உரிமைப் பிரிவுக்குத் தலைவர்களாகவும் இலங்கினர்.

21 - 10 - 1920இல் சென்னை பக்கிம்ஹாம் மில்லில் கதவடைப்பு ஏற்பட்டது. இதன் எதிரொலியாகத் தமிழ் நாட்டின் பிற ஆலைகளிலும் பூசல் ஏற்பட்டது. மதுரை ஹார்வி மில்லிலும் கதவடைப்பு ஏற்பட்டது. தொழிலாளர்கள் தெருவில் நின்றனர். இச்சமயத்தே காந்தியடிகள் தென்னாட்டிற்குச் சுற்றுப் பயணமாக வந்து கொண்டிருந்தார். அகமதாபாத் ஆலைத் தொழிலாளர் இயக்கத்தையும் கேடா விவசாயிகள் அறப்போரையும் வெற்றியுடன் நடத்திய காந்தி அடிகளின் வருகையைத் தொழிலாளர்கள் நம்பிக்கையுடன் எதிர்பார்த்திருந்தனர். [2] முதல் உலகப் போர்க் காலத்தே பிரிட்டன் இந்தியாவுக்கு அளித்திருந்த வாக்குறுதிகள் எல்லாம் காற்றோடு போய்விட்டன. அதற்குப் பதிலாக ரௌலட் சட்டமும் துப்பாக்கிச் சூடுகளும் வந்தன. காந்தி அடிகளின் அறப்போரும் வலிமைபெற்று வந்தது.

---

1. The Story of Indian Labour - G. Ramanujam

2. காந்தியடிகள் முதன்முதலாகத் தமிழகம் வந்தது 1896இல். கடைசியாக வந்தது 1946இல். இடைப்பட்ட 50 ஆண்டுகளில் பலமுறை வந்துள்ளார். (20 தடவை)

1919இல் சென்னையில் நடந்த டிராம் தொழிலாளர் வேலை நிறுத்தச் சமயத்தே காந்திஜி நேரடியாக வந்து சிக்கலைத் தீர்க்க உதவினார். அவர் அப்போது மதுரைக்கு வந்தபோது, இங்குள்ள தொழிலாளர் இன்னல்களும் அவருடைய கவனத்திற்குக் கொணரப்பட்டன. ஆங்கிலேயர் களால் வெளியேற்றப்பட்ட தொழிலாளர்களுக்கு வேலை தரும் முயற்சியில் இந்தியத் தொழிலதிபர்களும் முன்நிற்க வேண்டுமெனக் காந்தியடிகள் வற்புறுத்தி வந்தார்.

**'மீனாட்சி பிறந்தது :**

குஜராத்தைச் சேர்ந்த கல்யாணம்ஜி ராம்ஜி எனும் அன்பர் மதுரையில் 'மீனாட்சி ஆலை' எனும் பெயரில் தொழில் தொடங்க முன்வந்தார். ஆந்திர கேசரி டி. பிரகாசம் அதன் ஊக்குநராயிருக்க இசைந்தார். கருமுத்து தியாகராசருக்கும் அதில் அக்கறை ஏற்பட்டது. வேலையின்றி நின்ற தொழிலாளர்களுக்குப் புதிய கதவு திறக்கப்படும் நம்பிக்கை ஏற்பட்டது.

கல்யாணம்ஜி, ர்ராம்ஜியால் மதுரையிலிருந்து தொழிலை வளர்க்க இயலாமல் போனதால், அதன் தொடக்க நிலையிலேயே தியாகராசர் ஆலையை உருவாக்கும் பொறுப்பை மேற்கொண்டார். மீனாட்சி நூற்பாலை பிறந்து விட்டது. அதில் பங்குதாரர்களைச் சேர்க்கவும், முதலீட்டைப் பெருக்கவும், பருத்திக் கொள்முதல் செய்யவும், யந்திரங்களால் நூற்கவும் அவர்பட்ட ஆரம்பகால வேதனைகள் எண்ணத் தொலையாதவை. அவருக்குள்ளிருந்து ஏதோ ஒரு சக்தி அவரை உந்திக் கொண்டேயிருந்தது.

காந்திஜி மறுபடியும் தமிழகத்திற்கு வருகை புரிந்தார், இங்கு நடத்தப்பட்ட ஒத்துழையாமை இயக்கப் போர்கள்

அவரைப் பெரிதும் கவர்ந்திழுத்தன. கதர் தீண்டாமை, மதுவிலக்கு போன்ற நிர்மாணப் பணிகளிலும் தமிழகம் முன் நிற்கக்கண்டு அவர் சிந்தை மகிழ்ந்தார்.

## மகாத்மாவுக்கு விருந்தளித்தது:

மதுரையில் மகாத்மாவை வரவேற்கச் செய்யப்பட்டிருந்த ஏற்பாடுகளில் தியாகராசரும் தீவிரப் பங்கு கொண்டிருந் தார். 22-9-1921இல் மதுரையில் இறங்கிய மகாத்மாவின் மனத்தில் மகத்தான புரட்சி ஒன்று உருவாகிக் கொண்டி ருந்தது. வரலாற்றுச் சிறப்புடைய முடிவொன்றை அன்று தான் மேற்கொண்டார்.

மேலமாசி வீதியிலிருந்த தியாகராசர் இல்லத்தில் காந்தியடிகள் தங்கியிருந்தார். அவருக்கு விசாலாட்சி ஆச்சி அறுசுவை விருந்தளித்து மகிழ்ந்தார். அன்று நடந்த சம்பவத்தை, தியாகராசரின் மருமகள் திருமதி சிந்தாமணி மாணிக்கவாசகமே சொல்லுகிறார்:

''அண்ணல் காந்தியவர்கள் 1921ஆம் ஆண்டு ஸ்ரீ மீனாட்சி மில்ஸ் பதிவகத்தில் தங்கியிருந்தார். அது வரலாற்றுச் சிறப்புப் பெற்ற நிகழ்ச்சி என்று என் கணவர் அடிக்கடி கூறுவதுண்டு. அன்று, அப்பதிவகம், அவர்கள் இல்லமாகவும் இருந்தது. விருந்திட்டுப் பழகிய செட்டியார் குடியிலே பிறந்தவர்கள் என் மாமியார் அவர்கள், அன்று திரு. காந்தியவர்களுக்கு அமுது படைத்தார்கள். அன்று மாலை, காந்தியடிகள் உலவச் சென்று திரும்பினார். ஆபுத்திரனுக்கு அன்று வணிகப் பெருங்குடியிலே பிறந்த ஆதிரை இட்ட அமுது உலகப் பசியைப் போக்கிற்று. விசாலாட்சி ஆச்சி இட்ட அமுது இந்திய மக்களின் வாழ் விற்கே வழிகாட்டியாக, காந்தியடிகளை ஆக்கியது. மோகன்தாஸ் கரம்சந்த் காந்தி என்று அழைக்கப்பட்ட

அவர் மனத்திலே புயல் வீசியது. நாட்டிலே ஏன் வறுமை'' எனக்கேட்டு, முழத்துண்டு அணிந்து மகாத்மாவானார்.[1]

'அரை நிர்வாணப் பக்கிரி' என அண்ணலைப் பிற்காலத்தில் வின்ஸ்டன் சர்ச்சில் கேலி செய்தாரே அதற்கு அடிப்படையான வரலாற்று முடிவு தியாகராசர் இல்லத்தில் காந்தியடிகளால் எடுக்கப் பட்டது. வேட்டியை மடித்துக் கட்டிக் கொள்ளக் காந்திஜிக்குத் தெரியவில்லை. விருதுநகர் பழனிக் குமாருபிள்ளை எனும் தேசீயத் தொண்டர் வேட்டியை மடித்துக் கட்ட உதவினார். அப்போது அருகிலிருந்து உதவும் பேற்றினைத் தியாகராசர் பெற்றார். அந்த வேட்டியுடன் காந்திப் பொட்டல் எனும் இடத்தில் நடை பெற்ற கூட்டத்தில், சௌராட்டிர மக்களிடையே காந்தி உரையாற்றினார். வரலாற்றுச் சிறப்பு மிக்க இச்சம்பவம் நடந்த வீட்டை மட்டும் படம் பிடித்துப் போட்ட ஒரு நூலில் இவ்விவரங்கள் விடுபட்டுள்ளன.[2]

இவ்வாறு காந்தியடிகளின் ஆசியோடு தியாகராசரும் அவர் தொடங்கிய மீனாட்சி மில்லும் வளரத் தொடங்கின. அவரிடம் தொழில் துறைப் பொறுப்புக்கள் நாளுக்கு நாள் மிகுந்தமையால், தொண்டு வாழ்வில் போதிய சிரத்தை கொள்ள அவரால் இயலவில்லை.

**அரசியலிலிருந்து விலகியது :**

ஆனாலும் கூட டாக்டர் வரதராஜுலு நாயுடுவிடம்[3] பரிவு கொண்டிருந்தார். 1921 மதுரை அரசியல்

---

1. விசாலாட்சி கலாசாலை மலர்.
2. தமிழ் நாட்டில் காந்தி - நூற்றாண்டு விழா வெளியீடு.
2. இவரும் தென்னாட்டுத் திலகர் எனப் பாராட்டப்பட்டவர் திருப்பூரில் நாட்டு வைத்தியத் தொண்டு புரிந்தார். பிரபஞ்சமித்திரன், தமிழ்நாடு எனும் பத்திரிகைகளை நடத்தினார். 22-7-1957இல் காலமானார்.

மாநாட்டுக்குத் தலைமை ஏற்றதைத் தொடர்ந்து இவருக்கு ஆறுமாதச் சிறைத் தண்டனை விதிக்கப்பட்ட போதெல்லாம் கருமுத்து தியாகராசர் பல உதவிகளைச் செய்தார். இவ்வாறு தொழிலுக்கும் தொண்டுக்கும் இயன்றவரை இடம் ஒதுக்கி வந்தார். இது அவர் காங்கிரஸ் கட்சியை விட்டு விலக நேர்ந்த 1939 வரை நீடித்தது.

மதுரை தென்னாட்டில் சுதந்திரப் போர் வீரர்களின் பாசறையாக விளங்கி வந்தது. பல அரசியல் சம்பவங்களும் சர்ச்சைகளும் இங்கே நடந்தன. 1926இல், சுயராஜ்ஜியக் கட்சியை நிறுவிய சி. ஆர். தாஸ் மதுரை வந்த போது அவ் வரவேற்பில் தியாகராசரும் கலந்து கொண்டார் எனத் தெரிகிறது. நாவலர் ச. சோமசுந்தரபாரதி தூத்துக்குடி யிலிருந்து மதுரையில் குடியேறிய பின்னர் அவருக்கும் தியாகராசர்க்கும அறிமுகம் ஏற்பட்டது. தியாகராசரின் மொழியுணர்வு கருதி, அவரை நீதிக்கடசியில் சேர்த்துவிடச் செய்த முயற்சிகள் பலிக்கவில்லை. எனினும் அரசியலை விட்டு முற்றிலும் விலகிவிடாமல் சற்று ஒதுங்கி மட்டுமே இருந்தார். சுபாஸ்சந்திரபோஸ் 1940இல் மதுரை வந்த போது தியாகராசரின் விருந்தினராகவே தங்கியிருந்தார்.

1921 முதல் (மீனாட்சி ஆலை துவங்கிய ஆண்டு) 1939 வரை தம் அரசியல் ஈடுபாடு பற்றி, தியாகராசர், அப்போது சென்னை முதன் மந்திரியாயிருந்த ராஜாஜிக்குத் தமிழிலும், ஆங்கிலத்திலும் எழுதிய பகிரங்கக் கடிதத்தில் குறிப்பிட்டு உள்ளார். கடிதத்தில் தொடக்கவரிகளே கருமுத்துவின் மனத்தைத் திறந்து காட்டிவிடுகின்றன.

''விளம்பரப்படுத்திக் கொள்ளாமல் தொண்டாற்றி இன்னல்கட்குள்ளான பழைய உண்மையான காங்கிரஸ் ஊழியன் என்று என்னை அறிமுகப்படுத்திக் கொண்டு இக் கடிதம் எழுதத் துணிகின்றேன். நான் 1921இல் அரசியலில்

நின்றும் விலகி ஆலைத் தொழிலில் புகுந்த பிறகு நடந்த சில சம்பவங்களை இங்கு குறிப்பிடுகின்றேன். 1929இல் காந்தி அடிகள் டாண்டி உப்புச் சத்தியாக்கிரகம் ஆரம்பித்தபோது அதிகாரிகள் என் நிருவாகத்திலிருக்கும் ஸ்ரீ மீனாட்சி ஆலைக்குள் வந்து தொழிலாளர்க்கிடையே துண்டுப் பிரசுரம் பரப்ப முயன்றனர். காந்தியடிகள் என் விருந்தினராய் வந்த போது முதன்முதலாய் முண்டு உடுத்தினார் என்ற பெருமையினாலும் தேசபக்தியினாலும் தூண்டப்பட்டு எங்கள் ஆலைக்குள் தேச இயக்கத்திற்குப் பாதகமாக மறுப்புப் பிரசாரம் செய்ய அரசாங்கத்திற்கு இடங்கொடுக்க முடியாதெனத் துணிந்து தடுத்தேன். அப்போழுது மதுரைக் கலெக்டராக இருந்த ஆல்துரை (J. F. Hall, I. C. S.,) லைசென்சு புதுப்பிக்காமலிருக்கத் துப்பாக்கியை உரிய பொழுதில் போலீசில் கொடுக்கவில்லை என்ற சிறு காரணத்திற்காக ஆயுதச் சட்டப்படி சிறைக்கு அனுப்பப்படுவேனெனப் பயமுறுத்தி, இனிக் காங்கிரசில் கலந்துகொள்ளவோ, அதற்குப் பண உதவி செய்யவோ கூடாது என என்னிடமிருந்து ஒரு கடிதம் வாங்கினார். பிறகு சர். சண்முகம், செட்டியார், 1934இல் அசெம்பிளித் தலைவராக இருந்த பொழுது தன் தேர்தலை ஆதரிக்க வேண்டுமென்று எனக்குக் கடிதம் எழுதினார். அதற்குக் காங்கிரசில் எனக்குள்ள அபிமானத்தால் அவ்வாறு செய்ய முடியாதெனப் புகழுடைய அப்பெரியாருக்குச் சுருக்கமாகப் பதில் எழுதினேன். எனக்கு இரண்டு நியமனத் தேர்தல் சீட்டுகள் இருந்ததால், தேர்தலில், எல்லாப் பக்கங்களிலிருந்தும் பெரிதும் வற்புறுத்தப் பட்டேன். எங்கள் ஆலையில் பதினாறில் ஒரு பங்கு உடையவராயும் ஐந்து லட்சம் கடன் கொடுத்தவருமான காலஞ் சென்ற திரு. யெ. மு. விசுவநாதன் செட்டியார் அவர்கள் என் வாக்கு இரண்டையும் சர். சண்முகம் செட்டியாருக்குக் கொடுக்கவேண்டுமென்று வற்புறுத்தியதையும் மீறினேன்.

பிறகு எங்கள் ஆலையின் நிருவாக சபையில் ஒருவரான திவான்பகதூர் திரு. அ. மு. முருகப்ப செட்டியாரவர்கள் அப்பொழுது தொழில் மந்திரியாக இருந்த சர். பி. டி. ராஜன் ஆகிய இருவரும் வந்து ஆலை வாக்கையாவது சர். சண்முகம் செட்டியாருக்குக் கொடுக்கவேண்டுமென்றிட்ட ஆணையையும் மீறினேன். அப்போழுது கண்ணியம் வாய்ந்த உங்கள் சகா டாக்டர் சுப்புராயன் உடனிருந்தார். இத்தகைய சிறு காரியங் களுக்காக யான் அடைந்த துன்பம் சிறைவாசத்திலும் கொடிய தாகும்.[1] சென்ற பொதுத் தேர்தலில், வெளிப்படுத்திக் கொள்ளாமல், காங்கிரசை நான் எவ்வாறு ஆதரித்தேன் என்பதை திரு. என். எம். ஆர். சுப்புராமன் சொல்லுவார். நான் ஒரு தீவிர காங்கிரசுவாதி என்ற முறையில் உங்கள் அனுதாபத்தைப் பெறும் பொருட்டே இன்பமில்லாத இச் சம்பவங்களை விருப்பமின்றி இங்கே சொல்லுகின்றேன்.''

ஆங்கிலத்திலும் தமிழிலும் அச்சிடப்பட்டு நாடெங்கும் பரப்பப்பட்ட இப் பகிரங்கக் கடிதத்திலிருந்து 1939 வரை தியாகராசரின் அரசியல் உள்ளுணர்வுகளையும் செயல் போக்கையும் தெரிந்து கொள்லலாம். சிறைவாசம் அனுப வித்தலைக் காட்டிலும் கொடிய மனத் துயரங்களைத் தாங்கிக் கொண்டு, தேச உணர்வையும் கைவிடாமல் தொழிலாக்கமும் சிதையாமல் போராடியிருக்கிறார். சொந்த முதலைப்போட்டு மட்டும் தொழிலைத் தொடங்கியிருந்தால் என்ன வந்தாலும் சரி எனக் குதித்திருப்பார். ஆனல் பங்குதாரர்களின் முதலீட்டிற்கும் பொறுப்பாக வேண்டிய கடப்பாடிருந்ததால் பல சந்தர்ப்பங்களில் வெளிப்படையாக அரசியலில் இறங்க முடியாமல் தவித்திருக்கிருர்.

---

1. My sufferings for such little things were greater than even courting imprisonment — Karumuttu — Muttamil Sangam Series No. 1

புரவலரும்



புலவர்களும்

டாக்டர். சிதம்பரநாதச் செட்டியார், கலைத் தந்தை, நாவலர் ச. சோ. பாரதியார், முத்தமிழ்க் காவலர். விசுவநாதம்



நேதாஜி சுபாஸ் சந்திரபோசுடன் தியாகராசர்.
இடதுகோடியில் பசும்பொன் தேவர்.

**நிதிதர மறுத்தது :**

இரண்டாம் உலகப்போர் தொடங்கிய பின், தேசத் தலைவர்களில் பலர் சிறையில் வாடினர். ஆங்கில அரசு யுத்தநிதி தருமாறு பெரிய முதலாளிகளை நிர்ப்பந்தப் படுத்தியது. தென்னாட்டு ஆலையதிபர்களில் பலர் யுத்த நிதி கொடுக்க நான் முந்தி நீ முந்தி என நின்றார்கள். ஆனால் தியாகராசர் ஒரு பைசாக்கூடக் கொடுக்க முடியாதென மறுத்து விட்டார். யுத்த நிதி தராத ஒரே முதலாளி அவர் தான்.

1939 இந்தி எதிர்ப்புக் காரணமாகக் காங்கிரசை விட்டு விலகியபின், தியாகராசர் தமிழ் நலம் காக்கும் தனிப்போரில் தன்னை மறந்து ஈடுபட்டார். இந்தித் திணிப்பு வந்த போதெல்லாம் எரிமலையாக வெடித்தார். ஆலைப் பெருக்கத்திலும் கல்வி ஆக்கத்திலும் அவர் தொண்டுள்ளம் திரும்பியபின், தீவிர அரசியலை விட்டுப் பெரும்பாலும் ஒதுங்கியே இருந்தார். தன்னுடைய அரசியற் கருத்துக்களை அவ்வப்பொழுது கட்டுரை களாகவும் கையேடுகளாகவும் வெளியிட்டு வந்தார். அவர் தொடங்கி நடத்திய 'தமிழ்நாடு' இதழ் அவருடைய எண்ணங்களை ஏந்திச் செல்லும் வாய்க்காலாகவும், உணர்ச்சிகளைத் திசை திருப்பிய வடிகாலாகவும் அமைந் திருந்தது.

இதற்குள் இந்திய அரசியலில் எத்தனையோ மாற் றங்கள் ஏற்பட்டு விட்டன. நாடு விடுதலை பெற்றதைத் தொடர்ந்து பலவகையான ஆதிக்கப் போட்டிகள் எல்லா மட்டத்திலும், மிக மட்டரகமாக அரங்கேறி வந்தன.

தமிழ்நாட்டிலும் கோஷ்டிச் சண்டை. திருப்பரங்குன்றத்தில் நடைபெற்ற 'புகழ்பெற்ற' மாநாட்டுப் போக்கை எதிர் கால இந்திய அரசியல் நடப்புக்கு ஒரு சூசகமான அறிவிப்புப் போலக் கருதினார்.

தேசீய மொழிக் கொள்கை, மதுவிலக்கு முதலியவற்றில் மகாத்மாவின் கருத்துக்களோடு முரண்பட்டு நின்றாலும் தியாகராசர் தனது மானசீகத் தலைவராயிருந்த காந்தியடிகள் கொல்லப்பட்ட செய்திகேட்டுப் பெரிதும் துன்புற்றார். அடுத்த சில நாட்களில், மதுரையில் நடந்த தமிழ்நாடு ஜவுளி வர்த்தகர் 2வது மாநாட்டுத் தலைமை யுரையில் தன் உணர்ச்சிகளை யெல்லாம் புலப்படுத்திப் பேசினார்:

"இன்று அருமைத் தந்தையைப் பறிகொடுத்த ஆதர வற்ற பிள்ளைகளைப் போல் நாம் உலகம் போற்றும் உத்தமரை இழந்து உள்ளம் உருகி துன்பக் கடலில் மூழ்கி யிருக்கின்றோம்."[1] எனத் தொடங்கிக் காந்தியடிகளின் சிறப்பையும் அவரோடு தாம் கொண்டிருந்த தொடர்பையும் நினைவூட்டிப் பேசினார்.

மகாத்மாவிடம் தாம் கொண்டிருந்த மரியாதையின் நினைவாக அவர் வாரம் ஒருநாள் உபவாசம் இருந்தார். புலால் உணவு கொள்ளாதிருந்தார். மதுவைச் சுவைத்தறியா விரதம் கொண்டார். எல்லாவற்றிற்கும் மேலாக 'எளிய வாழ்விலும் உயர்ந்த சிந்தனையிலும்' மனம் பற்றி நின்றார்.

## தேர்தலில் தோற்றது :

தீவிர அரசியலை விட்டு ஒதுங்கி, ஒதுங்கி நின்ற தியாகராசரை எப்படியும் அரசியல் மேடைக்கு மறுபடியும்

1. 2ஆவது மாநாடு - மதுரை 15-2-1948 கருமுத்து தியாகராசன் தலைமைப் பேருரை

கொண்டு வரவேண்டுமென்ற முயற்சி எப்படியோ வெற்றி பெற்று விட்டது. சுதந்திர இந்திய அரசின் தொழிற் கொள்கை, மொழிக் கொள்கை, மத்திய மாநில ஆட்சி உறவு, பொருளாதாரக் கோட்பாடுகள் ஆகியவற்றில் எல்லாம் கடுமையான கருத்து வேறுபாடு கொண்டிருந்த தியாகராசரை எதிர் அணிக்குக் கொண்டு வரப் பல தலைவர்கள் முயன்றனர்.

1952இல் பொதுத் தேர்தல் வந்தது. மத்தியிலும் மாநிலங்களிலும் காங்கிரசுக் கட்சி தளர்ந்து நின்ற நேரம் அது. ஆச்சாரியா கிருபளானி போன்றோர் அதைவிட்டு வெளியேறி பிரஜாசோசலிஸ்ட் கட்சியினை அமைத்திருந்தனர். காங்கிரசுக்கு எதிர் அணியாக அனைத்துச் சக்திகளையும் திரட்டும் முயற்சி பெருகி வந்தது. இத் தேர்தலில் மதுரையில் கோயங்கா எனும் பத்திரிக்கை முதலாளியை நிறுத்த முடிவு செய்தது காங்கிரஸ். இங்கே ஆள் இல்லாமலா இவரைக் கொண்டு வந்து மதுரையில் நிறுத்துகிறார்கள் எனப் பல தொண்டர்கள் வேதனைப்பட்டனர். அப்போது மதுரையில் தினத்தந்திப் பத்திரிக்கையினை நடத்தி வந்த திரு. சி. பா. ஆதித்தன், தியாகராசரை மிகவும் வற்புறுத்தித் தேர்தல் களத்தில் இறங்கச் செய்து விட்டார். பிரஜா சோசலிஸ்ட் கட்சியின் சின்னத்தில் தமிழக மக்களின் உரிமை உணர்வை நம்பி, அவரும் அவருடைய மக்கள் இருவரும் தேர்தலில் போட்டியிட்டனர். தியாகராசர், சுந்தரர், மாணிக்கவாசகர் எனும் மூவருக்கும் தேர்தல் அடையாளச் சின்னமாகக் 'குடிசைப் பெட்டி' தரப்பட்டது. எதிரிகள் இதனைத் தமக்குச் சாதகமாக நன்கு பயன்படுத்திக் கொண்டனர். '' மாளிகை வாசிகளான தியாகராசரும் மைந்தர்களும் குடிசை கேட்பதை நம்பாதீர்கள் '' எனப் பிரச்சாரம் செய்தனர். ஈ. வே. ரா. பெரியார், தியாகராசர் பாராளுமன்றத்திற்குத் தேர்ந்தெடுக்கப் படுவதால் தமிழகம் பெறக்கூடிய நன்மைகளை எடுத்துச்

சொல்லிக் கூட்டங்கள் போட்டார். என்றாலும் தேர்தல் முடிவு 'அரோகரா' ஆகிவிட்டது. "அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர் அரோகரா" என வென்றோர் முழக்க மிட்டனர்.

## தொழிலுக்கு நல்லது:

தியாகராசர் தேர்தலில் தோற்றதும் தமிழ்நாட்டுத் தொழிலுலகிற்கு நல்லதாகவே அமைந்தது. அரசியலில் சென்றிருக்க வேண்டிய கவனத்தை ஆலையமைப்பில் அவர் திருப்பினார். சிலைமான், பரவை, தேனூர், கப்பலூர், கோவில்பட்டி, சூலக்கரை, கோவை ஆலைகள் எல்லாம் மீனாட்சி ஆலை பெற்றெடுக்கும் பேறுபெற்றாள்.

தியாகராசரை மூன்றாம் முறையாகத் தீவிர அரசியலுக்கு இழுக்கும் முயற்சியும் தோற்றுப் போனது. இந்த முறை அவ்வாறு முயன்றவர் மூதறிஞர் ராஜாஜி அவர்கள். அவர் தொடங்கிய சுதந்திராக் கட்சியின் மாநில மாநாடு மதுரையில் நடந்தது. அதில் பங்கேற்க வந்த ராஜாஜி தியாகராசரின் இல்லம் சென்று சுதந்திராக் கட்சியில் சேர வருமாறு வற்புறுத்தினார். ராஜாஜியின் நுட்பத்தை யெல்லாம் தன் மனத்தராசில் எடை போட்டுப் பார்த்துக் கொண்டிருந்த தியாகராசர் சுதந்திராக் கட்சியில் சேர இணங்காததோடு, கட்சிக்கென நிதியளிக்கவும் விரும்ப வில்லை. ஜெயப்பிரகாஷ் நாராயணனுடன் அன்புறவு பூண்டிருந்தார், அண்ணாவை மதித்தார்.

அரசியலில் தொண்டாற்ற முற்படுவது வேறு, புகழ் பெற ஆசைப்படுவது, வேறு. தியாகராசர் தொண்டாற்றத் தோதான வாய்ப்புக்கள் கிட்டவில்லை. எப்படியும் உட் புகுந்து புகழ் பெறவேண்டுமென்ற ஆசையும் அவருக்கு

இல்லை. அதெல்லாம் அரசியல் வாதி (வியாதி) களாகப் பிறப் போர்க்கே வளர்வோர்க்கே, வாழ்வோர்க்கே அமைவன. என்றாலும் கட்சி எல்லைகள் எனும் கட்டுக்கோப்பிற்குள் அமையாத தியாகராசர், அனைத்துக் கட்சியினராலும் மதித்துப் போற்றப்பட்டார்.

தியாகராசர் காலமெல்லாம் தொழிலமைப்பு முயற்சி களில் பறந்து பறந்து திரிந்தார். அவர் பாடுபட்டு அமைத்த அந்தப் பறவைக் கூடு, ஒன்றாய்ப் பலவாய்ப் பரவி வந்தது. 'மீனாட்சி மில்' எனும் செல்வமகள் பெற்ற செல்வங்கள் தாய்க்கூட்டைச் சுற்றி நின்று புகழ் பாடி வந்தன. ஆனால், இந்தத் தியாகராசர் எனும் பறவைக்கூடு ஒரு தடவை பாம்புப் புற்றாக மாறிச் சீற வேண்டிய திருப்பம் தமிழக அரசியல் போக்கில் ஏற்பட்டது. தியாகராசர் சிறை புகவும் சித்தமாயிருந்தார்.



" உன் கைகள்
தொட்டவுடன்
இங்கே
தொழில்கள் வளர்ந்தன "
மு. மேத்தாவின் புதுக் கவிதை

# ஆலையும் ஆக்கமும்

## 7

ஒரு பாட்டு :

" கல்லெல்லாம் மாணிக்கக் கல் ஆகுமோ ?
மில்லெல்லாம் மீனாட்சி மில் ஆகுமோ "

என்பது அக்காலத்தில் மதுரைக் கிராமப் புறங்களில் பிரபல மானதொரு பாட்டாக முழங்கி வந்தது. அந்த அளவுக்கு மீனாட்சி மில் புகழ்பெற்று வந்தது.

கல்லைக் கலையாக்கி வடித்துள்ளதொரு சிற்பத்தைப் பார்க்கையில் அதனைச் சமைக்கச் சிற்பி பட்ட பாடுகளைக் கருதிப் பார்க்க நம்மால் முடிவதில்லை. அதுபோல மில்லைத் தொழிலாக்கித் தர அதன் சிற்பி பட்ட பாடுகளும் நமக்கு ஒருவர் சொல்லாமல் தெரிவதில்லை.

விடுதலை பெற்ற பின்னர் இப்போதெல்லாம் தொழில் களைத் தொடங்கவும் முதலீடுகளைத் திரட்டவும் பலவகை ஆக்கங்கள் அரசு முறையில் தரப்படுகின்றன. ஆனால் ஆங்கில ஆட்சிக் காலமாகிய அன்று, அவர்களுக்குப் போட்டி போலத் தொடங்கப் பெற்ற தொழில்களுக்கு அரசின்

உதவியும் இல்லை; மக்களின் அனுசரணையும் இல்லை. தானே கையூன்றிக் கரணம் போட வேண்டிய சங்கடமே ஒவ்வொரு தொழில் முனைவோர்க்கும் ஏற்பட்டது.

## ஒரு சூழல் :

பஞ்சாலைத் தொழிலில் வெள்ளையரின் போட்டியும் சப்பானின் எதிர்ப் போட்டியும் இந்தியத் தொழிலை இவ்வாறு இருபுறமும் நெருக்கிவந்த காலம் அது. 1880ஆம் ஆண்டளவில், இந்தியாவில் நூல் நூற்கவும் துணி நெய்யவும் ஆலைகள் ஏற்பட்டன. ஆங்கில நாட்டு ஆலைகளை விட நம்நாட்டு ஆலைகள் மலிவாக உற்பத்தி செய்ய ஆரம்பித்தன. பிரிட்டிஷ் துணிகளுக்குப் பலவிதச் சலுகைகள் காட்டியும் பயனில்லை. அங்கே 1929 முதல் 1955 வரையில், நூல் ஆலைக்கதிர்களின் எண்ணிக்கை 500 இலட்சத்திலிருந்து 350 இலட்சத்திற்குக் குறையத் தொடங்கிவிட்டது. உலகப் போரின் பலனாக, சப்பானில் நூற்புக் கதிர்களின் எண்ணிக்கை 230 இலட்சத்திலிருந்து 160 இலட்சம் ஆகி விட்டது. ஆனால் இந்தியாவின் கதிர்கள் 200 இலட்சத்தி லிருந்து 250 இலட்சத்திற்கு உயரத் தொடங்கின. இந்தியப் பஞ்சாலைத் தொழில் உலகிலேயே முக்கியமானதொரு இடம் பெறும் அளவுக்கு வளரத் தொடங்கி விட்டது. அப்போது தென்னகத்தில் கோவையில் சில ஆலைகள் அமைக்கப் பட்டன.

இந்தச் சாதகமான சூழ்நிலைதான் தியாகராசர்க்கு ஆலைத் தொழிலில் அடியெடுத்து வைக்க உற்சாக மூட்டியது. கல்யாணம்ஜி ராம்ஜி தொடங்கிய 'மீனாட்சிமில்' எனும் பெயரை அப்படியே ஏற்றுப் புதிய பங்குதார்களைச் சேர்த்து முற்றிலும் புதியதொரு கட்டமைப்பில் மீனாட்சி மில்லைத் திறக்க முற்பட்டார்.

ஆலை வளர்ச்சிக்குச் சாதகமான சூழல்களமைந்த ஆமதாபாத், பம்பாய் போன்ற இடங்களைத் தேர்தெடுக்காமல், தமிழ் நாட்டிலேயே நிறுவ முடிவு செய்தார். இலங்கையில் பிழைப்புத்தேடி இன்னல்பட்டுழந்த மக்களிடை வாழ்ந்தபோதே தன்னால் முடிந்த அளவு ஏதேனும் இவ்வகையில் செய்ய வேண்டுமெனக் கருதியிருந்தார் இந்தியாவிலேயே சம்பாதிக்க முடியும் எனத் துணிவு கொண்டார்.

## ஒரு கருத்து :

ஒரு தொழில் வளர்ச்சிக்கு உதவக் கூடிய அடிப்படைக் காரணிகளுள் ஒன்று தொழிலாளர் திறமை. சப்பான் நாட்டவரின் உற்பத்தித்திறன் உலகறிந்த ஒன்று. இயந்திர ஆற்றல் எவ்வளவு தான் பெருகினாலும் தனி நபர் நுட்பத்திறத்திற்கும் சிறப்பிடம் உண்டு என்பதை அன்றே கண்டறிந்து ஒவ்வொரு துறையிலும், ஒவ்வொரு நிலையிலும் அதனை ஊக்கி வளர்த்து வருபவர்கள் அந்நாட்டவர் ஆவர். அங்கே தான் தொட்ட வேலை முடிய வில்லை என்றால், எட்டுமணி நேர மணி அடித்தாலும்கூடக் கருவியைக் கீழே வைத்து விட்டுக் கைகழுவி வெளியேற எந்தத் தொழிலாளியும் விரும்ப மாட்டான், தன் கைகளாற் செய்யப்பட்ட பொருளின் தரத்தைப் பிறர் பாராட்டக் கேட்டுப் பெருமையுறுவது சப்பானியர்க்குரிய தேசீயப்பண்பு.

இந்தப் பண்பு அக்காலத்தில் நம் நாட்டிலும் இருந்தது. குசராத்தியர் பொறுமையாக வேலைப்பளுவை ஏற்றுச் சலிக்காமல் உழைப்பார்கள். (ஆமதாபாத் ஆலைகளின் ஆரம்ப காலத்தோற்றத்திற்குக் காரணம் இதுவே) அது

போலத் தமிழ் நாட்டவரும் கட்டுக் கோப்புடன், பாடு பட்டுழைக்கக் கூடியவர்கள் எனப் புகழ் பெற்றிருந்தனர். 1 இத்தகைய திறமையுடையோர்க்கு வேலை வாய்ப்பளிக்கத் திட்டமிட்டார் தியாகராாசர்.

## ஒரு சாண் :

1921 இல் மீனாட்சி மில்ஸ் லிமிடெட்டின் நிறுவன டைக்டர் ஆனார். மீனாட்சி மில் துவங்கி விட்டது. கட்டட வேலை. இயந்திரக் கட்டுமானம், கச்சாப் பொருள் கொள் முதல், உற்பத்தி நிலைகள், விற்பனைத் துறைகள் ஆகிய அத்தனையிலும் நேரடிக் கவனம் செலுத்தினார். 1924இல் கம்பெனியின் நிர்வாகப் பொறுப்பைத்தானே முழுமையாக மேற்கொண்டதும், விரிவாக்கத் திட்டங்களை வகுத்தார். புதிய பங்குதாரர்களைச் சேர்த்தார். இரவும் பகலும் மில்லே நினைப்பானார். ஆனாலும் கூடச் சாண் ஏறினால் முழம் வழுக்கி விடுவார்.

## ஒரு சம்பவம் :

ஆங்கில முதலாளிகளின் போட்டி ஒருபுறம், தனது நாட்டுப்பற்றால் ஆங்கில அதிகாரிகளைப் பகைத்துக் கொண்டது மறுபுறம், வடநாட்டு ஆலைகளின் வரவு இன்னொருபுறம் என 1924 முதல் 1939 வரை தியாகராசர் திண்டாடிப்போனார். பஞ்சுக் கொள்முதலில் நட்டம், உற்பத்தியில் தேக்கம், விற்பனையில் முடக்கம் எனத் தொட்ட துறையெல்லாம் சறுக்கி இழுத்துக் கொண்டே

---

" ... As a people are known for their discipline, hard-working nature, thrirfness and ability to work as a team." Quoted by a missionary.

போனது. தொழிலாளர்களுக்கு வாரச் சம்பளம் போடவே இழுபறியாகிவிடும். வியாழக்கிழமை வந்துவிட்டால் தூங்க மாட்டார். சாப்பிடக்கூடமாட்டார். தனக்கு வேண்டிய செட்டிநாட்டுப் பிரமுகர்களிடம் சென்று கைமாற்றுக் கடன் வாங்கி வருவார். கள்ளிக்கோட்டை சா. வா. ராம. ராம., கல்லல் ஆ. மு., தேவகோட்டை அன்பர். புதுவயல் எ. மு. போன்றவர்கள் பலசமயங்களில் கை கொடுத்தாலும் பலர் பிறசமயங்களில் கைவிரித்த போதெல்லாம் கலங்காமல் திரும்பி வருவார். எப்படியோ சமாளித்துக் கொள்வார். ஒருமுறை செட்டிநாட்டுத் தனவணிகப் பிரமுகரிடம் அவசர உதவி கேட்டுப்போயிருந்தார். வழக்கமாக உடனே உதவி செய்யும் அவர், மறுநாள் அதிகாலையில் வருமாறு சொல்லி விட்டார். நேரமோ இருட்டி விட்டது. மதுரைக்குத் திரும்பிவிட்டு மறுநாள் மீண்டும் செல்வதென்றாலும் சிரமம். தியாகராசர் என்ன செய்தார் தெரியுமா? அதே ஊர்க் கோடியில் உள்ள ஐயனார் கோவிலருகில் இரவெல்லாம் தனியாகக் காரில் பட்டினியாகத் தங்கிவிட்டு, விடியற் காலையில் அந்தக் குளத்திலேயே குளித்துவிட்டு மறு படியும் அந்தப் பிரமுகரைச் சந்திக்கப்போய் அவரை வியப்பில் ஆழ்த்திவிட்டாராம். அவர் பணம் தந்துவிட்டு ''அடுத்த வாரம் வராதேப்பா!'' என்பார். தியாகராசர் அதற்கடுத்த வாரம் மறுபடியும் போய்நின்றுவிடுவார்.

இவர் பட்ட பாடுகள் பங்குதாரரிடையே அவநம்பிக் கையை ஏற்படுத்தத் தொடங்கின. டிவிடெண்ட் தரவில்லை எனப் புரளி செய்யத் தொடங்கிவிட்டார்கள். அம்மாதிரித் தகராறு செய்தோரையெல்லாம் சமாதானப்படுத்த முயன்-றார். வரிக் கட்டாமையாலும் வட்டி தராமையாலும் அவருடைய வீடு பலதடவை ஏலத்திற்கு வந்துவிட்டது.

ஒவ்வொரு தட்டவையும் எப்படியோ விழுந்து எழுந்துவிடுவார். ''வேறு யாராவது இருந்திருந்தால் அச் சிரம தசையில் எல்லாவற்றையும் போட்டுவிட்டு ஓடியிருப்பார்கள்'' என்பார் பங்காளிச் செட்டியார் திரு. அழகப்பர்.

## ஒரு மேற்கோள் :

ஆனால் தியாகராசரின் அஞ்சாமையும் ஆக்கநலமும் அவருக்குத் தக்கதுணையாயின. எதற்கும் கலங்காமல் காலவெள்ளத்தில் நீந்தினார். எதிர்நீச்சலிட்டார். மீனாட்சி மில்லில் கைத்தறிப் பிரிவும் வந்தது. அதன் 4 முழம், 8 முழம் வேட்டிகள் பிரபலமாகிவந்தன. தியாகராசர் தொழில் நுட்ப உணர்வோடு ஆலையை நிருவகித்தார். ஊடும்பாவும் அமையும் முறை, அங்குலத்திற்கு இத்தனை இழை என்னும் கணக்கு, என்பனவெல்லாம் அவருக்குக் கை வந்த கலைகளாயின. நூற்புத் தறிகளைத் தானே கழற்றி மாட்டி விடுவார். தொழிலாளர் பிரச்சினைகளும் அவ்வப் போது தலைதூக்கின. நாட்டு விடுதலைப் போரின் ஒரு பகுதியாகப் பலமுறை வேலை நிறுத்தங்கள் நடந்தமையால் நட்டங்கள் ஏற்பட்டன. இவற்றையெல்லாம் ஏற்றுக் கஷ்டப் பட்டு மில்லை நடத்தி வந்தார் தியாகராசர்.

பொருளாதாரத் துறையில் தான் பட்ட சிரமங்களைப் பற்றித் தியாகராசரே ஒரு கூட்டத்தில் வெளிப்படையாக இவ்வாறு பேசினார் :

''அரும்பொருள் ஈட்டப் பலவாறாக அல்லற்பட்டுக் கடன் என்னும் கடலில் மூழ்கி, மனம் கலங்கி விடாமுயற்சியின் பயனாக ஒருவாறு கரை சேர்ந்தவர்களின் திருவாளர்

உ. அ. பெரி. மு. அருணாசலம் செட்டியார் என்னினும் முன்னவர் ஆவார். [1]

## ஒரு முயற்சி :

மீனாட்சி ஆலையில் பல தொழில் நுட்பத் திறங்களைக் கொணர அரும்பாடு பட்டார். அறிவியல் திறத்தால் உருவான நூற்பு, நெசவுக் கருவிகளைத் தன் ஆலையில் அமைப்பதில் முன்னோடியானார். [2] சப்பானிலும் முன்னணி நாடுகளிலும் இயந்திரத் தறிகளையும் நூற்புக் கருவிகளையும் கொண்டு நான்கைந்து மடங்கு உற்பத்தியைப் பெருக்கி யிருப்பது போல இங்கும் செய்ய முடியும் என மெய்ப்பித்தார். அப்போது, ரிங் ப்ரேம்ஸ் இந்தியாவிலேயே செய்யப் பட்டன. சில புதிய கருவிகளை சப்பானிலிருந்தும் சுவிட்சர்லாந்தி லிருந்தும் தருவிக்கச் சிலர் முயன்றபோது அதை அரசாங்கம் தடுத்து விட்டது. சப்பான், ஒசாகாவிலிருந்த நிட்டோ இரும்புத் தொழிற்சாலையிலிருந்து ( the Water tube boilers and the Casablanca system of spinning - a Ring Frame with Super High Drafting") என்பனவற்றை மாதிரியாக

---

1. பள்ளத்தூர் யூனியன் கிளப் வெள்ளி விழாவில் (21-8-55) ராவ்பகதூர் உ. அ. பெரி. மு. அரு. உருவப்படத்திறப்புக்குப் பின் பேசியது. அறச் செயலாலும் ஆள்வினைத் திறத்தாலும் பெயர் பெற்ற உ. அ. குடும்பத்திற் பிறந்த அரு. செட்டிநாடு மட்டுமின்றிச் செந்தமிழ் நாடெங்கணும் தொழிலால் சிறந்து விளங்கியவர்; இலங்கை, பர்மா வாணிகமுடையவர்; உடுமலைப் பேட்டையில் வெங்கடேசா நூலாலை நிறுவியவர்; தேயிலை, ரப்பர்த் தோட்டங்களின் உரிமையாளர்; இந்தியன் வங்கி ஆட்சிக்குழு உறுப்பினராயிருந்தவர்; பொதுப் பணியிலும் கல்விப் பணியிலும் முன் நின்றவர்.

2. "The world is so helped by Science that without it, not only can we not advance or progress, but we shall be left far behind the rest of the world"

Need for New Inventions in Texitile Industry - Karumutty

மீனாட்சி ஆலைக்கு அனுப்ப முன்வந்ததை இந்திய அரசு பிற்காலத்தில் தடுத்துவிட்டாலும் கூட, தியாகராசர் தானே உள்ளூர் நிபுணர்களைக் கொண்டு பல மேம்பாட்டு உத்திகளை வெற்றிகரமாகக் கையாண்டார்.

என்றாலும் பணக் கஷ்டம் தீர்ந்தபாடில்லை. சப்பானும் போரில் குதித்து விட்டதால், எங்கும் எதிலும் பெருந் தட்டுப் பாடு. பர்மா, மலேயா அடைபட்டு விட்டதால், மில்லில் சேர் சேர்ந்தவர்களில் பலர் தம் பணத்தைத் திருப்பிக் கேட்டு நச்சரிக்கத் தொடங்கினர். தியாராசர்க்கு ஒன்றும் புலப்பட வில்லை. மீனாட்சி ஆலையை அப்படியே ஹார்வி மில்காரர்களிடம் ஒப்படைத்துவிட முடிவு செய்து விலையும் பேசி விட்டார். தஸ்தாவேஜுகளை யெல்லாம் ஒரு காரில் அள்ளிப் போட்டுக்கொண்டு அவசரம் அவசரமாக ஹார்வி மில்லுக்குப் புறப்பட்டார். மில்லை விட்டுப் புறப்பட்டு வந்து கொண்டிருக்கையில் சுப்பிரமணியபுரம் ரயில்கேட் மூடப்பட்டிருந்தது. நெடு நேரம் திறக்கவில்லை. காரைத் திருப்பச் சொல்லி மில்லிலிருந்து போன் செய்து ஹார்வி மில்காரர்களை அங்கு வரச் சொல்லக் கருதினார். திரும்பி வருகையில், தன் ஆலைக்கு முன்னால் இருந்த ரயில்வே லெவல் கிராசிங்கும் மூடப்பட்டிருந்தது. இந்தச் சகுனத் தடையால் ஏதோ நன்மை இருக்கிறது என அவருடைய உள்மனம் சுட்டியது. மீனாட்சி மில்லை விற்கும் முடிவைக் கைவிட்டார். மீண்டும் எதிர் நீச்சலிடத் தியாகராசர் தயாராகிட்டார்.

## ஒரு உணர்வு :

எத்தனையோ இடர்ப்பாடுகளின் ஊடே மீனாட்சி ஆலை காலூன்றி விட்டது. இச்சமயத்தில் மற்றொரு ஆலை நகராக வளர்ந்தது வந்த கோவை மீது தியாகராசர்

பார்வைபட்டது. அங்கு வாய்ப்பாகப் பழைய ஆலை ஒன்று இவர் கைக்கு வந்தது. தம் நண்பர் புதுவயல் திரு எ. மு. நிதி உதவியுடன் கோவை, சரோஜா ஆலையின் நிர்வாகப் பொறுப்பை 1935இல் ஏற்றார். மினாட்சி மில்லின் தரத்திற்கு அதனையும் உயர்த்த அரிதின் முயன்றார். பிறருக்காக வாங்க முற்பட்டது. இவரிடமே வந்து சேர்ந்து விட்டது. இந்த சரோஜா ஆலையை வாங்கிய நாள் தொட்டுப் பல ஆலைகளை இணைத்துச் செயல்படுத்தும் இலட்சியக் கனவொன்று அவர் மனதில் எழுதரிய சித்திரமாக விரியத் தொடங்கியது. உலகப்போர் மூண்டு சர்வதேசத் நட்டுப் பாடு வரக்கூடும் என்ற முன் உணர்வும் அவரிடம் பளிச் சிட்டது.

1939க்குப் பின் போர் மூண்டாதாலும், வெளிநாட்டுத் துணி இறக்குமதி நின்று போனதாலும், உள்நாட்டுத் தேவை மிகுந்ததாலும் துணிகளுக்குக் கிராக்கி ஏற்பட்டது. ஆளுக்கு இவ்வளவு என அளந்து தரும் ரேஷன் வந்தது, இதனால் ஆலைத் தொழிலுக்கு வசந்த காலம் வந்தது. 1943இல் மணப்பாறை தியாகராசர் ஆலை உருவாகத் தொடங்கியது.

**ஒரு கதை :**

இந்தியாவில் 1942 சுதந்திரப் போர் மூண்டது. தலைவர்களும் தொண்டர்களும் சிறைக்கோட்டம் ஏகினர். போர் வலுப்பெற்றது. இதனால் ஒரு புறத்தில் ஆலைகளை நடத்த முடியாத இடர்ப்பாடும், வேறொரு புறத்தில் புதிய தொழில்களை உருவாக்கும் எண்ணங்களும் ஏற்பட்டன. புதுக்கோட்டை போன்ற தனியரசில் புதுத் தொழில் தொடங்குவோர்க்குப் பல சலுகைகள் தரப்பட்டன.

ஆனால் இந்திய சாம்ராஜ்ஜியப் பரப்பில் நிறுவப்படும் தொழில்களுக்குப் பல நிபந்தனைகள் விதிக்கப்பட்டன.

செட்டி நாட்டுப் பகுதியோடு ஒட்டி அமைந்த புதுக் கோட்டை 'ஸ்டேட்டில்' சில முயற்சிகளைத் தொடங்கத் தியாகராசர் முனைந்தார். பின்னாளில் நமனசமுத்திரம் மில்லும், காவேரி மில்லும், நூல் வணிகத்திற்கான புதுக்கோட்டை கம்பெனியும் இவரது செல்வாக்கிற்குள் வரும் அடித்தளத்தை மணப்பாறை தியாகராசர் ஆலை ஏற்படுத்தியது. மணப்பாறை எனும் ஊர் அமைந்திருப்பது திருச்சி மாவட்டத்தில்; ஆனால் தியாகராசர் ஆலை நிறுவப் பட்டிருப்பது புதுக்கோட்டை மண்ணில். இரு எல்லைகளும் சந்திக்கும் இடத்தைத் தேடிப்பிடித்துத் தேர்ந்தெடுத்து இந்த ஆலையை நிறுவினார். இதற்குரிய கருவிகள் எங்கிருந்து வருவிக்கப்பட்டன தெரியுமா? அது ஒரு சுவையான கதை.

தென்னகத்தில் நிறுவப்பட்ட ஆலைகளின் தொடர்பாகத் தியாகராசர் அடிக்கடி வடமாநிலங்கள் செல்வார். அங்கு நடத்தமுடியாமல் விற்கக்கூடிய ஆலைகள் பற்றி விசாரித்து வைத்துக் கொள்வார். போர் நடந்து கொண்டிருந்த போது வடக்கே ஒரு மில் விற்பனைக்கு வந்தது: தியாகராசர் சென்று விலைபேசி முடித்துக்கொண்டு முற் பகலில் ஒப்பந்தத்தில் கையெழுத்து வாங்கிக்கொண்டு முன்பணமும் கொடுத்துவிட்டார். பிற்பகலில் பிறவற்றைப் பார்த்துக் கொள்ளலாம் எனப் பகல் உணவுக்கு விடுதிக்கு திரும்பிவிட்டார். அதற்குள் உலகப் போரில் ஒரு திருப்பம் ஏற்பட்டுவிட்ட செய்தி வானொலியில் வந்ததால் மில்லை விற்க முடிவு செய்தவர் தயங்கினார்; மறுத்தார். தியாகராசர் இணங்கவில்லை. கோர்ட் வரை சென்று வென்றார்.

அந்த ஆலைக் கருவிகள் புதுப்பிக்கப்பட்டு மணப்பாறை ஆலைக்கு முதலில் கொணரப்பட்டன. 1

**ஒரு கூட்டு:**

இந்த அணியில் அடுத்துச் சேர்ந்தது சேலம் ராஜேந்திரா மில்ஸ். இதை நடத்திவந்த திரு ராதாகிருஷ்ண நாயுடு முதலிய உள்ளூர்ப் பிரமுகர்கள் விற்றுவிட நினைத்தனர். ஏ, பி எனும் இரு யூனிட்டுகளாக வளர்ச்சி பெற்ற இப்பெரும் ஆலை மீனாட்சி மில் குருப்பிற்கு வலிவும் வனப்பும் தந்தது. தியாகராசரின் நேரடி நிர்வாகத் தாலும் மானேஜிங் ஏஜன்சி முறையாலும் லாபம் பெருகியது.

1953இல் இருந்து தென்னாட்டின் ஆலையரசர் எனப் புகழ்பெறும் இலக்கு நோக்கி நடைபோடத் தொடங்கினார். நாடு விடுதலை பெற்ற அமைதிச் சூழலால் ஏற்பட்ட தொழில் வளர்ச்சி அவருக்குத் துணை செய்தது. ஏற்கனவே கல்விப் பணிகளுக்கு கோடிக் கணக்கில் வழங்கிய புகழும் வந்து சேந்தது. தியாகராசர் அரசுக்கெதிராக அவ்வப்போது நடத்திய அறப்போர்களும் அவரை இன்னார் என இனங்காட்டின. தியாகராசர் தொட்ட தெல்லாம் பொன்னாகிக் கொண்டிருந்தது. நாளடைவில் பங்குதாரர்களின் பங்குகளும் கணிசமான அளவுக்கு இவர் கட்டுப்பாட்டிற்குள் வந்து சேர்ந்தன. லிமிடெட் கம்பெனிச் சட்டப்படி இருக்க வேண்டிய பங்குகளே பிறர் வசம் இருந்தன. இதனால் தங்கு தடையின்றித் திட்டமிடவும் உடனே துணிந்து அதில் இறங்கவும் அவருக்குத் துணிச்சல் பிறந்தது.

---

1. 1927இல் இருந்து தியாகராசரின் அரிய நண்பரா யிருந்த திரு. சென்னியப்ப முதலியார் கூறியது. புதுக்-கோட்டை, பாண்டிச்சேரி முதலிய இடங்களில் நூற்பாலை களமைத்த தொடர்புடையவர். ஓமந்தூர் திரு. ராமசாமி ரெட்டியாரைத் தியாகராசர்க்கு அறிமுகப்படுத்தி வைத்தவர்.

தொழிற்சங்கத் தோன்றல்கள்



ஜனாதிபதி கிரியுடன் - கருமுத்து அணிவகுப்பு

செட்டிநாட்டுச்



சிற்பிகள்!

ஏ.வி.எம்.மெய்யப்பர், சி.வி.சி.டி.வே., ராஜா சர், சோமசுந்தரம் செட்டியார், கருமுத்து,
ஓ.ஏ.பிஆர்.எம்.ஏஆர்., ஏ.எம்.எம்.எம்மார்., இவர்களுடன் கருமுத்து. தி.மா.

## ஒரு திட்டம் :

விருதுநகர் டெக்ஸ்டைல் மில்ஸ், சூலக்கரை 1953இல் ஏ. வி. தாமஸ் நிறுவனத்திலிருந்து வந்திணைந்தது. ஏற்கெனவே சென்னை மாநில முதலமைச்சராயிருக்கையில் திரு. டி. பிரகாசம் கதர்த் திட்டத்தையும் கைத்தறியையும் ஊக்குவிக்கக் கருதி ஆலைத் தொழிலுக்குத் தடை விதித்திருந்தார். புதிய நூல் ஆலை கட்ட அனுமதி தரப்படவில்லை, (தந்திருந்தால் தியாகராசர் பழைய ஆலைகளை வாங்கிக் கொணர்வதற்குப் பதிலாக முற்றிலும் புதிய ஆலைகளையே அமைத்திருப்பார்.) ஏற்கெனவே உள்ள ஆலைகளும் கதிர் எண்ணிக்கையை அதிகரிக்க முடியாது.. எனவே புதிதாக ஆலைகளைத் தொடங்க விரும்புவோர் புதுக்கோட்டை, புதுச்சேரி, கொச்சி, திருவாங்கூர், மைசூர்ப் பகுதிகளை நாடிச் சென்றனர். தமிழ்நாட்டின் வளர்ச்சிக்குக் கேடான அரசின் இந்தத் தவறான போக்கை எதிர்த்துத் தியாகராசர் பல போர்களை நடத்தினார்.[1] இந்தியா முழுவதும் அப்போது 500 ஆலைகள் உள்ளன என்றும், பட்டினிலாடையும் பஞ்சிலுடையும் நெய்து பரம்பரைப் புகழ் சேர்த்த தமிழ்நாட்டின் வீதாச்சார எண்ணிக்கை மிகக் குறைவு என்றும், பம்பாய், வங்காளம், பஞ்சாப், போலத் தமிழ் நாட்டிலும் தொழில் வளம் பெருக வேண்டுமென்றும் மேடைகளில் முழங்கினார்.

---

1. ''பிரகாசம் மந்திரிசபையால் ஆலைத் தொழிலுக்கு ஏற்பட்ட அதிர்ச்சி இன்னும் தீர்ந்தபாடில்லை. புது ஆலைகள் அமைக்க முன் வந்தவர்கள் அஞ்சிப்பின் தங்கி விட்டார்கள் தொழிலைத் தேசீய மயமாக்க வேண்டுமென்று டல்லவிபாடும் அரசும், பொது உடைமைக் கட்சியினரும் புது ஆலைகள் நிறுவும் பொறுப்பை ஏற்றுத் தொழிலை நூதன முறையில் செய்து காட்டலாமே? சொல்வது எளிது, செய்வது அரிது''. தமிழ்நாடு சவுளி, நூல் வர்த்தக 2வது மாநாடு, தலைமைப் பேருரை 15-2-1948.

**ஒரு கணக்கு :**

சூலக்கரை மில்லை நூற்பாலையாக வைக்கவே கருதினார். பிரகாசம் அமைச்சரவையின் தடைச்சட்டம் காரணமாக அதனை நெசவாலையாக்கி விட்டார். மேலும் தொழில் வளர்ந்தது. மீனாட்சி மில்லோடு இணைந்திருந்த ஆலைகள், ஏசென்சிகள் ஆகியவற்றிலிருந்து ஒரு நாளைக்கு 3.5 இலட்சம் ரூபாய் உண்டியலாக வந்து குவியும் அளவுக்கு வளம் மிகுந்தது.[1]

நூற்பாலையில் சம்பாதித்த பணத்தை மறுபடியும் அதே தொழிலில் ஈடுபடுத்தினார். உலகுகண்ட முன்னணித் தொழிலதிபதிபர்களில் பலர் இவ்வாறு செய்வதில்லை. 'எல்லா முட்டைகளையும் ஒரே கூடையில் வைக்கக் கூடா தென்ற' பழமொழியையே மதிப்பார்கள். அமெரிக்கத் தொழில்மேதை ஆண்ட்ரு கார்னிகி மறுமுதலீடு செய்யத் தயங்குவார். ஹென்ரிபோர்டு, பலமில்லியன் டாலர்களைப் பத்திரமாகப் பாங்குகளிலேயே போட்டு வைக்க நினைப் பார். ஆனால் கருமுத்து இவ்வகையிலும் துணிச்சலான முடிவுகளையே மேற்கொண்டார்.

இதற்குள் கோவை, கமலா ஆலையும் இவர் வசம் வந்தது. அதை நடத்திய திரு லட்சுமய்யா நாயுடு தொடர்ந்து நிர்வகிக்க முடியாமல் தந்து விட்டார். இவ்வாறு 1954 வரை மீனாட்சி மில் எனும் நங்கை பல சகோதரியரைச் சேர்த்துக் குடும்பத்தைப் பெருக்கிக் கொண்டாள். இனி அவளே புதிய ஆலைப் பிள்ளைகளைப் பெற்றெடுக்கப்போகும் தருணம் வந்தது.

---

1. அமெரிக்கத் தொழில் மேதை ராக்பெல்லர் நிறுவனத்தின் வருமான வீதம் - ஒரு வினாடிக்கு 100 டாலர் களாம்.

**ஒரு மாற்றம் :**

1953க்குப் பின் அரசின் தொழிற் கொள்கையில் ஏற்பட்ட மாற்றங்களைப் பயன்படுத்திப் புதிய ஆலைகளைத் தொடங்கக் கருமுத்து முற்பட்டார். 1953-1957 ஆண்டு களில் சிலைமானில் ருக்மிணி ஆலையும், பரவையில் மீனாட்சி ஆலையும், தேனூரில் சிவகாமி ஆலையும், கப்பலூரில் தியாகராசர் ஆலையும் அடுத்தடுத்துப் பிறந்தன. இப்புதிய ஆலைகளின் கட்டுமானச் செலவுகட்கு மட்டும் ஒரு கோடி ரூபாய் வரை ஆயிற்று. இக்காலகட்டத்தில் கோவில்பட்டி லாயல் டெக்ஸ்டைல்சும் வந்து சேர்ந்தது. நாடு விடுதலை பெற்றதும், போர் ஓய்ந்ததும் இங்கு முதலீடு செய்திருந்த வெள்ளையர்களும் சப்பானியர்களும் தம் ஆலைகளை விற்கத் தொடங்கினர். அவ்வாறு விற்க முன் வந்த வெள்ளைக்காரரிடமிருந்து பல கைகள் மாறி வந்து 'சாசுன்மில்' எனும் லாயல் டெக்ஸ்டைலை வாங்கினார். சப்பானியர்களின் தொழில் நுட்பத் திறமையைத் தன் புதிய ஆலைகளுக்குப் பயன்படுத்திக் கொண்டார். சிலைமான் ருக்மணி ஆலையைப் புது முறையில் நிறுவ 'சங்கு செலான்' ஹமீதா, என்ற ஜப்பானிய நிபுணர்கள் உதவினர். கப்பலூர் ஆலை எல்லாவகையிலும் சிறப்புடையதாகப் புகழ் பெற்றது.

இரண்டாம் உலகப் போர் தொடங்கியதும் ஆங்கிலேயர் களின் எதிரி நாடுகளான சப்பானையும் செர்மனியையும் சேர்ந்தவர்கள் தமிழ் நாட்டில் நடத்தி வந்த நூல் ஆலை களையும் பருத்தி பஞ்சு பிரிக்கும் தொழிற்சாலைகள் பலவற்றையும் தியாகராசர் ஒப்புக்கொண்டார். விருதுநகர் ஜின்னிங் அண்டு பிரசிங் பாக்டரி, சாத்தூர், நாலாட்டின் புத்தூர், ராஜபாளையம், திண்டுக்கல், தேனி முதலிய இடங்களில் பஞ்சை அரைத்துக்கட்டிப் பொதிபோடும் தொழில்கள் எனப் பலவற்றை நிர்வகித்தார், இவையெல்

லாம் சிறிய நிறுவனங்களே ஆயினும், தியாகராசரின் ஆலை சாம்ராஜ்யத்தில் தத்தமக்குரிய சிறப்பிடம் பெற்றுத் திகழ்ந்தன. மதுரையைத் தமிழ்நாட்டு ஆலையின் தலைமை அங்காடியாக்கப் பெரிதும் உதவின.

## ஒரு சகாப்தம் :

தியாகராசரின் ஆலைத் தொழில் முனைப்பில் மற்றும் ஒரு சகாப்தம் பிறந்தது. நலிந்து நின்ற பல ஆலைகளை ஏற்று நடத்த அவர் முன்வந்தார். அவரைத் தேடிப் பல ஆலை நிர்வாகங்களும் அரசுகளும் வந்தன. ஏற்கெனவே தியாகராசர் வாங்கிப் புனர் நிர்மாணம் செய்த ஆலைகளின் வரிசையில் இவையும் அடுத்த இடம் பெற்றுக்கொண்டன.

நலிந்த ஒரு நிறுவனத்தை அரசாங்கம் ஏற்றுக் கொள்ளுதல் என்பது புதிய பெருளாதாரக் கொள்கையாகி விட்டது. ஆனல் அவ்விதம் அரசாங்கம் ஏற்று ஏராள முதலீடு செய்து பெறும் லாப ஈவு பற்றியாரும் கவலைப் படுவதில்லை. ஆனைவாய்க் கரும்பு போல அரசாங்கச் சூளைக்குள் இந்தத் தொழில்கள் போய்விட்டாலும் அவை பற்றி எடுத்துரைப்பார் இல்லை. நலியும் நிறுவனங்களை அரசு ஏற்றுத் தொழி லறியாத அதிகாரிகளைக் கொண்டு அவற்றை நடத்தத் திண்டாடுவதைத் தவிர, ஏற்கெனவே நன்கு நடைபெறும் தொழில்களுடன் நலிவுற்ற நிறுவனங்களையும் இணைத்துக் கொள்ள உதவினல் அதனல் தொழில் வளரும்; அரசுக்குத் தொல்லையும் போகும் என்பது பலரறிந்த உண்மை.

## ஒரு வழி :

அரசு முன்வருவதற்குப் பல ஆண்டுகட்கு முன்னரே நலிந்த நிறுவனங்களை மேற்கொள்ளத் தியாகராசர் புது வழிகாட்டி னார். நலிந்த ஆலைகளை மட்டுமல்ல. வங்கிகளையும் கல்விச் கூடங்களையும் கூட ஏற்றுத் திறம்பட நடத்திக் காட்டினார்.

அப்போது கேரளாவில் ஏற்பட்ட அரசு முறைகளாலும் தொழில் கொள்கைகளாலும் பல இடர்ப்பாடுகள் ஏற்பட்டு நூலாலைகள் பல மூடப்பட்டுக் கிடந்தன. கொல்லம் ஏ. டி. காட்டன் மில் எனும் பெயரில் துவக்கப் பெற்ற பார்வதி மில் முதலில் வந்தது. பின்னர் விஜய மோகினி. லெட்சுமி. அழகப்பா டெக்ஸ்டைல்ஸ் என்பன அடுத்தடுத்து வந்தன. சீதாராம் மில்ஸ் லிமிடெட் மூடப்பட்டதால் வேலை இழந்த தொழிலாளர்க்கு மறுவேலை வாய்ப்பளிக்கக் கருதிய கேரள அரசு தியாகராசரை அழைத்தது. அப்போது கேரள அரசின் தொழிற் கொள்கையில் நலம் தரும் சில மாற்றங்கள் ஏற் பட்டிருந்தன. 24000 கதிர்களுடனும் 7 1/2 லட்ச ரூபாய் பங்கு மூலதனம் போட்டும் அரசு பங்கேற்றது. தியாகராசரின் அருமை நண்பர் திரு. வி. வி. கிரி அப்போது கேரள கவர்ன ராயிருந்தார்.[1] மூன்றாம் திட்டக்கால வளர்ச்சிக்கென அப்போதைய கேரள அரசு வகுத்திருந்த பொருளாதாரக் கொள்கை, பல முதலாளிகளை அங்கு தொழில் தொடங்கப் பச்சை விளக்குக் காட்டி அழைத்தது.

### ஒரு சான்று:

இவ்வாருக, புதுக்கோட்டை நமனசமுத்திரம் ஆலையுட் பட 18க்கும் மேற்பட்ட தொழிற்சாலைகளைத் தியாகராசர் கட்டி வளர்த்து ஒரு தொழில் சாம்ராஜ்யத்தையே உருவாக்கி விட்டார். இத்தனை நிறுவனங்களையும் திறம்பட நடத்தத்

---

1. முன்னாள் ஜனாதிபதி திரு. வி. வி. கிரி தியாகராசரின் இனிய நண்பர்களில் ஒருவர். சென்னை மாநில அமைச்ச ராயிருந்த போது தியாகராசரின் பல தொழில் முயற்சிகளுக்கு ஆதரவளித்துள்ளார். மத்திய மாநில அமைச்சுப் பதவிகளை வகித்தார். இலங்கையில் இந்திய ஹைகமிஷனராயிருந்தார். கேரள கவர்னராய்ப் பணியாற்றினர். உதவி ஜனாதிபதி யாகவும் ஜனாதிபதியாகவும் பதவி வகித்த காலங்களில் கூடத் தியாகராசரின் நட்பை மறவாது போற்றிவந்தார்.

துணைபுரிந்தவை இரண்டு, ஒன்று அவரது தனித்திறம். மற்றொன்று அவருடைய நிர்வாகத்திறன். பதவிகளுக்கும் பொறுப்புகளுக்கும் தக்கவர்களையே நியமிப்பார். இனத்தவர், சொந்தக்காரர் எனும் சிபாரிசுகளுக்குப் பலியாகி விடாமல் திறமை ஒன்றையே மதிப்பார். இதனால் மீனாட்சி மில் குரூப்களில் வேலைபார்த்தவர்கள் பிற்காலத்தில் சொந்தமாகத் தொழில் தொடங்கவும் பிற நிறுவனங்களில் மதித்து வரவேற்கப்படவும் வாய்ப்புக்கள் கிட்டின. அவருடன் பணிபுரிந்தவர்களின் ஆட்சியில் இப்போது 40 ஆலைகள் வரை உள்ளனவாம்.

## ஒரு இணை:

அவருடைய அந்தரங்க உதவியாளராகவும், அமைச்சராகவும் திகழ்ந்த திரு. சி. எஸ். இராமச்சாரி குறிப்பிடத் தக்கவர். சௌராட்டிர சமூகத்தவரான இவர், ஆலைத் தொழில் நுட்பங்களையும் அதன் சிக்கலையும் நன்கு உணர்ந்தவர். அதற்கு மேலே தன் எசமானர் தியாகராசரின் மனப் பின்னல்களை புரிந்து கொள்ளக் கூடியவர். பஞ்சைத் தூரத்திலிருந்து கண்ணால் பார்க்கும்போதே அதன் தரத்தையும் உறுதியையும் நிர்ணயித்துச் சொல்லவல்லவர். தியாகராசரின் பல தொழிற் போராட்டங்களில் தோள் கொடுத்து நின்றவர். தான் பணியாற்றிய 29 ஆண்டுகளும் மிக விசுவாசமாக உழைத்தவர். [1] திரு. சி. எஸ். ஆரும் தியாகராசரும் தோற்றத்தில் ஒரே மாதிரியாக இருப்பார்கள். ஒரே மாதிரிதான் உடுத்துவார்கள். ("To gether they formed a formidable Combination") இருவரும் சேர்ந்து வெல்ல முடியாதவர்களாக விளங்கினர் எனப் போற்றுவார் திரு. சென்னியப் முதலியார்.

---

1. திரு. சி. எஸ். ஆர். 1957இல் விலகினார். தானே பல ஆலைகளை நிறுவினார். கணிசமாகக் கல்விப் பணிக்கு வழங்கினார்.

தியாகராசரின் நிர்வாகத் திறமைபற்றி அவருடன் பல்லாண்டுகள் பணிபுரிந்த அன்பர் ஒருவர் கூறுகிறார்.

" நிருவாகத் துறையில் அவரை மிஞ்சக் கூடியவர் யாரும் இல்லை என்று துணிந்து கூறலாம். நிருவாக இயல் அமெரிக்காவிலும் ஐரோப்பாவிலும் படிப்புத் துறையில் ஒரு கலையாகத் தோன்றுவதற்கு முன்னாலேயே அதன் அடிப்படைத் தத்துவங்களை நன்கு அறிந்து தமது நிருவாக அமைப்பில் அவற்றைப் பெரிதும் பயன்படுத்தியிருக்கிறார். கோடிக்கணக்கில் வரவு செலவுகள் இருந்தும் தனது சொந்தக் கணக்கில் செக் எழுதுவது தவிர வேறு கணக்குகளில் அவர் செக் எழுதவோ கையெழுத்திடவோ முற்பட்டதில்லை. உரிமை பெற்ற உதவியாளர்களைத் திறன் அறிந்து பொறுக்கிப் பொறுப்பை அவர்களிடம்விட்டு மேற்பார்வையை மட்டும் தம்மிடம் வைத்துக் கொள்வார். தம் அலுவலகங்களில் வேலை பார்க்கும் யாரையும் துச்சமாகக் கருதாமல் எல்லோருடனும் அளவளாவி விஷயங்களைக் கிரகித்துக் கொண்டு, தவறு நடக்கும் இடங்களைக் கண்டு பிடித்துக் குற்றங் குறைகளை உடனுக்குடன் களைந்தெறிவார். யாரும் அவரை ஏமாற்றிவிட முடியாது. [1]

தன் தனித்திறமையோடு தன்னைச் சார்ந்தோர் திறமையையும் சேர்த்தாளத் தெரிந்த தியாகராசரின் அறிவுரைகளைப் பல ஆலை அதிபர்கள் கேட்டுப் பயன் பெற்றுள்ளனர். அவருடைய அனுபவ உரைகளைத் தவறாகப் புரிந்து கொண்டவர்களும் தன்னிச்சையாகச் செயல்பட்டவர்களும் பெரும் நட்டத்திற்கு ஆளாகியுள்ளனர். ஒரு சான்று :-

" மதுரையில் ஒரு நூல் ஆலையை, புதிதாக இந்தத் துறையில் ஈடுபட விரும்பிய ஒரு செல்வர் விலை பேசினார்.

---

1. திரு எல். என். ஆர். சுந்தரராமன் - 'கலைத் தந்தை' பற்றிய கட்டுரையில்

அவர் தியாகராசச் செட்டியாரிடம் போய் இன்ன விலைக்கு வாங்கலாமா என்று கேட்டார். "இது மிகக் கூடுதலான விலை, இந்த விலை கொடுக்கக் கூடாது. இந்த ஆலை, வாங்கி நடத்துவதற்கும் ஏற்றதன்று" என்று தியாகராசச் செட்டியார் உறுதியாகச் சொல்லி விட்டார். விலை பேசிய செல்வர் உடனே அந்த ஆலையை வாங்கும் எண்ணத்தைக் கைவிட்டார். கைவிட்ட காரணத்தைத் தரகர்கள் அவரிடம் கேட்டார்கள். 'தியாகராசச் செட்டியாருடைய அறிவுரை' என்று செல்வர் பதில் சொன்னார். 'தியாகராசச் செட்டியார் இந்த ஆலையை எங்களிடம் விலை பேசிக் கொண்டிருக் கிறார், என்று தரகர்கள் தந்திரமாகச் சொன்னதை நம்பி உடனே அவசரஅவசரமாக அந்தச் செல்வர் அந்த ஆலையை விலைக்கு வாங்கினார். அதன் பயனாக மூன்று தலைமுறை களாகச் சேகரிக்கப்பட்டிருந்த குடும்பச் சொத்துக்களையும் புகழையும் மரியாதையையும் இழந்து அவர் கவலையால் மாண்டார். தைப் பொங்கலன்று தம் வீட்டில் பொங்கல் சோறு சமைப்பதற்குக் கூட அவருக்கு இடையூறு ஏற்பட்டது."[1] தமிழ்நாட்டில் பல புதிய ஆலைகளைத் தன்னம்பிக்கையுடன் பிறர் நிறுவ அவர் வழிகாட்டினார். அவரே தலைமை ஏற்றுப் பல புதிய ஆலைகளைத் திறந்தும் வைத்தார்.

## ஒரு சமர் :

தியாகராசர் இவ்வாறு ஆலைகளைத் திறப்பதில் மட்டும் விழாத் தலைமை ஏற்கவில்லை. தமிழக ஆலைகளின் நலம் காப்பதிலும் விடாத் தலைமை ஏற்று அரும்பணியாற்றினார். தன் சொந்த அரசோடு அவர் நடத்திய சமர்களை என்ன பெயரிட்டு அழைப்பது?

---

1. சோமலெ - கட்டுரை

''தொண்டு செய்வதில்தான் இக்காலப் புகழ் உள்ளது. ஒரு மனிதனின் சாதனைகளே அவனுக்குச் சிறந்த அணி கலன்களாகின்றன.'' என்றார் புகழ்பெற்ற ஆங்கில இலக்கிய மேதை கார்லைல்[1] தியாகராசரின் சாதனைகள் அவருக்கு மட்டுமில்லை. தமிழகத்தின் ஆலைத் தொழிலுக்கே அணிகலன்களாயின. இல்லை, இல்லை, அரண்களுமாய் அமைந்தன.

இரண்டாம் உலகப் போர் முடிவுற்ற காலத்திலிருந்தே ஆலைத் தொழிலின் சார்பில் குரல் கொடுக்கும் நிலைக்குத் தியாகராசர் தலைமை பெற்று வந்தார். வணிகமன்றங்களின் தலைவராகவும், அனைத்திந்திய ஆலைத் தொழில் மா நாட்டுத் தவைராகவும், தமிழ்நாடு நூற்பாலை நிறுவனர் சங்கத் தலைவராகவும் அவர் ஆக்கமான தொழிற் கருத்துக் களை அஞ்சாமல் சொல்லி வந்தார்.

### ஒரு தெம்மாங்கு :

போர்ப் பிற்காலத்தில் (Post war) கைத்தறிகளுக்கு ஊக்கம் தருவதற்காக விசைத்தறிகளை முடக்க வ்வண்டுமென இடைக்கால மத்திய அரசு கொண்டிருந்த தவறான கொள்கையைத் தகர்க்கத் தக்கவாதங்களை முன்வைத்தார். மேலைநாட்டுத் தொழிலாலைகளின் போட்டிக்கு எதிர் நிற்க வேண்டுமானால், இங்கே 'கைராட்டையே ஆயுதம்' எனத் தெம்மாங்கு பாடினால் போதாது எனத் துணிந்து எச்சரித்தார். மேலை நாட்டில் மெத்தவளரும் தொழில் நுட்பங்களைக் கொணர்ந்து பலருக்கும் வேலை வாய்ப்பளிக்கும் வண்ணம் நவீன மயமாக்கும் கொள்கைகளை மேற்கொள்ளுமாறு அறிவுறுத்தினார்.

---

1. "The Modern Majesty Consists in work. What a man can do is his greatest ornament" - Carlyle

அதுமட்டுமல்ல, புதிதாகத் தொடங்கப் பெறும் தொழில் களை நகர்ப்புறங்களிலேயே வைத்து விடாமல், கிராமப் புற மக்களுக்கும் வேலைவாய்ப்புத் தரும் வகையில் கிராமப் புறங்களிலும் புறநகர்களிலும் அவற்றை அமைக்க வேண்டு மென 1946இலேயே எழுதினார். "The Mills should be located well outside towns and in villages in their own interest and in the interest of the public" in Post War Textile Industry - Karumuttu, March 1946. நம் நாட்டு இளைஞர்களை உடனே வெளிநாடுகட்கு அனுப்பித் தொழில் நுட்பப்பயிற்சி பெற்று வரச் செய்ய வேண்டுமென வலியுறுத்தினார்.

### ஒரு ஆணை :

நாடு சுதந்திரம் பெற்றபின், தனியார் தொழில் களுக்குச் சில கட்டுப்பாடுகளை விதிக்க அரசு முயன்றது. அன்னிய முதலீட்டாளர்களையும் இந்தியத் தொழில் முனைவர்களையும் அரசு ஒன்று போலவே கருதியது. இதனால் பல சங்கடங்கள், அப்போது தான் கையூன்றிக் கொண்டிருந்த ஆலைகட்கு ஏற்பட்டன, தொழிலாளர்களின் உரிமைகட்காகப் போரிடும் தீவிர இயக்கங்களின் வற்புறுத் தலால் நாடெங்கும் தொழில் தகராறுகள் ஏற்பட்டன. சென்னையில் உள்ள சூளைமில், 40,164 கதிர்களுடன், 774 தறிகளுடன் ஆண்டுக் கணக்கில் மூடிக் கிடந்தது. தொழிலாளர்களுக்கு ஐந்து மாத போனஸ் தரவேண்டுமென அரசு அவசரப்பட்டு ஆணையிட்டு விட்டதால் பல ஆலைகள் அசைந்து ஆடிக்கொண்டிருந்தன. அரசின் இந்த ஆகாப் போக்கைத் தியாகராாசர் தயங்காது கண்டித்தார்.

'' நமது புதிய '' தேசிய அரசின் '' தொழிற் கொள்கை என்னவென்றால், பொன் முட்டை இடும் வாத்தைக் கொல்வது தான்.[1]

அரசு ஆணையிட்டிருப்பது போல ஆலை முதலாளிகள் போனஸ் தராவிட்டால் அந்த ஆலைகளை அரசு மேற் கொள்ளச் சட்டம் போட்டிருப்பது போல, தொழிலாளர்கள் ஒப்பந்தப்படி உற்பத்தியைப் பெருக்க உதவா விட்டால் அவர்களையும் தண்டிக்கச் சட்டம் இருக்கிறதா எனத் துணிந்து கேட்டார்.

கட்டு மீறிய தொழிற் சங்க வாதிகளால் தவறான வழிகளில் தூண்டப்படும் தொழிலாளர்களின் அத்து மீறிய செயல்களிருந்து முதலாளிகளுக்குப் பாதுகாப்பளிப்பதற்குப் பதிலாக அரசு முதலாளிகளுக்கே மேலும் தண்டனை யளிப்பது என்ன நியாயம் எனக் கேட்டு, இப்போக்கு வளர்ந்தால் எதிர்காலத்தில் தொழில் முனைப்பே நசித்து விடும் என எச்சரித்தார். (It is most painful that Government should think of enhancing the punishment of the employers instead of protecting them from the attack and violence of ungrateful labour misled by mischievous communism. Unless communism of this type is suppressed the Industry will die and the country will soon become bankrupt)

## ஒரு யோசனை :

திரு. பிரகாசம் அரசின் தவறான தொழிற் கொள்கை புதிய ஆலைகளை நிறுவும் முயற்சியைக் கெடுத்துவிட்டது.

---

1. Killing the goose that lay golden eggs'. aptly describes the policy of our "National" Government towards industry" in "Industry killed - bulletine - Karumuttu - Novr 1947

பழைய ஆலைகளைப் படுக்கச் செய்துவிட்டது. பின்னர் சென்னை மாநிலத்திற்கென 3,41,000 கதிர்கள் ஒதுக்கப் பட்டும், 1,00,000 கதிர்களைக்கூட ஓட்ட யாரும் முன் வரவில்லை. எனவே அரசின் தொழில்துறை அமைச்சராக தொழில் அறிந்தவரே இருக்கவேண்டும். அல்லது அத்தகை யவரை ஆலோசகராக அமர்த்திக் கொள்ளவேண்டும் எனக் கேட்டுக் கொண்டார்.

வேலைத் திட்டத்தோடு தொடர்பில்லாத ஊதிய உயர்வினை அரசு அவ்வப்போது அறிவித்த போதெல்லாம் அதைக் கண்டித்தார். சென்னை அரசு 1947இல் அரசு ஊழியர்க்குப் பஞ்சப்படியாக 16 ரூ. அறிவித்துவிட்டு ஆலைத் தொழிலாளர்க்கு 35 ரூ. பஞ்சப்படி தரவேண்டு மென உத்திரவிட்டது. ''இது என்ன நியாயமோ?'' எனத் தியாகராசர் கேட்டார். இதனாலன்றோ இன்று கோயம்புத்தூர், சேலம், திருச்சி முதலிய ஊர்களில் 40 ஆலைகள் ஒருமாதமாக மூடப்பட்டு நூல், துணி உற்பத்தி தடைப்பட்டிருக்கின்றது. ஊதிய உயர்வையும் வேலைத் திட்டத்தையும் ஏககாலத்தில் ஏற்படுத்தாமல், முன்பின் னாகச் செய்து அரசு ஆலைகளுக்குப் பெருங்கேட்டை விளைவித்திருக்கின்றது,[1] எனக் குற்றம் சாட்டினார்.

### ஒரு பாரபட்சம் :

மத்திய அரசின்பாரபட்சத்தாலும் தென்னாட்டு ஆலைகள் நட்டத்திற்கு உள்ளாயின. 40ஆம் நம்பருக்கும் அதற்கும் மேற்பட்ட நூல்கட்கு அரசு அதிக லாப விலையை நிர்ணயித்து விட்டு, 40ம் அதற்குக் கீழும் உள்ள நூல்களுக்கு விலையை முறையின்றிக் குறைத்தமையால், 40 நம்பருக்கு மேல் நூற்ற வடநாட்டு ஆலைகள் கொள்ளை லாபம் அடிக்க, 40க்குக்

1. 1948 வர்த்தகர் மாநாட்டுத் தலைமை உரை

கீழே உற்பத்தி செய்த தென்னாட்டு ஆலைகள் திவாலாகும் நிலைக்கு வந்துவிட்டன. இந்த 'வடக்கு வாழும்' போக்கையும் அவர் வன்மையாகக் கண்டித்தார்.

நிர்வாக முகவாண்மை (Managing Agency) எனும் பெயரால் பல நிறுவனங்களின் இலாபத் தொகைகள், இடைத் தரகர்களால் உறிஞ்சப்படுவதை எதிர்த்தும் போர் தொடுத்தார். இந்த நிர்வாக முகவாண்மையின் பொறுப்பில் இருந்த தொழிலகங்கள், பங்குதாரர்களுக்குப் பாதகமாக அமைந்தன. இதனால் நிறுவனங்கள் இழப்புக்குள்ளாயின. எனவே பங்குதாரர்களுக்குக் குறைந்த அளவு 6 சதவீத இலாப ஈவாவது தரவேண்டுமென்றும், தொடர்ந்து மூன்று ஆண்டுகள், மூன்று சதவீதத்திற்கு மேல் இலாபம் ஈட்டித்தர முடியாத ஏசன்சிகளை ரத்து செய்து தொழிலுக்குப் பாது காப்பளிக்க வேண்டும் என்றும் எடுத்துச் சொன்னார். அன்று அவை அரசுக்கு எரிச்சலைத் தந்தாலும் தியாகராசர் எவ்வளவு மதி நுட்பமுடையவர் என்பதைப் பிற்காலத்தில் அரசு உணர்ந்திருக்க வேண்டும்.

## ஒரு திட்டம் :

தமிழ்நாட்டில் இன்னும் பல புதிய ஆலைகள் ஏற்பட வேண்டும் என அன்றே சொன்னார். "நம் மாகாணத்தில் உள்ள ஐந்துகோடி மக்கள் அனைவருக்கும் வேண்டிய துணியை உற்பத்திபண்ணிக் கொள்ள நமக்கு நாற்பதினாயிரம் விசைத் தறிகள் வேண்டும். இப்பொழுது எண்ணாயிரம் விசைத் தறிகளே இருக்கின்றன, மேற் கொண்டு வேண்டிய தறிகளை வைப்பதற்கு நம் அரசு துணை புரிய வேண்டும்.[1]

1. தூத்துக்குடி ஸ்பின்னிங் மில்ஸ்- திறப்புரை 1951

தொழில்களைத் தேசியமயமாக்க வேண்டுமென்ற அரசினரின் கோரிக்கையை ஆரம்ப நாள் முதலே தக்க எதிர்க்காரணங்களைக் கூறித் தகர்த்துவந்தார்.

இந்தியாவில் 10 லட்சம் பேருக்கு மேல் வேலை வாய்ப்பளித்து, அரசுக்கு ஆண்டுக்கு 100 கோடி ரூபாய் வரை வருமானம் தரும் மிகப் பெரிய ஆலைத் தொழிலை அரசு ஏற்று நடத்த முற்பட்டால் அதனால் தீய விளைவுகளே ஏற்படும் என மாநாடு கூட்டி முழங்கினார்.[1] அதற்குமாறாக, விஞ்ஞான தொழில்நுட்ப வளர்ச்சிக் கேற்றபடி ஆலைகளையெல்லாம் நவீனமயமாக்க அரசு நிதியளிக்க முன்வர வேண்டுமென்று வற்புறுத்தினார். அப்போது இங்கிலாந்தின் ஆலைத் தொழில் வளர்ச்சிக்கு ஆங்கில அரசு பெருந்தொகையினைச் செலவிட்டு வந்ததை எடுத்துக் காட்டினார். போட்டித் தொழிற் சங்கங்களால் தூண்டப்படும் பொறுப்பற்ற வேலை நிறுத்தங்களால் தேசத்திற்கு நேரக்கூடிய இழப்புகளை யெல்லாம் புள்ளி விவரங்களோடு விளக்கிச் சொன்னார். எல்லாம் செவிடன் காதில் ஊதிய சங்காயின.

## ஒரு பொறுப்பு :

தொழிலை நடத்துவோர்க்கும் சமூகப் பொறுப்பு உண்டு என்றார். வெறும் லாபத்தை மட்டும் பிரதானமாகக் கருதித் தொழிலாளர் நலத்தையும் நாட்டு வளத்தையும் புறக் கணிப்பது பச்சைத் துரோகம்; தர்மகர்த்தாக்களாகத் தொழில் நிறுவனர்கள் நடந்து கொள்ள வேண்டும், அத்தகைய சூழலில் அரசு ஆட்சிப்பொறுப்பில் மட்டும்

1. 16th All India Textile Conference - Bangalore, 1959

கவனம் செலுத்த வேண்டிய நிலை ஏற்படும். அதை விட்டுத் தொழில் செய்யவும் வாணிகம் புரியவும் அரசு வரவேண்டியதில்லை. 1

ஆலைத் தொழிலில் அவருக்குக் கிட்டிய அனுபவமும் ஆற்றலும் அத்தொழிலின் தலைமை நிலைக்கு அவரை உயர்த்தின. தென்னிந்திய ஆலை முதலாளிகள் சங்கம் பெரும்பாலும் அரசாங்கத்தோடு அனுசரித்துப் போகவே முற்பட்டதால், அது பிடிக்காமல் தமிழ்நாடு ஆலை முதலாளிகள் சங்கத்தைத் (Tamil Nadu Mill Owners Association) தானே தொடங்கி, அதன் தலைவராகவும் பொறுப்பேற்றுப் பல நலன்களை ஆலைத் தொழிலுக்குப் பெற்றுத் தந்தார். கச்சாப் பொருள் பற்றாக்குறை, ரிசர்வ் வங்கியின் கெடுபிடி முறை, மோட்டா ரகங்களுக்குக் கடுமையான எக்சைஸ் வரி விதிப்பு, தொழிலாளர் ஊதிய உயர்வு, மின்சாரக் கட்டுப்பாடு, அரசு மேற்கொண்ட போர்கள் - ஆகிய பல காரணங் களால் ஆலைத் தொழில் பெரிதும் அல்லல்பட்டுக் கொண்டிருந்தது. எனவே அரசாங்கம் எல்லாக் கட்டுப் பாடுகளையும் தளர்த்த வேண்டு மென்றும், ஏழைகள் உடுத்தும் நடுத்தர, மோட்டாரகத் துணிகள் மீதான தீர்வைகளை நீக்க வேண்டுமென்றும், நலிந்த ஆலைகளுக்கு வரிவஜாத் தர வேண்டுமென்றும் புதிய கருவிகளை

---

1. When this is achieved, the people can boldly say to the State "Hands off" as regards Trade Industry and Commerce, and 'Right about turn' to duties of law order and justice

"முற்று நீர் உலகம் காத்தல் முறை செய்தல்
இரண்டும் கண்டாம்
கற்றவர் சூழ வாழும் கன கழல் அரசர் வாழ்க்கை"

—SITRA Conference at Coimbatore, 1959

வாங்கிப் பொருத்த நீண்ட காலக் கடன் தரவேண்டு மென்றும் உரிமையுடன் கேட்டார். இதனால் 1960 - 64இல் பொதுவாக இந்தியத் தொழில்களுக்குக் கிட்டிய வளம், ஆலைத் தொழிலுக்குக் கிடைக்காமல் போய் விட்டது. 1969இல், இந்திய ஆலைத் தொழில், லட்சக் கணக்கானோர்க்கு வேலை தந்து, ஆண்டுதோறும் 200 கோடி ரூபாய் ஊதியமளித்து, 100 கோடி ரூபாய் வெளி நாட்டுச் செலாவணி ஈட்டியும் அதன் நிலை 'வாய்க்கும் கைக்குமாகவே' இருந்தது.

## ஒரு இடர்:

மத்திய அரசின் தாங்கொணா வரிக்கொடுமை இதற்கு மூல காரணம்.[1] லங்காஷயர் துணிக்கு இந்தியப் போட்டி யிலிருந்து பாதுகாப்பளிப்பதற்காக 1896இல் கொணரப் பட்ட எக்சைஸ் தீர்வை, இந்தியத் துணிக்கே இடர்ப் பாடாகிவிட்டது. 1949இல் 12 கோடியாக இருந்தது போய், 1969இல் 117 கோடிக்கு வந்து விட்டது. இத்துடன் கடுமையான வருமான வரியும், ஈவிரக்கமற்ற பாங்குக் கெடுபிடிகளும் சேர்ந்து விட்டமையால் 100 மில்கள் வரை மூடப்பட்டன. வரிவிதிப்பு முறை பகுத்தறிவுக் குகந்ததாகவும் அறிவியலடிப் படையிலும் அது இருக்க வேண்டும். உற்பத்தியாகும் பொருள் மதிப்பிற்கும் அதனால் கிட்டும் லாபத்திற்கும் பொருந்திய வகையில் வரிவிதிக்கப்பட வேண்டும் எனவும் வாதித்தார். தியாகராசர் நல்கிய புள்ளி விவரங்கள் பொருளாதார நிபுணர்களையும் வியப்பில் ஆழ்த்தின. திரு. சி. என். அண்ணாதுரை தமிழ் நாட்டின் முதலமைச்சராயிருந்த போது தென்னாட்டில் ஆலைத் தொழிலுக்குப் போதிய ஊக்கம் தரப்படுவதில்லை என்ற குறையை விளக்கி அவருக்கு நீண்ட கடிதம் எழுதினார் (25—3—68).

கடந்த பல ஆண்டுகளாகத் தமிழ் நாட்டில் புதிய தொழில்கள் தொடங்கப்படவில்லை எனும் குறை ஒரு புறம் இருக்கப் பழைய ஆலைகளும் முடக்கப்படும் நிலைமையை உடனே மாற்ற வேண்டுமெனக் கேட்டுக் கொண்டார்.

மத்திய அரசு நூல்கட்டுப்பாட்டைக் கொணர்ந்து அதனை ஒரு குறிப்பிட்ட விலையில் மட்டுமே விற்க வேண்டும் என்றபோது உற்பத்தி விலையைவிட அது குறைவாக இருப்பதைச் சுட்டிக்காட்டி, அரசின் போக்கை எதிர்த்துச் சுப்ரீம் கோர்ட் வரை சென்று வழக்காடி வென்றார். அவர் சுப்ரீம் கோர்ட் போனதால் தென் நாட்டில் பல ஆலைகளுக்கு அடித்தது யோகம். 1973—74இல் அவை நன்கு உரம் பெற்றன. இல்லையென்றால் அவற்றில் பல அப்படியே மூழ்கிப் போயிருந்திருக்கக்கூடும்.

அதுபோல தி. மு. க. அரசுக் காலத்தில், மின்சாரக் கட்டண விதிப்புப் பற்றிய சர்ச்சையில் துணிவோடு நடந்து கொண்டார். சர்சார்ஜ் கட்டாமைக்காக மின்சக்தி அளிப்பை அரசு துண்டித்தமையால் தனக்கு எவ்வளவோ நட்டம் ஏற்பட்டும் அதைத் தாங்கிக் கொண்டு அரசின் போக்குத் தவறானது என நிரூபித்தார்.

மதுரையைப் பஞ்சாலைத் தொழிலின் கேந்திரத்தலமாக மாற்றியதுடன் மட்டும் அவர் அமைந்துவிடவில்லை. வடமாநிலங்களிலும் காலூன்றி நின்றுகொள்ள அவ்வப்போது திட்டமிட்டார். பம்பாயில் ஒரு 'பிடிப்பு' வேண்டும் என ஆசைப்பட்டார். கல்கத்தாவில் ஒரு தொழில் தொடங்க ஆர்வம் கொண்டார். ஷோலாப்பூரில் ஒரு ஆலையமைக்க நாட்டம் கொண்டார். சென்னை சூளை மில்லை ஏற்று நடத்த முடியும் என்றார்.

ஆலைத் தொழில்களை நடத்தும் கலையில் வல்லவராயிருந்த அவர் பிற தொழில்களிலும் ஈடுபாடு கொள்ளத் தொடங்கினார். பாண்டிய ராஜபுரம் சர்க்கரை ஆலை இணைந்தது. 1 ஆந்திராவில் தனுகு எனுமிடத்துச் சர்க்கரை ஆலையும் வந்து சேர்ந்தது. பெண்ணாடம் சர்க்கரை ஆலை வந்து போயிற்று. வாஞ்சிநாடு தீப்பெட்டித் தொழிற்சாலை விலைக்கு வந்தது. அதில் அவ்வளவு லாபமில்லை, சென்னையில் பி. ஓஆர்ஆர். அன் சன்ஸ் விலைக்கு வாங்கப்பட்டது. 2 இது போல வாணிபத் துறையில் மற்ருெரு நிறுவனமாகப் பஞ்சு வணிகம் செய்யும் ஈஸ்ட் இந்தியா கம்பெனி திறக்கப்பட்டது. கொச்சியில் பிரண்டன் கம்பெனி எனும் கப்பல் தொழில் நிறுவனத்தை வாங்கக் கருதினார், எகிப்திய ரகப் பருத்தி வளர்க்கப் பரிசோதனை செய்தார்.

---

1. இந்தப் பாண்டியராஜபுரம் ஆலையை ஆரம்பித்தோர் விற்க முன் வந்தபோது, புதிய துறையில் இறங்கச் சற்றுத் தயங்கினார். அதை வடக்கிலிருந்து வந்து யாரோ விலை பேசக்கண்டு இப்படி தமிழ்நாட்டுத் தொழிலும் வடக்கே போய் விட்டால் என்ன ஆவதென வாங்க முடிவு செய்தாராம்

2. பீட்டர் ஓர் என்னும் வெள்ளைக்காரரால் 1849 இல் நிறுவப்பட்டது. நகைகள், நுட்பக்கருவிகள், கடிகாரங்கள் முதலியவற்றை வெள்ளையர்களுக்கு விற்பனை செய்து வந்தது. வெள்ளையர்களிடமிருந்து அமால்கமேஷன் குழுவினர் விலைக்கு வாங்கினர். இதை கருமுத்து 1964இல் வாங்கினார். கைக்கடிகாரங்கள், நுண்ணிய அளவைக் கருவிகள், வெள்ளி ஆபரணங்கள், பல நுகர் பொருள்கள் ஆகியவற்றின் விற்பனையில் ஈடுபட்டுள்ள இந்நிறுவனத்திற்கு உதகையிலும் இலண்டனிலும் கிளைகள் உண்டு.

**ஒரு புகழாரம் :**

'இன்று புதிதாகப் பிறந்தோம்' என ஒவ்வொரு நாளும் ஏதேனும் ஒரு புதிய தொழில் முயற்சி பற்றியே சிந்தித்து வந்தார். தாம் காலமாவதற்கு முன்னர் செங்கோட்டையிலும் வேரூர் இடத்திலும் புதிய ஆலைகள் தொடங்க வரை படம் தயாரித்துக் கொண்டிருந்தார். அவர் நிறுவிய மீனாட்சி ஆலை இந்தியாவின் சிறந்த ஆலைகளில் ஒன்று எனப் புகழ் பெற்றது. பிற்காலத்தில் அவர் கட்டிய பரவை ஆலை மிகச் சிறந்த அமைப்புடையது என ஆமதாபாத் ஆலைச் சொந்தக்காரர் சங்க அறிக்கையில் பாராட்டப் பட்டது.

The Textile Digest எனும் இதழ் 'His Mills are one of the most modern, well planned and well maintained in this country என 1967இல் எழுதியது [1] இப்புகழ் அவருடைய புது முயற்சிகளுக்குப் பின்பலமாக உதவியது.

தொழிலுக்கு உதவும் வகையில் வங்கிகள், இன்சூரன்ஸ் கம்பெனிகள் போன்ற நிதித்தொகுப்பு நிறுவனங்களும் ஒரு தொடராக அமையவேண்டும் எனக் கருதினார், தொழிலோடு தொண்டும் இணையவேண்டும் என உளம் கொண்டார். அத்தொண்டுகளில் எல்லாம் சிறந்தது கல்விப் பணியே எனக் கண்டார்.

**ஒரு கொடை :**

தியாகராசர் எனும் மனத்தலத்தில் விழுந்த விதைகள் எல்லாம் விருட்சங்களாயின. அவை நேச விருட்சங்களாகி நிழல் பரப்பின. அங்கே குயில்கள் கீதமிசைக்க வந்தன. வருங்காலச் சந்ததியினரின் வசந்த விழாக்கள் அங்கே வலம் வரத் தொடங்கின. தியாகராசர் அறக்கொடை (குடை) பரப்பிய ஆலமரம் ஆனார்.

---

1. An Interview by Shri S. T. Nanal, Editor.

மதுரையே அவன்பேர் சொல்லும்
மங்கை மீனாச்சி அம்மை
நதியவள் பேரால் மன்னன்
நாட்டிய ஆலை சொல்லும்
கதி இலார்க்காகச் செய்த
கல்லூரி வாசல் சொல்லும்
......கவியரசு கண்ணதாசன்.

# கல்வியும் கொடையும்

## 8

### கல்வியறமும் பிற அறமும் :

'எந்தத்திக்கிலிருந்து மதுரைக்குள் நுழைந்தாலும் தியாகராசர் நிறுவிய ஆலையோ, அவர் தொடங்கிய கல்லூரியோ நம்மை வரவேற்கும்' என்றெழுதினார் சோமலெ. தியாகராசரின் வாழ்க்கைப் பணிகளில் தொழில் ஆக்கத்திற்கு நிகராக இடம் பெற்று அவர் புகழை என்றென்றும் நிலைக்க வைத்திருப்பது அவரது கல்வி நல ஆக்கம் ஆகும். தமிழ் நாட்டுக் கல்வி வளர்ச்சிக்காகக் கோடி கொடுத்த தனவணிகப் பெருமக்களான அண்ணாமலை அரசர், அழகப்ப வள்ளல் எனுமிருவரையும் போல தியாகராசரும் 'தலைத்தந்தை' எனக் கல்வி கொடையால் புகழ் பெற்றார்.

அவர் அறம் எனக் கருதியது கல்வி அறத்தை மட்டுமே. அவ்வப்பொழுது கல்வி நிறுவனங்களுக்காகச் சிறு சிறு உதவிகள் செய்து வந்தாலும் அவையெல்லாம் ஒரு துறைத் தொண்டாகும் காலம் கனியவில்லை.

## வெள்ளியம்பலமும் பொன்னம்பலமும் :

கல்விப் பணிக்கென உதவிகேட்டு வந்தோரை வெறுங் கையோடு அனுப்பியதில்லை. அமராவதி புதூர் மகளிர் இல்லத்தின் வளர்ச்சிக்கென நன்கொடை அளித்தார், மேலைச்சிவபுரி செந்தமிழ்க் கல்லூரியின் நிலைபேற்றுக்கு உதவினார். புதுக்கோட்டை மன்னர் கல்லூரிக்கு 50 ஆயிரம் வழங்கினார். அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் சில அறக்கட்டளைகளுக்காக நல்கினார்.

அண்ணாமலையரசர் மதுரையில் பல்கலைக் கழகத்தை நிறுவ மேற்கொண்ட முயற்சிகள் பலன்தராமையால் அவர் சிதம்பரம் சென்றார். 1 வெள்ளியம்பலம் கேட்ட அவருக்குப் பொன்னம்பலம் கிடைததது. அண்ணாமலையரசர் விட்டுச் சென்ற வெள்ளியம்பலத்தில் 'கல்வி யென்னும் வலிமை கொண்ட கோட்டை கட்ட எண்ணியேவந்தார். இடையறாத ஆலை நிருவாகப்பணி காரணமாக அமைதியாக அது பற்றிச் சிந்தித்து முடிவு செய்ய அவருக்கு நேரம் கிட்ட வில்லை.

## கொடையும் சிறப்பும் :

தம் வாழ்வெலாம் விரைவு என வாழ்ந்த அழகப்பர் நல்கிய கொடைப்பாங்கிலும் ஒரு விரைவு உண்டு. கொடைப்

---

1. 1911இல் 5ஆம் ஜார்ஜ் மன்னர் முடிசூட்டு விழாக்காண அழைக்கப்பெற்று இங்கிலாந்து சென்ற அண்ணாமலை அரசர், அங்குள்ள ஆக்ஸ்போர்டு, கேம்பிரிட்ஜ் பல்கலைக் கழகங்களைப் பார்த்து இங்கும் அவ்வாறே அமைக்கக் கருதினார். பாண்டிநாட்டின் தலைநகரான முத்தமிழ் வளர்த்த முதல் நிலமான மதுரை நகரையே தேர்ந்து விரிந்த நிலப்பரப்பை வாங்கினார். சில காரணங்களால் அது கைகூடவில்லை, வாங்கிய நிலத்தையும் கட்டிடம் கட்டுதற்குரிய 50000 மதிப்புள்ள பொருளையும் மதுரைக் கல்லூரிக்கு வழங்கி விட்டுச் சிதம்பரத்தைத சேர்ந்தார். அங்கு மதுரை நினைவாகவும் தன் அன்னை மீனாட்சி பெயராலும் கலாசாலை அமைத்தார்.

ஆதாரம் - செந்தமிழ்ச் செல்வி 1961

பொருளைவிட அதை அளிக்கும் முறையே கொடையாளியின் குணப் பாங்கைப் புலப்படுத்துகிறது என்பதைப் போல வீடும் கொடுத்த விழுத்தெய்வமாக அவர் விளங்கினார்.[1]

தியாகராசரின் கல்விக் கொடை முறையிலும் அவருடைய அருங்குணச் சிறப்புக்கள் வெளிப்பட்டன. அதிலும் வரையறுத்ததொரு திட்டம், வளர்ச்சி நிலை, நிலை பேறு, என்பன பொருந்தியிருக்கும். தன் சொந்த ஊராகிய ஆ. தெற்கூரில் கல்லூரி அமைக்க வேண்டுமென்ச் சிலர் வற்புறுத்திய போது, எங்கு அமைப்பதால் பலருக்கும் பயன் கிட்டுமோ அங்குதான் அமைக்கவேண்டும், சொந்த ஊரில் தான் தர்மம் செய்யவேண்டும் என்பதில்லை என மறுத்து விட்டார். மேலைச் சிவபுரி கணேசர் செந்தமிழ்க் கல்லூரி நலிந்த போது மறுஉதவி கேட்டு அன்பர்கள் வந்தபோது அக்கல்லூரியை மதுரைக்குக் கொணர்ந்து அதே பெயரில் நடத்தச் சம்மதித்தால் அனைத்துச் செலவுகளையும் தாம் ஏற்பதாகத் தெரிவித்தார். தமிழ்நாட்டில் எந்தப் பள்ளிக் கூடமாயினும் தாம் ஏற்று நடத்தத் தயார் என அறிவித்தார். அதன்படியே நட்டமடைந்து வந்த ஆலைகளைப் போல நலிவுற்ற கல்வி நிறுவனங்களும் அவர் ஆளுகையால் உரம் பெற்றன. அடுத்த ஆண்டே இலவசக் கல்விக் கொள்கையை அரசு அறிவித்து விட்டதால் நிலைமை மாறியது. என்றாலும் கூடக் கல்வித் துறையில் பெயர் நிலைக்குமாறு ஏதேனும் செய்யவேண்டுமென்றும் மதுரையில் ஒரு தமிழ்ப் பல்கலைக் கழகத்தை நிறுவவேண்டுமென்றும் கருதியே வந்தார்.

## தோடக்கமும் தொடர்ச்சியும் :

"ஏறத்தாழ 3 கோடி ருபாய்களைக் கல்விக்கென வழங்கி 20 அருமையான கல்வி நிலையங்களைத் தியாகராசர் அறக்குழு ஏற்படுத்தி நன்கு நடத்தி வருவதில், முதலாவது ஏற்பட்ட நிலையம் திரு. தியாகராசன் செட்டியார் அவர்கள்

---

1. The manner of giving shows the character of the giver more than the gift itself - Lavater

பிறந்த ஊர் ஆ. தெற்கூரில் ஸ்ரீ விசாலாட்சி கலாசாலையே ஆகும்'' எனச் சொன்னார் திரு. லெ. அழகுசுந்தரம் செட்டியார்.

"கலைத் தந்தையவர்கள் பலகோடி வழங்கிப் பற்பல பொற்பணிகள் தொடங்குவதற்கு இக் கலைக்கூடமே வித்தாகும்'' என எழுதினார் திரு. லெ. நாராயணன் செட்டியார்.[1]

தியாகராசரின் அன்புத் துணைவியார் திருமதி விசாலாட்சி அவர்கள் 1947 மார்ச்சு மாதத்தில் மறைந்தார்கள். தான் தொழில் பொறுப்புக்களை ஏற்று அல்லும் பகலும் அலைந்த காலமெல்லாம் "தூண்டல் இல் விளக்கு அனாள்'' எனக் கம்பன்[2] வாக்கிற்கிணங்க அமைந்து, 'பெண் இயல் தீபம் அன்ன பேர் எழிலாட்டி''[3] யாகத் திகழ்ந்த தன் மனைவிக்குச் செய்யும் நினைவஞ்சலியாக இக் கல்விக் கூடத்தை நிறுவ முடிவு செய்தார். சொந்த வீட்டிலிருந்தவாறே கணவர் நலம் காத்த சாலி ஆச்சியின் பெயரால் துவக்கப் பெற்ற நிறுவனம், சொந்த ஊரான தெற்கூரில் அமைந்து தியாகராசரின் கல்விக் கனவுகளின் அடித்தளமாக இலங்கிற்று.

ஆ. தெற்கூரில், திருப்பத்தூர் பொன்னமராவதிச் சாலையில் பெரியதொரு பரப்பில் இவ்வழகிய கலாசாலை அமைக்கப்பட்டுள்ளது. தியாகராசரின் முத்திரை பொறித்த கட்டடக் கோப்புடன் விளங்கும் இக்கலாசாலை, 9—6—1947இல் உரிமைப் பெறப்போகும் பாரதநாட்டிற்கு முதல் காணிக்கையாக நிறுவப்பட்டது. கலைத்தந்தையின்

---

1. திரு. லெ. நாராயணன்செட்டியார் கலாசாலை மலர்
2. கம்பன் - சுந்தரகாண்டம், உருக்காட்டுப் படலம்
3. கம்பன் - ஆரணியகாண்டம், அயோமுகிப் படலம்

அன்புமகள் திருமணத்திற்காக அமைக்கப்பட்ட மணி மண்டபக் கொட்டகையில் இப்பள்ளி இயங்கிவந்தது. தாயினும் இனிய தாளாளர்களாலும் தகைசான்ற ஆசிரியர்களாலும் உருவாக்கப்பட்ட இக்கலாசாலையின் புதிய கட்டிடங்களைத் திறந்து வைக்கப் பாரதப் பிரதமர் நேரு பெருமகனார் வருகை புரிந்தார். தொழில் உலகில் 'விட்டாக்கண்டராகப்' பல ஆண்டுகளுக்கு முன்னர் அவருக்கு அறிமுகமான தியாகராசர், விடாப்பிடியாக நேருஜியையே திறப்பு விழாவுக்குக் கொணர்ந்துவிட்டார். விடுதி வசதியோடு விரிந்ததொரு பரப்பில் கிராமியச் சூழலில் எழிலுற எழுப்பப்பட்டிருந்த இக்கலாசாலையை (15—4—1959) திறந்துவைத்த நேருபெருமகனார் இது கல்லூரி போலவே தோன்றுகிறது எனவியந்துரைத்தார்.1 தியாகராசர் மருத்துவமனையும்அமைக்கஉதவவேண்டும்எனக்கேட்டுக்கொண்டார்.

நேருஜி சொன்னதுபோல விசாலாட்சி கலாசாலை கல்லூரியாகாவிட்டாலும், அந்த விசாலாட்சி கலாசாலையின் வழித்தோன்றல்கள் போலப் பாலர் பள்ளி, தொடக்கப் பள்ளி, உயர்பள்ளி, ஆதாரப் பயிற்சிப்பள்ளி, ஆசிரியக் கல்லூரி, கலைக் கல்லூரி, தொழில் நுட்பக் கல்லூரி, பொறியியல் கல்லூரி, வணிக இயல் கல்லூரி எனப் பல கல்வி நிலையங்கள் தியாகராசரால் தோற்றுவிக்கப்பட்டன.

---

1. தெற்கூர் கலாசாலையில் பொறிக்கப்பட்டுள்ள வாசகங்கள் இவை:

"அன்புறு மனைவியின் அரும்பெயர்விளங்க
கருமுத்து தியாகராசன் கவின்பெற
அமைத்த விசாலாட்சி உயர் கலாசாலை
நற்கலைக் கோயிலின் பொற்புடைக் கூடத்தைச்
சிறார் சிறார்கள் சிறந்து பயிலப்
பாரத அமைச்சின் தலைமணி
நேருபெருமகன் திறந்தனர் மகிழ்ந்தே"

**கல்வியும் கலாச்சாரமும்:**

அவற்றுள் முதன்மை பெற்றிலங்குவது தியாகராசர் கல்லூரி. 1944ஆம் ஆண்டிலிருந்தே மதுரையில் ஓர் உயர் கல்விக் கூடத்தை நிறுவும் எண்ணம் தியாகராசர்க்கு ஏற்பட்டிருந்தது. மதுரைக் கல்லூரியினை வாங்கி அதை நாளடைவில் பல்கலைக் கழகமாக்கி விடலாம் எனத் திட்டமிட்டார். மறுபடியும் அது தனவணிகக் கொடை எல்லைக்குள் வராமல் விலகிக்கொண்டது. தக்கதோர் இடத்தைத் தேர்ந்தெடுத்துத் தன் பல்கலைக் கழக நிறுவன நினைப்பிற்கு அடிக்கல் நாட்டத் தீவிரமாகச் சிந்தித்து வந்தார். மதுரையில் வையை எனும் பொய்யாக் குலக் கொடியின் கரையோரத்தில், மாரியம்மன் தெப்பக்குளச் சரகத்தில் இருந்த விரிந்ததொரு தோட்ட இடத்தை இதற்கெனப் பெறுதற்குப் பெரிதும் முயன்றார். ஜமீன்தார் ஒருவரின் சொத்தாக இருந்த அந்த இடத்தை வாங்குவதில் பல இடர்ப்பாடுகள் ஏற்பட்டன. இராமனாதபுரம் அரசருக்குச் சொந்தமான எழிலார் வீட்டினைப் பெற்றுவிட்டமையால், அதோடு தொடர்ந்திருந்த தோட்ட இடமும் கிட்டிவிட்டால் கல்லூரி வளர்ச்சிக்கு அதுபோதுமான இடமாயிருக்கும் எனக் கருதி, அவ்விடத்தைப் பெற்றுத்தர அரசின் உதவியை நாடினார். அரசு சர்ச்சைக்கு இடம் தரவிரும்பாமல், அவனியாபுரம் விமானத் திடலருகில் வேண்டிய மனையிடம் பெறலாம் என மாற்றுத்திட்டம் தந்தது. தியாகராசர் இணங்கவில்லை. ஏற்கெனவே பெற்ற இடத்திலேயே கல்லூரியை அமைக்க முடிவு செய்துவிட்டார். செந்தமிழ் வளர்த்த சேதுபதி மன்னரின் இல்லம், சிந்தை கவரும் கலைக்கூடமாகத் திருத்தியமைக்கப்பட்டது. தெப்பக் குளத்திற்கும் வையைப் புனலுக்கும் எழிலூட்டும் வண்ணம் தியாகராசர் கல்லூரி, மதுரையின் நெடுங்காலக் கல்வித் தேவையை நிறைவு செய்யப் பிறந்தது.

1949 சூலை இல் கலைத்தந்தையாலேயே கால்கோளிடப் பெற்ற தியாகராசர் கல்லூரியினைச் சென்னை மாநில ஆளுநராயிருந்த பவநகர் மன்னர் 1949 அக்டோபர் 12இல் திறந்துவைத்தார். அப்போது தியாகராசர் ஆங்கிலத்தில் ஆற்றிய வரவேற்புரை, மதுரையின் பெருமையை, தமிழகக் கல்வித் தேவையை, அதற்குரிய திட்டத்தை, அதனைச் செயலாக்கும் நோக்கத்தை யெல்லாம் விண்டுரைக்கும் வண்ணம் அமைந்திருந்தது : .........

"To revive that great tradition of culture in a pure, spiritual and academic atmosphere and as a realization of a long pent up dream of a Tamil University, this Shrine of Culture has been erected on a picturesque site on the banks of the sacred river Vaigai and opposite to the famous Teppakkulam, which is of great historical and religious importance...... Madras with a population of over 50 million has only 3 Universities. This is very inadequate. The establishment of another University in Madurai, the heart of Tamilnadu, with its 4 colleges and within a radius of 100 miles with 12 more colleges in Trichy, Ramnad and Tirunelvelly Districts will considerably help and enhance higher education in Tamilnadu".

## அறிவும் அன்பும் :

பெரிதினும் பெரிது கேட்கும் தியாகராசரின் பேருள்ளத்தை இவ் வரவேற்புரையிலேயே காணலாம். தொழிலாயினும் கல்வித் தொண்டாயினும் காலத்தின் தேவையை முன்னுணர்ந்து சொல்லும் அன்னவரின் மதி நுட்பத்திறனையும் இவ் வரவேற்புரையில் அறிந்து வியக்கலாம். மதுரை ஒரு தனிப் பல்கலைக் கழகத்தைப் பெறுதற்கு அதற்கப்புறமும் 20 ஆண்டுகள் காத்திருக்க வேண்டியிருந்தது.

"அறிவும் அன்புமே சிவம்" எனும் குறிக்கோள் தியாகராசர் கல்லூரிக்கு ஏற்கப்பட்டது. இது கல்லூரிக் குறிக்கோள் மட்டுமில்லை, காலமெல்லாம் தியாகராசர் தம் வாழ்க்கை வழியாகக் கொண்டிருந்த நடைமுறையே வளரப்போகும் இளைஞர்களுக்குரிய வழிகாட்டும் இலக்காக இதில் சுட்டிக் காட்டப்பட்டது. அக்கல்லூரி இலச்சினையில் அமைந்த எழுஞாயிறு, கோயில், புத்தகம், வீணை, மீன், தண்ணீர், தாமரை, யானை என்பனவெல்லாம் தமிழ்ப் பண்பு பற்றியும் மரபு வழிக் கலைபற்றியும் தியாகராசர் கொண்டிருந்த பல எண்ணங்களின் எதிரொலியாக இலங்கின. இதன் பல கூறுகள் மதுரைப் பல்கலைக் கழக இலச்சினையில் இயல்பாக ஏறிக்கொண்டன.

இக்கல்லூரியின் முதல்வர்களாகத் தலைசிறந்த கல்வியாளர்களையே கொணர்ந்தார்.[1] எல்லாத் தளத்திலும் இது முதன்மை பெற்றிலங்க எல்லா ஆக்கமும் நல்கினார். இக் கல்லூரியின் ஆசிரியர்கட்கு அரசு ஊதிய விகிதத்தைக் காட்டிலும் உயர்ந்த ஊதியத்தை அளித்து ஊக்கப் படுத்தினார். முதுகலை வகுப்புகளுடன், தமிழ் வளர்க்கும் பண்ணையாக இக்கல்லூரி வளரத் தக்க அடிப்படையிட்டார். இக்கல்லூரியின் முதலாண்டு விழாவுக்கு வள்ளல் அழகப்பரை அழைத்துப் பெருமைப் படுத்தினார். சென்னைப் பல்கலைக் கழகத் துணைவேந்தராயிருந்த டாக்டர் ஏ. எல். முதலியார் மகிழ்ந்து பாராட்டிய கல்லூரியில் ஒன்றாகத் தியாகராசர் கல்லூரி செழித்தது. திருவள்ளுவர் விழாக்களாலும், புலவர் விழாக்களாலும் இக்கல்லூரி ஆண்டு தோறும் புதுமைக் கோலம் பூண்டது. பல கல்லூரிகளுக்குப் பேராசிரியர்

---

1. திரு. C.D.S. ஷெட்டி, திரு. I.N. மேனன், திரு. இராமநாதன் பிள்ளை, திரு. G. வரதாச்சாரி, டாக்டர் A. சிதம்பரநாதச் செட்டியார் போன்றோரும் புகழார்ந்த பேராசிரியர்கள் பலரும் இங்கு பணியாற்றினர்.

க்ளையும் முதல்வர்களையும் இக்கல்லூரி உருவாக்கி அனுப்பி யிருக்கிறது. மதுரைப் பல்கலைக் கழகம் வருவதற்கு முன்னோடியாகப் பல முதுகலை விரிவாக்கப் பணிகளை ஏற்றுச் சிறப்புறச் செய்திருக்கிறது.

### ஆசிரியரும் பயிற்சியும் :

தமிழகத்தில் வளர்ந்து பெருகிவரும் உயர்நிலைப் பள்ளியில் பணியாற்றத்தக்க நல்லாசிரியர்களை உருவாக்கும் காலத் தேவை மிகவே மதுரையில் முதல் ஆசிரியப் பயிற்சிக் கல்லூரியினை "மெய்ப் பொருள் காண்பது அறிவு" என்னும் நோக்குடன் 1955இல் நிறுவினார். கலைக் கல்லூரியின் தென்மேற்குப் பகுதியில் தெப்பக்குளத்தின் மேல்புறத்தில் இப்பயிற்சிக் கல்லூரி அமைந்தது. இதில் பயிலும் பட்டதாரி ஆசிரிய மாணவர்களின் பயிற்சிக்கென நன்முறைப் பள்ளியினை நிறுவினார். இவ்வாறு தியாகராசரின் ஆலைகளோடு போட்டியிட்டுக் கொண்டு கல்விக் கூடங்கள் அணி வகுக்கத் தொடங்கின.

### தொழிலும் பயிற்சியும் :

அடுத்து வந்தது தியாகராசர் பொறியியற் கல்லூரி, தொழில் முனைவரான அவருக்கு நாட்டில் தொழிற் கல்வி வளர வேண்டும் என்பதில் எப்போதும் அக்கறை உண்டு. இந்தியாவில் தரமான தொழிலியற் கல்லூரிகள் தோன்றும் முன்னரே, வெளிநாட்டுப் பல்கலைக் கழகங்களுக்குத் தகுதி யுடைய மாணவர்களை அனுப்புதற்கு அரசு உதவ வேண்டும் என ஆலை உரிமையாளர் பேரவைகளில் எல்லாம் எடுத்துச் சொல்லி வந்தார். தமிழ்நாட்டில் எப்போதுமே உணர்ச்சி வசப்பட்ட, ஒருதலைப் பட்சமான வளர்ச்சிப் போக்கு இருந்திருப்பது கண்டு நண்பர்களிடம் சொல்லி வருத்தப் படுவார். தமிழ்நாட்டில் திருக்குறளுக்கு விழா எடுப்பது

போல திரைப்படக் கலைஞர்களுக்கு விழா எடுப்பது போலக் கல்வியறிஞர்கட்கும் தொழிலதிபர்கட்கும் விழாவெடுக்க முன் வரவேண்டும் என்பார். இடைக்காலத் தமிழகத்தில் சமயத்திற்குச் செல்வாக்கு இருந்தது போல, இக்காலத் தமிழகத்தில் தமிழ் உணர்ச்சியும் கலை நாட்டமும் செல்வாக்குப் பெற்றுள்ளனவென்றும், இவ்வுணர்ச்சியும் நாட்டமும் பொருளாதார ஆக்கத்தைக் குலைத்து விடாமல் அமைய வேண்டும் என்றும் கருதுவார். எனவே தொழிலதிபரான தானே ஒரு தொழிற் கல்லூரியினை நிறுவ முன்வந்தார்.

தியாகராசர் மனத்தில் எதுவும் திடீரென முடிவாகி விடுவதில்லை. ஒரு எண்ணத்துளி என்றோ அவர் மனத்தில் விழுந்து கருக்கொள்ளும். அது நாளடைவில் உருக்கொண்டு செயல் திட்டமாகப் பிறக்கும். பொறியியல் கல்லூரி பற்றிய நினைப்பும் அப்படித்தான். மதுரை சௌராட்டிரா உயர் நிலைப்பள்ளியின் பொன்விழாக் கட்டிடத்தைத் திறந்து வைத்துப் பேசுகையில் ''இத்துணைச் சிறப்பு வாய்ந்த மதுரையில் இன்று ஒரு பொறியியல் கல்லூரி இல்லாதது பெருங்குறையாகும். இங்குள்ள தமிழ்நாடு தொழில் பள்ளியைப் பெரியதோர் பொறியியல் கல்லூரியாக மாற்றி யமைத்தல் இன்றியமையாதாகும்'' எனச் சுட்டிக் காட்டி யிருந்தார்.

## சீரும் சிறப்பும் :

தொன்மைக் காலந்தொட்டே பொறியியல் துறையில் தலைசிறந்து விளங்கிய நம்நாட்டுப் பாரம்பரியத்தை எப்போதும் மாணவர்க்கு எடுத்துச் சொல்வார்.

''கரிகாலனால் கட்டப்பட்ட கல்லணை, இராசராசனால் எழுப்பப்பட்ட பெருங்கோயில், பொறியியல் கலையில் தமிழர் பெற்றிருந்த முன்னேற்றத்தைக் காட்டுகின்றன.

புகார் போன்ற துறைமுகங்களும், மதுரை போன்ற நகரமைப்புக்களும் பெருவழிகளும், நீரணிமாடம் எனப்பட்ட பெருங்கப்பல்களும் பொறியியல் முன்னேற்றமின்றித் தோன்றியிருக்க முடியாதன்றோ?

இத்துணைச் சீரும் சிறப்பும் முன்னேற்றமும் பெற்றிருந்த நம்நாடு இன்று அறிவியல் பொறியியல் கலைகளில் மிகவும் பிற்பட்ட நிலையில் உள்ளது. இவை பற்றிய அறிவுக்கும் கருவிக்கும் வெளிநாட்டார் உதவியையே எதிர் நோக்கும் இரங்கத்தக்க நிலையில் உள்ளோம்.'' 1

''நாட்டின் முன்னேற்றத்திற்குத் தொழிற் கல்வி மிகவும் அவசியமாகும். புதிய பல தொழில் முறைகளைப் பயிற்றுதற் குரிய நிலையங்கள் நாடெங்கும் நிறுவினாலன்றி செல்வ வளர்ச்சியைக் காண்டல் அரிதாகும். மேலைத் தேசங்கள் வளத்தால் திகழ்தற்குந் தொழில் கல்வியே காரணம் ஆகும்''2

நாட்டுக் குறையை மட்டும் சொல்லாமல் அக்குறைகளையைத் தன்னால் ஆன பணியினைத் தயங்காது செய்து பழக்கப்பட்ட தியாகராசர் மதுரையில் பொறியியற் கல்லூரி நிறுவச் சம்மதித்தார்.

''மதுரையில் பொறியியல் கல்லூரி ஒன்று தொடங்கத் தமிழ்நாடு அரசு பல ஆண்டுகளாகச் சிந்தித்தது. திடீரென்று ஒருநாள் இந்திய அரசாங்கத்தின் தென்மாநிலங்களுக்கான தொழில் நுட்பக் கல்வி ஆலோசகர் தொலைபேசியில் தியாகராசச் செட்டியாருடன் பேசினார். ''இரண்டு நாட்களில் ஆலோசனைக் குழு கூடுகிறது. தாங்கள்

---

1. காரைக்குடி அழகப்பா பொறியியற் கல்லூரிப் பொருட் காட்சித் தலைமையுரை - கருமுத்து 15—12—1961.
2. வானொலிச் சிறப்புரை

நன்கொடை வழங்க முன்வந்தால் பல்கலைக் கழகத்தின் இசைவையும் மாநில, மத்திய அரசுகளின் இசைவையும் உடனே பெற்று, நாளை மறுநாள் நடைபெறும் கூட்டத்தில் கல்லூரி தொடங்குவதை உறுதிப் படுத்திக் கொள்வோம்'' என்று கூறினார். மறுநாளே தந்தையாரின் இசைவுக் கடிதத்துடன் தனயன் திரு. மாணிக்கவாசகம் சென்னைக்குப் பறந்து சென்றிலரேல் மதுரைக்குப் பொறியியல் கல்லூரி வந்திருக்குமா? இக்கல்லூரிக்குத் தியாகராசச் செட்டியார் செலவிட்ட பணம் ரூபாய் அறுபது லட்சம் ஆகும். 1

## அமைப்பும் அழகும்:

திருப்பரங்குன்றத்தருகமைந்த குன்றின் அடிவாரத்தில் அந்தக் குன்றின் எழுச்சிக்கேற்ற வண்ணம் பொறியியற் கல்லூரி 1956இல் அமைந்தது. முதுகலை வகுப்புவரை அமைந்த இக்கல்லூரியின் குறிக்கோள் வாசகம் ''வினையே உயிர்'' என்பது. உயிர் வாழ்ந்த நாளெல்லாம் வினையையே மூச்சாகக் கொண்ட தியாகராசரின் வாழ்க்கைக் குறிக்கோளே வளரப்போகும் பொறியியல் இளைஞர்களுக்கும் குறிக்கோளாக அமைந்தது. சேலம் தியாகராசர் பல்தொழில் பள்ளியும் திருச்சூர் அழகப்பா பல்தொழில் பள்ளியும் தியாகராசர் அறக்கொடை மாலையில் மணம் பரப்பும் இதர மலர்கள் ஆகும்.

எதிலும் புதுமை காணவிழைவது தியாகராசர் இயல்பு. அதுபோலக் கல்வி நிறுவனங்களை அமைப்பதிலும் பிறர் அணுகாத புதுநெறியைக் கையாண்டார். கல்விக்கூடத்தை நிறுவியவர்கள் எடுத்ததெற்கெல்லாம் தலையிட்டு மேலாண்மை செய்வதும், எந்த நிகழ்ச்சி நடந்தாலும் முதல் மரியாதை பெறச் செல்வதும், ஆசிரியர்களைத் தன்

1. கலைத்தந்தை — சில நினைவுகள். -சோமலெ

வீட்டு வேலைக்காரர்களைப் போலப் அவமதித்து நடத்துவதும் அவர்க்குப் பிடிக்காதவை. விசாலாட்சி கலாசாலையின் தாளாளராகத் தன் ஆலை அதிகாரி ஒருவரை நியமித்தார். கல்லூரி நிர்வாகத் துறைகளில் தலையிடவேமாட்டார். அவர் கல்லூரியைப் பார்வையிட வருவதும் போவதும் பலர் கண்களில் படவே மாட்டாது. ஆனால் அங்கு நடைபெறும் அனைத்தும் அவர் பார்வைக்கு வந்தேதீரும். கல்லூரிகளில் நிறுவனர் நான் எனத் தன் புகழ்பேச விழாவே எடுக்கக்கூடாதென மறுத்து விடுவார். அவர் நிறுவிய கல்வி நிறுவனங்களில் 'பவுண்டர்ஸ் டே' எனப்படும் நிறுவனர்நாள் நடந்ததேயில்லை.

## மேலாண்மையும் பயிற்சியும்:

தியாகராசர் கண்ட மற்றொரு புதுமைக் கல்லூரி; மேலாண்மை ஆய்வியல் கல்லூரி (Thiagarajar School of Management) அறிவியல் தொழில் நுட்ப வளர்ச்சிக்கேற்பத் தொழிலகங்களையும் அலுவலகங்களையும் நடத்துதற்கான பயிற்சியளிப்பது மிகவும் அவசியம் எனக் கருதினார். 1961இல் இந்த நிறுவனம் பிறந்தது. தென் தமிழ்நாட்டிலேயே தனிச் சிறப்புடைய ஒன்றாக இது பணியாற்றி வருகிறது.

தியாகராசருடைய கொடைவண்மையில் குறிப்பிடத்தக்க ஒன்று, பிறர் தொடங்கிய நிறுவனங்கள் நன்கு செயல்படாதபோது அவற்றை ஏற்று நடத்த முன்வந்தமை ஆகும். கேரளத்தில் அழகப்பாநகரில் உள்ள பாலிடெக்னிக்கும், கோனாபட்டு எனும் ஊரில் உள்ள சரஸ்வதி உயர்நிலைப் பள்ளியும் இவ்வாறு ஒப்புக் கொள்ளப்பட்ட நிறுவனங்கள் ஆகும்.

மகளிர் கல்விக்கெனத் தனிநிறுவனம் தொடங்கா விட்டாலும் மதர்ரோஸ் போன்றோரின் கல்விப்பணிகளுக்கு பலவாறு உதவியுள்ளார்.

நர்சரிப் பள்ளி தொட்டு முதுகலைக் கூடங்கள் வரை பலதிறப்பட்ட கல்வி நிலையங்களை நிர்வகித்தமையால் நாட்டுக்கு வேண்டிய கல்வி முறை இதுதான் என்பதைத் தெளிவாக உணர்ந்திருந்தார். பல கல்வி நிறுவனங்களில் உரையாற்றச் சென்றபோதெல்லாம் தன் கருத்தை அரசின் காதில்படும்வண்ணம் உரக்க முழங்கியிருக்கிறார்.

## கடிதமும் கருத்தும் :

மூதறிஞர் ராஜாஜி அவர்கள் மாநில முதலமைச்சராக இருந்தபோது அவருக்கெழுதிய பகிரங்கக் கடிதத்தில் கல்வி முறைக் குறைகளைப் பட்டியலிட்டுச் சொல்லியிருக்கிறார்: 1

''நம் கல்வி முறை மிகக் குறைபாடுள்ளதாகும். இப் பொழுதுள்ள பாடங்கள் அதிகமாயிருப்பதால் அவைகள் மாணாக்கர்களின் ஊக்கத்தையும் உற்சாகத்தையும் குறைத்துப் பள்ளியையும் கல்லூரியையும் விட்டுப் படித்து வந்ததும் பலர் ஆட்சிக்கும் பெருங்காரியங்களுக்கும் உதவாமல் போய் விடுகிறார்கள். அவர்கள் தங்கள் வயிற்றுப்பாட்டுக்குக் கூடச் சம்பாதித்துக் கொள்ள முடியா மலிருக்கிறார்கள். இவர்களைவிடப் பள்ளிக்கூடத்துக்குப் போகாத மக்கள் நன்கு வாழ்கின்றார்கள். இந்நிலையில் மேற்கொண்டு இகத்திற்கும் பரத்திற்கும் உதவாத இன்னொரு மொழியை நம் பிள்ளைகளின் மீது சுமத்துவது கொடுமையேயாகும். இந்தியின் எதிர்வாதத்தால் காங்கிரஸ் அரசு தாய்மொழியில் பாடங்கள் நடத்த மேற்கொண்ட பெரும் நோக்கம் பாராட்டப்படாமல் மங்கிவிட்டது.

1. 1—5—1939 - ராஜாஜிக்குக் கடிதம்

நம் புராதனக் கல்வி முறையை மீண்டும் பயனோடு மேற்கொள்ளலாம், இப்பொழுதுள்ள முறையில், மக்களின் ஆத்ம முன்னேற்றத்திற்குரிய சமயக்கல்வியோ அல்லது இசைக் கலையோ இல்லை''

எத்தனை தான் புதிய துறைகள் விரிந்தாலும் குருகுல முறையில் பயிலுவதே சிறந்த தென்பார்.

''குருகுல முறையில் கல்வி பயில்வதே சிறந்த முறை என்பது விவேகானந்தர் போன்ற பெரியவர்களுடைய கருத்துமாகும். குருகுலம், கல்விக் கூடமும், மாணவர் விடுதியும், ஆசிரியர் இல்லங்களும் ஒருங்கே அமையப்பெற்ற தனிச்சிறப்பு உடையது. சிறுவயதில் இளைய மாணவர்கள், அறிவின் முதிர்ந்த ஆசிரியர்களோடு வாழ்ந்து, அன்பும் அறிவும் ஒழுக்கமும் உடல் வன்மையும் பெறுவதற்கு ஏற்ற இடமாகும்''[1]

## பெண்மையும் கல்வியும் :

பெண் கல்விக்கு முதலிடம் வேண்டும் என வாதாடிய அவர், ஆண் பெண் இருபாலார்க்கும் ஒரே விதமான கல்வி பொருந்தாது எனும் கருத்துடையவர். விருதுநகர், வன்னியப் பெருமாள் பெண்கள் கல்லூரி ஆண்டுவிழாவில் தலைமையுரையாக[2] ''பெண்கள், இல்லத்தின் ஆட்சிக்கு உரியராதலின், அவர்கள் வாழ்க்கைத் துணைகளாகவும் தாய்மார்களாகவும் இருத்தலே பொருத்தமாகும், போர்க் கலை, பொறிக்கலை, சட்டக்கலை போன்றவையும், அலுவல் அகங்களில் பணியாற்றுதலும் பெண்களுக்கு

---

1. வடலூர் வள்ளலார் குருகுலத்திறப்பு விழா - 16—10—1955

, முதலாவது ஆண்டுவிழாத் தலைமையுரை 17—2—1963

ஏற்றவையல்ல, இவை பெண் இயல்புக்கு மாறுபட்டன வாகும். ஆசிரியத்தொழில், மருத்துவத்தொழில் முதலியனவே ஏற்புடைத்தாகும்''

ஆண் பெண் ஒன்றாய்ப் படிக்கும் (Co-education) கூட்டுக்கல்வியிலும் அவர்க்கு உடன்பாடில்லை.

''கற்பை மகளிர்க்கு அணிகலனாகக் கொள்ளும் நம் நாட்டில் இருபாலாரும் சேர்ந்துபடித்தல் நெருப்போடு விளையாடுதலையொக்கும். ஆதலின் இம்முறை போற்றத் தக்கதன்று. பெண்களுக்கென உரிய பொருத்தமான கல்வியினையே அளிக்கவேண்டுமெனக் கம்பரை மேற்கோள் காட்டினார் '' இவ்வுண்மையை.

''பெருந்தடங்கட்பிறை நுதலார்க்கெலாம்
பொருந்து கல்வியும் செல்வமும் பூத்தலால்.''

என்று கல்வியிற் பெரிய கம்பர் நுண்ணிதின் ஆராய்ந்து பொருந்து கல்வியென அழகுபெற விளக்கியிருத்தலாலும் அறியலாம் 3

## தொழிலும் கலையும் :

எந்நிலையிலும் வெறும் தொழிற்கல்வி மட்டும் போதா தென்ற சமநிலை நோக்குடையவர் தியாகராசர். ஓர்ள்வு இலக்கிய, கலையியற் கல்வியும் தொழிற் கல்வியோடு இணைந்திருந்தால்தான் நிறைவுதரும் கல்விஅமையும் எனப் பலகாலும் எடுத்துரைப்பார்.

---

3. மதராஸ் ரேடியோ நிலையச் சொற்பொழிவு - கல்வி விளக்கம் - நாட்டிற்கு ஏற்றவை - நவம்பர் 7, 1949

இவ்வாறு கல்வியின் பல்வேறு நிலைகள் பற்றியும் தெளிவாக கருத்துடையவராகப் பிறர்க்கு வழிகாட்டி வந்தார். அதுமட்டுமில்லை. இவ்வகையில் தனக்கு முன்னோடியாக விளங்கிய தனவணிக்ச் செம்மல்களையும் வாய்ப்புக் கிட்டியபோதெல்லாம் வாய்விட்டுப் பாராட்டினார்.

"I have had fortunately, unique opportunities of knowing the late Rajah Sir Annamalai Chettiar (1881—1947) for four decades. He was noted for his piety, simple ways of life, winning manners, remarkable courtesey and princely hospitality. I have admired his rare capacity for hard work, business acumen and wise statemanship. Annamalai university itself is an abiding proof of his creative genius and patriotic inspiration. It is the first University in our country to be founded by private benefaction." 1

"அழகப்பச் செட்டியார் அவர்கள் (1909—1957) இருபத்தைந்து ஆண்டுகட்கு முன்பே, கல்வியின் பெருமையை உணர்ந்து, இந்த இலவசப் பள்ளியைத் தோற்றுவித்தது போற்றிப் பாராட்டத்தக்கதாகும். அவரின் விரிந்த நோக்கத்திற்கும் மக்கள் பால் கொண்டுள்ள அன்புக்கும் பரிவுக்கும் இந்தப் பள்ளியே சான்றாகும் எனக் கோட்டையூர், சனாதன தர்ம வித்தியாலய வெள்ளி விழாவில் (1965) பேசுகையில் அழகப்ப வள்ளலைப் பாராட்டினார்.

---

1. Thirty first Founder's Day Commemoration Address - Karumuthu - 17 Oct. 1960

1973இல் நடந்த நிறுவனர்விழாப் பேருரையினை திருமதி ராதாதியாகராசன் நிகழ்த்தியபோது தியாகராசரும் வருகை புரிந்தார். அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பொன்விழா மலரில் விவரம் காணலாம்.

அறிவு தருவது மட்டும் கல்விக்கூடங்களின் நோக்கம் இல்லை என்றும் நமது பண்பாடும் நாகரிகமும் மேம்பட உதவும் வகையில் நம் கல்விமுறை அமைய வேண்டும் என்றும் பல கல்லூரி விழாக்களில் அறிவுறுத்தினார்.[1]

## கண்ணும் கருத்தும்

அவருடைய கல்லூரி விடுதிகளில் அசைவ உணவு அளிக்கப்படமாட்டாது என்ற கொள்கையில் அசையா உறுதி கொண்டமையால் பல சமயம் சங்கடங்கள் ஏற்பட்டன. என்றாலும் மாணவர்க்கான நலன்களைக் கண்ணும் கருத்து மாய்ப் பேணி வந்தார்.

தியாகராசர் பொறியியல் கல்லூரியில் பயின்று இப்போது தொழில்துறை யொன்றின் நிர்வாக இயக்குநராயுள்ள அன்பர்[2] ஒருவரின் படப்பிடிப்பு இது :

''கல்லூரி வட்டத்தில் இளைஞர்கள் நடுவே அவர் வரும் போதெல்லாம் அவரும் ஒரு முதிய இளைஞர் போலத் தோற்றமளிப்பார். எடுப்பான தோற்றமும் மிடுக்கான நடையும் மிளிர அவர் நடந்து வருவதிலேயே ஒரு அழகான தோரணை புலப்படும். அவர் எடுத்து வைக்கும் ஒவ்வொரு அடியிலும் அவருடைய உறுதியான நெஞ்சப் பாங்கும் வலிமையான செயல் நோக்கும் புலப்படும். அவர் விழாக் களுக்கு வரும்போதெல்லாம் விடுதி மாணவர்கள் விடாமல் கேட்கும் ஒரு கோரிக்கை, விடுதியில் புலால் உணவு தர வேண்டும் என்பது தான். தியாகராசர் கல்லூரி விடுதிகளில் சைவ உணவே தருதல் என்பது நியதியும் மரபும் ஆகும். ஆகையால் அந்த மரபினை மீறி மாணவர்கள் கோரிக்கைக்கு

---

1. மதுரைமருத்துவக் கல்லூரிவிழாப் பேருரை
2. திரு எல். ரமணி பி. ஈ., பிரகடம் இண்டஸ்ட்ரீஸ்

இசைய மறுத்து விடுவார். அப்படி மறுக்கும் பொழுது கூட தியாகராச வள்ளலின் பெருந்தன்மையே புலப்படும். மனத்தை மட்டும் உறுதியாக வைத்துக்கொண்டு, முகத்தைச் சுளிக்காமலே மரபினை மாற்ற மறுத்து விடுவார்.

1965இல் தியாகராசர் பொறியியல் கல்லூரியில் "பொறுக்குத் தேர்வு" நடத்தப்பட்டுச் சில மாணவர்களுக்கு இறுதியாண்டுத் தேர்வு எழுதக் கல்லூரி முதல்வரால் அனுமதி மறுக்கப்பட்டது. இதை எதிர்த்து மாணவர்கள் படிப்பு நிறுத்தம் செய்தனர். ஒரு வாரத்திற்கு மேல் இந்த நிலைமை நீடித்தது.

## மாணவரும் மாண்பும் :

தியாகராச செட்டியார் தலையீட்டின் பேரில் சமரசத்திற்கு வழிகாண முற்பட்டார் கல்லூரி முதல்வர். பெரியவரைப் பார்க்க மாணவப் பிரதிநிதிகள் மட்டும் பேச்சு வார்த்தைக்குச் சென்றால் அவர்கள் இனம் கண்டு பிடிக்கப்பட்டு, "படிப்பு நிறுத்தத்தைத்" தூண்டிவிட்டவர்கள் எனப் பழிவாங்கப்படுவர் என்று மாணவர்கள் அஞ்சினர். செட்டியாரைப் பார்க்க எல்லா மாணவர்களும் தான் வருவோம் என்று பிடிவாதம் செய்தனர். எல்லோரும் வரவேண்டும் என்று விரும்பினால் அப்படியே வரலாம் எனப் பெரியவர் இசைந்து விட்டார். மாணவர் பட்டாளம் பெரியவரின் மாளிகையை அடைந்து அங்குள்ள புல்தரையில் முகாமிட்டு பெரியவரின் வருகைக்காகக் காத்திருந்தது. பெரியவர் வெளியில் வந்தார். கல்லூரிப் பேராசிரியர்களும் அங்கு நின்று கொண்டிருந்தனர்.

மாணவர்களின் மதிப்பெண் பட்டியலைக் கையில் வைத்துக் கொண்டு அதில் குறைந்த மதிப்பெண் வாங்கிய மாணவர்களின் பெயரைப் படித்து, அவர்கள் இன்னாரென

அறிய எழுந்து நிற்குமாறு சொன்னார். எந்த மாணவரும் எழுந்து நிற்கவில்லை. ஒருவரை ஒருவர் பார்த்தபடி பேசாமல் அமர்ந்திருந்தனர். அப்பொழுது நகைச் சுவை இழைய, செட்டியார் சொன்னார். ''குறைந்த மதிப்பெண் வாங்கித் தோல்வியுற்ற மாணவர்களின் பெயர்களை நான் படித்தேன். அப்போது இங்கிருந்து யாருமே எழுந்து நிற்கவில்லை. உண்மையில் ''பொறுக்குத் தேர்வில்'' பாதிக்கப் பட்டவர்கள் அவர்கள் தான். தோல்வியுற்ற மாணவர்கள் யாரும் இங்கு வரவில்லை. இப்படியிருக்க, தேர்வில் நல்ல மதிப்பெண் வாங்கிய நீங்கள் எல்லாம் ஏன் வந்தீர்கள்?'' எனக் கேட்டார். மாணவர்கள் முகத்தில் ஈயாடவில்லை. எல்லோரும் தலையைக் கவிழ்ந்து கொண்டனர். சற்று நேரம் மௌனம் நிலவியது.

ஒரு மாணவர் எழுந்து, பேராசிரியர்களை அங்கிருந்து போகச் சொன்னால், மாணவர்கள் மனக்குறைகளை வெளிப் படையாகச் சொல்வதாகக் கூறினார். பேராசிரியர்களைக் கண்டால் இவ்வளவு பயமா என்று கூறி, அவர்கள் அனைவரையும் அங்கிருந்து உள்ளே செல்லுமாறு பெரியவர் கேட்டுக் கொண்டார். பேராசிரியர்கள் போனவுடன், மாணவர்கள் ஒவ்வொருவராக எழுந்து, ''பொறுக்குத் தேர்வு'' முறை பற்றித் தமக்கு நேரிட்டுள்ள அச்சத்தையும் அவநம்பிக்கையையும் தெரிவித்தனர். அவை எல்லாம் ஆதாரமற்ற அவநம்பிக்கைகள் எனப் பெரியவர் பொறுமை யுடன் விளக்கிச் சொன்னார். மாணவர்கள் இனிமேல் கருத்தூன்றிக் கற்போம் எனக் கூறிய வாக்குறுதியை ஏற்றுக் கொண்டு, எவரும் எதிர்பாராத வகையில், மாணவர்கள் எல்லோரும் தேர்வு பெற்று விட்டதாக அறிவித்து விட்டார். மாணவர்களே திகைத்து நிற்கும் அளவுக்கு இந்த அறிவிப் பின் மூலம், மாணவர்கள் மீது தமக்குள்ள அன்பையும் இளகிய நெஞ்சப் பாங்கையும் அவர் புலப்படுத்தினார்.

## விடுதியும் சிறையும் :

அவருடைய கல்லூரி விடுதிகள் எல்லாம் ஒரே பாணியில் கட்டப்பட்டிருக்கும். தியாகராசர் கலைக் கல்லூரி விடுதியில் ஒவ்வொரு அறையிலிருந்தும் மாணவர்கள் வெளியே தடையின்றி வரும் அளவுக்குத் தனித்தனி வாயில்கள் உண்டு. இதனால் வெளியே போகும் மாணவர்களையும் உள்ளே வரும் மாணவரல்லாதோரையும் இனம் கண்டுபிடித்தல் என்பது சிரமமாயிருக்கும். இதனை மாற்றி ஒரே ஒரு பொது வழி மட்டும் வைக்கலாம் என விடுதிக் காப்பாளர் ஒருவர் கருதினார். இதைக் கண்ட தியாகராசர் சொன்னார். "நான் மாணவர்கட்குக் கட்டியிருப்பது சிறைக் கோட்டமில்லை, சிந்தனைக் கோட்டம். தங்கு தடையின்றி மாணவர்கள் தத்தம் அறை வாயில்களைப் பயன்படுத்தி வெளியில் வரட்டும். அவர்களே பொறுப்புணர்ந்து நடந்து கொள்வார்கள்" 1 என்றார்.

## கனவும் நினைவும் :

மதுரையில் தன்கொடையில் பல்கலைக் கழகம் ஒன்றினை நிறுவிடவேண்டும் என்பது அவருடைய நீண்ட நாள் ஆசை. தனியார் துறைகளில் உயர் கல்விப் பணிகளை விடவேண்டாமென அரசு முடிவு செய்துவிட்டதால் அது கைகூடவில்லை. ஆனால் நாளடைவில் நடைமுறைக்கு வந்த மதுரைப் பல்கலைக் கழகத்தின் நாற்றாங்காலாக அவருடைய நிறுவனங்கள் உதவின.

மதுரையில் வேளாண்மைக் கல்லூரியினை அமைக்கப் பலவாறு முயன்றார். அதிலும் அரசு தலையிட முயன்றமையால் அத்திட்டம் தகர்ந்து போயிற்று. குற்றாலத்தில்

---

1. மேஜர் பி. பி. சின்னதுரை தெரிவித்தது.

ஒரு கிராமியக் கல்வித் தளத்தை அமைக்கக் கருதினார். அதுவும் சிதறிப் போய் விட்டது. மதுரையில் இசைநாட்டிய நிறுவனம் ஒன்றை ஏற்படுத்த வேண்டும் என்பதும் கைகூடவில்லை.

கலைக் களஞ்சிய வெளியீட்டிற்கும் தமிழ் வளர்ச்சிக்கும் அவர் நல்கியுள்ள உதவிகள் பேரளவின. தமிழறிஞர்கட்கும் தமிழ் மன்றங்கட்கும் அவர் தந்த ஆக்கங்கள் எண்ணிறந்தன. இவ்வாறு அவ்ருடைய செல்வம் மனிதகுல மேம்பாட்டிற்குப் பலவகையிலும் உதவத் தொடங்கிற்று.[1] அவ்வகையிலும் கருமுத்து தன்னிகரற்றுத் திகழ்ந்தார்.

---

1. To the Rockfellers money is a tool to be used to promote the well being of mankind.

-William Manchester



"A kind of money machine
that churns endlessly,
manufacturing wealth......"

ஹென்றிபோர்டு நிறுவனம் பற்றி

# வங்கியும் வருநிதியும்

# 9

## வங்கிகள், வாய்க்கால்கள் :

இன்றைய வாணிக, தொழில் வளர்ச்சிக்கெல்லாம் உதவும் இருதயக் கவாடமாக இலங்குவன வங்கிகளும் காப்பீட்டுக் கழகங்களும் ஆகும். இவ்விரண்டும் (அணைக் கட்டில் வந்து சேரும் நீர்ப் பெருக்குபோல) பல்லாயிரக் கணக்கானவர்களிடமிருந்து சிறுசிறு தொகைகளைச் சேகரித்து, வளர்ச்சித் துறைகளுக்கெல்லாம் வாய்க்கால் போல் ஓடி வழங்குகின்றன. மேலைநாட்டில் ஆக்கமுற வளர்ந்துள்ள இந்நிறுவனங்கள், நம்நாட்டிலும் காலூன்றி இரு நூறாண்டுகளுக்கு மேலாகி விட்டது.

ஐரோப்பியர்களின் முயற்சியால் 1770இல் கல்கத்தாவில் திரு அலெக்சாண்டர் கம்பெனியால் ஹிந்துஸ்தான் பாங்க் முதன்முதலில் துவக்கப் பட்டது. கிழக்கிந்தியக் கம்பெனி வணிகர்களுக்கும் ஐரோப்பியப் படைவீரர்களுக்கும் மட்டுமே இது உதவிவந்தது. 1806இல் பாங்க் ஆப் பெங்காலும், 1840இல் பாங்க் ஆப் பம்பாயும், 1843இல் பாங்க் ஆப் மெட்ராசும் பிறந்தன. கிழக்கிந்தியக் கம்பெனியின் இந்திய ஆட்சியை ஆங்கில அரசு நேரடியாக மேற்கொண்டமை சிப்பாய்க் கலகமெனும் முதல் சுதந்திரப் போர் ஏற்பட்டமை,

ரயில், தபால், தந்தி வசதிகள் வந்தமை - இவையெல்லாம் இந்திய வாழ்க்கைச் சூழலில் விரைந்த மாற்றங்களைக் கொணர்ந்தன. கூட்டுப் பங்கு நிறுவனங்களாக 1860இல் மீண்டும் பாங்குகள் வலுப்பெறத் தொடங்கின. 1900க்குப் பின்னர் வங்கித் தொழிலில் இந்தியர்கள் ஆர்வம் கொள்ளத் தொடங்கினர். என்றாலும் பம்பாயே வணிக நகராக வளர்ந்து வந்ததால், பல வங்கிகளின் தலைமையகங்கள் வடக்கேயே இருந்து விட்டன.

## முனைவர்கள் முன்னோடிகள் :

தென்னாட்டில் வணிக முன்னோடிகளாகத் திகழ்ந்தவர்கள் இவ்வகையிலும் நாட்டம் கொள்ள முற்பட்டதன் விளைவாக இந்தியன் வங்கி (1906) இந்தியன் ஓவர்சீஸ் வங்கி (1937) என்பனவும் எண்ணற்ற சிறு வங்கிகளும் ஏற்பட்டன. செட்டிநாட்டில், பாங்க் ஆப் காரைக்குடி, செட்டிநாடு கமர்ஷியல் பாங்க், நாட்டுக்கோட்டை பாங்க் லிமிடெட், (தேவகோட்டை) செட்டிநாடு பயனியர் பாங்க், நகரத்தார் பாங்க் லிமிடெட் (கண்டனூர்) என்பன அவற்றுள் சிலவாகும்.

தொழில் துறையில் வரையறுத்த சில குறிக்கோள்களுடன் வளர்ந்து வந்த தியாகராசர் மனத்திரையில், வங்கித் தொழிலும் ஒரு படமாக அமைந்தது. தன் தொழில் வளர்ச்சிக்கேற்ற நிதி வசதியளிக்கவும், தன் ஆலைகளின் காப்புக்கட்டணங்களைப் பெறவும், தன் கட்டமைப்பிலேயே இந்த நிதி நிறுவனங்கள் அமைவது அவசியம் என அவர் தெளிந்தார். அதுவும் தவிரச் செட்டி நாட்டுப் பகுதியிலிருந்து வெளி நாட்டில் வணிகம் செய்வோர்க்கு நிதிநல்க இங்கே ஒரு அமைப்பு ஏற்படுவது மிகப் பயன்தரும் எனக் கணக்கிட்டார்.

பர்மா முதலிய நாடுகளில் தனவணிகர்க்கு ஏற்பட்ட நட்டத்தால் புதுந்தொழில் தொடங்க முடியாமல் பல தனவணிகக் குடும்பங்களில் நலிவு தலைகாட்டியபோது, அவர்களுடைய இரும்புப் பெட்டங்களில் தூங்கிக்கொண்டிருந்த தொகைகளைத் தொகுத்துச் சேர்த்தால் புது நலம் பெருகும் எனத் திட்டமிட்டார்.

## தேவைகள், நாட்டங்கள் :

தமிழ்நாட்டில் பெரியவங்கிகளும் இன்சூரன்சுக் கம்பெனிகளும் இல்லாத குறையைப் பலமுறை தொழிலதிபர்களின் கூட்டங்களில் அவர் எடுத்துக் காட்டியிருந்தார்.

''அதிலும் நமது மாகாணமோ மிகமிகக் கீழான நிலையில் இருக்கிறது. நம் மாகாணத்தில் பெரும் வங்கிகளோ இன்சூரன்சுக் கம்பனிகளோ இல்லை. இவைகளை ஏற்படுத்தத் தலைவர்களும் செல்வர்களும் முன்வர வேண்டும்'' 1

தியாகராசர் முன் வந்தார். 1943இல் பாங்க் ஆப் மதுரை பிறந்தது. ஆலைகள் வழியாக மீனாட்சியின் பெயர் விளங்கச் செய்ததுபோல, வங்கியின் வழியாக மதுரை நகரின் பெருமையை நிலைநாட்ட முடிவு செய்தார். கிராமப் புறச் சேமிப்புக்களைத் திரட்டும் வகையில், கூட்டுப் பங்கு நிறுவன அடிப்படையில் வங்கிகளைத் தொடங்கும் தனியார் முயற்சிகள் அப்போது ஆதரிக்கப்பட்டதால் அது பாங்க் ஆப் மதுரை அமைய ஆக்கம் தந்தது.

பங்கு மூலதனமாக 5 இலட்ச ரூபாயும், செலுத்தப்பட்ட மூலதனமாக 11 இலட்ச ரூபாயும், அங்கீகரிக்கப்பட்ட மூலதனமாக 25 இலட்ச ரூபாயும் அமைய, தியாகராசராலேயே இந்த வங்கி திறந்து வைக்கப்பட்டது.

---

1. தூத்துக்குடி ஸ்பின்னிங் மில்ஸ் லிமிடெட் திறப்புரை- கருமுத்து

## இலட்சியங்கள் இலச்சினைகள் :

ஆலயக் கோபுரமும் ஆதவக் கதிர்விச்சும், நீர்ப்பரப்பும், தாமரையும் மீனும் கொண்டமைந்த பாங்க் ஆப் மதுரையின் இலட்சினை. அந்த வங்கியின் தனித்தன்மையையும் எதிர் கால விரிவையும் எடுத்துக்காட்டும் வகையில் அமைந்தன.

மதுரை, மணப்பாறை, சேலம் - எனுமிடங்களில் மூன்று கிளைகளுடன் வங்கி கால்கொண்டது. இந்த மூன்றிடங் களிலும் மீனாட்சி ஆலைத் தொகுதிகளின் வரவு செலவுகள் இந்த வங்கிவழியே நடத்தப்பட்டன. இதன் மானேஜிங் டைக்டராகத் தியாகராசரே பொறுப்பேற்றார். 4ஆவது கிளை கோவையில் துவக்கப்பட்டது 1949இல் வந்த பாங்கின் கம்பெனிச் சட்டப்படியும், ரிசர்வ் வங்கிக் கட்டுப் பாட்டு விதிகளுக்குத்தகவும் இந்த வங்கி செயல்பட்டு வந்தது. 1956 வரை இது நீடித்தது.

பெரிய வங்கிகளின் ஆதிக்கப் பெருக்கத்தால் சிறிய வங்கிகள் இயங்குவது சிரமமாகி வந்தது, பல நிர்வாகச் சிரமங்கள் ஏற்பட்டன. எனவே அவை பிற வங்கிகளுடன் இணைந்து செயல்படலாம் என மத்திய வங்கி இசைவு தந்தது. தென்னகத்தில் முதன் முதலில் சிறுசிறு வங்கிகளை யெல்லாம் எடுத்து நடத்த பாங்க் ஆப் மதுரை வழியே தியாகராசர் முன் வந்தார். அவர் எண்ணிவிட்டால் எடுத்து நடத்த முடியாதென ஒன்று இருந்ததில்லை அல்லவா?

## கிளைகள், விழுதுகள் :

சென்னையில் இருந்த ரிலையன்ஸ் பாங்கும், திருச்சி ராப்பள்ளி பாங்க் என நகரத்தாரால் நடத்தப்பட்ட பாங்கும். 1958இல் பாங்க் ஆப் மதுரையின் ஐந்தாம் ஆறாம் கிளை களாயின. கேரளத்தில் பார்வதி, விஜயமோகினி ஆலை

களைத் தியாகராசர் ஏற்றத்தைத் தொடர்ந்து, ஆலப் புழையில் எட்டுக்கிளைகளுடன் நடைபெற்று வந்த தாம் கோஸ் பாங்க, 1960இல் வந்திணைந்ததுடன், பாங்க் ஆப் மதுரைக்கு வெளிமாநிலத்தில் விழுது விட்டு வேரூன்றும் வாய்ப்புக் கிட்டியது. 1962இல் கரூரில் 4 கிளைகளுடன் இயங்கி வந்த சௌத் இந்தியன் கமர்ஷியல் பாங்க் சேர்க் கப்பட்டது. தென்காசி, இலஞ்சி பாங்க் அடுத்து இணைந்தது. மாயவரம் பாங்க் வந்து சேர்ந்தது. 1965இல் ஸ்ரீரங்கம் ஜனோபகார பாங்கும், 12 கிளைகளையுடைய செட்டிநாடு மெர்க்கண்டைல் பாங்கும், பாங்க் ஆப் மதுரை ஆயின. 1969இல் ஆறு ஊர்களில் வணிகம் புரிந்து வந்த, பாங்க் ஆப் காரைக்குடி, மதுரை வங்கியோடு இரண்டறக் கலந்தது.

1969இல் பெரிய வங்கிகளை நாட்டு உடைமையாக்கும் அவசரச் சட்டம் வந்ததால் புதிய வங்கிகள் வந்து சேர வில்லை. அதற்குள் பாங்க் ஆப் மதுரையின் கிளைகளே நாடெங்கும் விரியத் தொடங்கி விட்டன. 200க்கு மேற்பட்ட கிளைகளுடன் (இவற்றுள் தமிழ் நாட்டில் மட்டும் 166 கிளைகள் - கிராமங்களில் 100 கிளைகள்) ஒரு கோடி ரூபாய் அங்கீகரிக்கப்பட்ட மூலதனத்துடன், 56 இலட்ச ரூபாய் செலுத்தப் பெற்ற மூலதனத்துடன் 100 கோடி ரூபாய் வைப்பு நிதியுடன் வெளிநாட்டு வணிகத்திலும் இந்த வங்கி வளர்ந்தோங்கி வருகிறது.

### கவனங்கள் – கவலைகள் :

வங்கிகளின் மீது சமூகக் கட்டுப்பாட்டைக் கொணர் வதாகச் சொல்லி, பாங்க் ஆப் இந்தியாவுடன் இதை இணைத்து விட்டு தியாகராசரையே சேர்மனாக போடுவ தாகச் சொன்னபோது அவர் இசையவில்லை. 1969 வரை

இதன் நிர்வாகப் பொறுப்பைத் தியாகராசர் நேரடியாகக் கவனித்து வந்தார். புதிய கம்பெனிச் சட்டம் வந்ததைத் தொடர்ந்து அப்பொறுப்பிலிருந்து விலகிக் கொண்டார். மானேஜிங் டைரக்டராயிருந்த காலங்களில், வெளியூர் செல்கையில் எல்லாம், வழியில் உள்ள கிளைகளைப் பார்வையிடுவதை ஒரு வழகக்கமாக்கிக் கொண்டார். அதன் செயலாண்மைக் கூட்டங்களில் கலந்து கொண்டமைக்காக எந்த ஊதியத்தையும் வங்கியிலிருந்து ஏற்றுக் கொள்ள மாட்டார். மாறாக, வங்கியைப் பார்வையிட வரும் அதிகாரிகளுக்கெல்லாம் தன் செலவிலேயே விருந்தளித்து உபசரிப்பார், வங்கித் தொழிலில் எப்போதும் விழிப்பாயிருக்க வேண்டும் என இதன் மேலாளர்களுக்குத் தெரிவிப்பார். பிறர் பணத்தை வாங்கிப்போடும்போது அதற்கு எப்போதும் முழுப்பொறுப்பினை ஏற்றுச் செயல்பட வேண்டும் என வற்புறுத்துவார். வங்கிக்கு எழுதும் நிர்வாக முறைக் கடிதங்களை மிகச் சுருக்கமாக ஓரிரு வரிகளில் நறுக்குத் தெறித்தாற்போல எழுதுவார். வங்கியில் நிரந்தரவைப் பாகப் பணம் போடக் கூடியவர்களைத் தானே நேரடியாகச் சந்தித்துப் பேசி நிறையப் பணம் போட வைப்பார். ஆழ்ந்த தொலை நோக்கோடு சரியான முடிவெடுப்பார். அவரது பொற்கரத்தால் திறந்து வைக்கப்பட்ட பாங்க் பாங்க் ஆப் மதுரை, அந்நகரின் சிறப்பை நாடெங்கும் விளக்கச் செய்திருக்கிறது, இதில் கருமுத்து குடும்பத் தவர்கள் இன்றும் நிர்வாகப் பொறுப்பேற்றுள்ளனர்.

## காப்புகள் - இணைப்புகள் :

தியாகராசர் தொடங்கிய மற்றுமொரு நிதி நிறுவனம் மதுரை இன்சூரன்சுக் கம்பெனி. தொழிலகங்களுக்கும் இத்தகைய காப்பீட்டுக் கழகங்களுக்கும் உள்ள நெருக்கமான

தொடர்பினை அறிந்து, தாம் தொடங்கிய பல்வேறு நிறு வனங்களின் வணிகத் தொடர்புக்கு உதவுவதற்கென்றே இதனைத் தொடங்கினார்.

தென்னாட்டுத் தொழிலரசர்களான ராஜா சர், எம்.சிடி.எம். என்போர் நிர்வாகப் பிடிப்பில் சௌத் இந்தியா இன்சூரன்சு கம்பெனி, யுனைட்டெட் இந்தியா எனும் நிறுவனங்கள் இருந்தமை போலத் தியாகராசர், தமது கட்டமைப்பில் ஒன்றிருக்க வேண்டுமெனக் கருதி 1943இல் மதுரை ஜெனரல் இன்சூரன்சுக் கம்பெனியைத் தொடங்கினார். பலவகை இழப்பீட்டுப் பணிகளையும் மேற்கொள்ளாமல், கார், நெருப்பு - எனும் இரண்டின் அலுவல்களை மட்டும் ஏற்று நடத்தும் சிறியதொரு நிறுவனமாக, மீனாட்சி ஆலை அலுவலக மாடியில் இதனை ஏற்படுத்தினார். அவர் நடத்திய நிறுவனங்களிலிருந்தே பலகோடி மதிப்புள்ள அலுவல் வந்தும் மிகச் சிக்கனமாகவே நடத்தினார். பிரபல மான இன்சூரன்சுக் கம்பெனிகளில் பணியாற்றி ஓய்வுற்ற திறமைசாலிகளை இதன் அதிகாரிகளாக அமர்த்தினார். நாளடைவில் இது பிற கம்பெனிகளுடன் இணைந்து வணிகம் செய்ய வழிபிறந்தது. கப்பல் விபத்து இழப்பீட்டு (Marine Insurance) வணிகத்துடன், வெளிநாட்டு அலுவலையும் நார்விச் யூனியன் பயர் இன்சூரன்சுக் கம்பெனியின் இந்தியக் கிளை அலுவலகமாக இணைந்து ஏற்றுக் கொண்டது. 1957இல் கேரளத்தில் விஜயசாரதி இன்சூரன்சுக் கம்பெனியை இது ஒப்புக் கொண்டது. ஒரு நபருக்கு 1,000 ரூபாய்க்கு மட்டுமே உச்சபட்சமாக ஆயுள் பாதுகாப்பு வழங்கும் ஜனதாத் திட்டத்தை அது அப்போதே செயலாக்கி விட்டது. இதனால் ஆலைத் தொழிலாளர்கள் பயன் அடைந்தனர். இந்தச் சிறு நிறுவனம், பின்னர் ஆயுள் காப்பீட்டுக் கழகத்தோடு இணைக்கப்பட்டு விட்டது.

மதுரை இன்சூரன்சுக் கம்பெனிக்குப் பல இடங்களில் கிளை கிடையாது. மிகப் பிற்காலத்தில் சென்னையில் ஒரு செயலகம் திறக்கப்பட்டது. [1968இல் பொறுப்புக்களை மறு இன்சூரன்சு செய்து பகிர்வுப்பாதுகாப்புத்தேடும் (ReInsurance Scheme) முறையினை இது ஏற்றபின், பல பெரிய நிறுவனங் களுடன் இதற்குத் தொடர்பு ஏற்பட்டது. 1973இல் இது அரசு நிர்வாகப் பார்வைக்குள் வந்து 1975இல் யுனைட்டெட் இந்தியாவுடன் இணைக்கப்பட்டடு விட்டது.

தியாகராசர் இந்த நிதி நிறுவனத்தைச் செட்டோடு நடத்தினார். குறைந்த நபர்களைக் கொண்டு நேரடிக் கவனம் செலுத்தப்பட்டதால், இது அதிகமான நிகர லாபம் ஈட்டித் தந்தது. தந்த கமிஷனும் குறைவு; வந்த உரிமக் கோரிக்கையும் (Claim) குறைவு; எப்படியும் அதிக வணிகம் செய்து, ஓரளவே வருமானம் காட்டும் பெரிய நிறுவனங் களைப் போலன்றி, ஓரளவே வணிகம் செய்து தாராளமாக வருமானம் ஈட்டிய கம்பெனியாக இதனைச் செயல் படுத்தினார். இதனால் நாட்டுடைமையாக்கப் பட்ட பின்னர் இதன் பங்குதாரர்களுக்குக் கனிசமான நட்ட ஈடு கிட்டியது. தியாகராசரின் நிர்வாகத் திறமைக்கு மதுரை இன்சூரன்சுக் கம்பெனியும் ஒரு சான்று!

இது நாட்டுடைமையாக்கப்பட்டுத் 'தியாகராச முத்திரையை' இழந்து விட்டது; ......

ஆனால் பாங்க் ஆப் மதுரை தன் நிறுவனரின் நினைவை மறவாது போற்றி வருகிறது.

"... ... ... ... ... ...
திருந்துமொழியில் 'தமிழ்நாடு'
சிறப்பாய் நடத்தும் பேரறிஞர்
தியாகராசர்க்கு ......"

- தமிழறிஞர் அ. கி. ப.

# ஏடும் எழுத்தும்

## 10

### ஏடே - இதயம் :

தியாகராசர் எத்தனையோ பணிகளில் ஈடுபட்டாலும், அவர்க்கு எப்போதும் மன நிறைவினை அளித்த பணி 'தமிழ்நாடு' இதழினை நடத்தியதுதான். தொழிலதிபர் களாயிருப்பவர்கள் பெரும்பாலும் தம் புகழ் பரப்பவும் தம் தொழில் நலன் காக்கவுமே பத்திரிக்கைகளை நடத்துவது வழக்கம். ஆனால் தியாகராசர் தன் தொழிலுக்கு இடையூறு நேர்ந்தபோதும், தன் புகழ் நோக்காது அரசின் முரண் பாடான கொள்கைளை எதிர்க்கவும் அதனை மக்கள் மன்றத் திற்குக் கொணரவும் தமிழ்நாட்டின் வளர்ச்சி நோக்கி அந்த ஏட்டினை நடத்த முற்பட்டார். பத்திரிக்கைத் துறையில் அப்பட்டமான துணிச்சல் கூடாது என்பது அத்தொழில் ரகசியமாயினும், அவர் துணிவோடும் உறுதியோடும் அந்த நாளேட்டைப் புது நெறியில் நடத்தினார்.

நெப்போலியன் "ஆயிரம் துப்பாக்கி முனைகளைவிட ஐந்தாறு பத்திரிக்கைகளுக்கு அஞ்சுவேன்" எனச் சொன்னான்.[1]

---

1. "I fear three newspapers more than a hundred thousand bayonets"

### ஏடே - அரண் :

பர்க் எனும் புகழார்ந்த ஆங்கிலப் பேரறிஞன் '' பாராளு மன்றத்தில் மூன்று அணிகள் ( Estates ) உள்ளன. அவற்றை விடச் சிறந்த நான்காவது அணி பத்திரிக்கையே எனப் புகழாரம் சூட்டினான்.

'' பத்திரிக்கைகள் இல்லாமல் அரசாங்கம் மட்டும் வேண்டுமா அல்லது அரசாங்கம் இல்லாமல் பத்திரிக்கைகள் மட்டும் வேண்டுமா என என்னிடம் கேட்டால், பத்திரிக்கைகளே போதும் எனத் தயங்காமல் சொல்வேன்'' என அமெரிக்க அறிஞன் தாமஸ் ஜெப்பர்சன் முழங்கினான்.[1]

குடியாட்சி நாட்டின் வளர்ச்சிக்கு அடித்தளமாகவும் உரிமைக்கு வேலியாகவும் அமைவது செய்தி இதழ்தான். நம் நாடு உரிமை பெற்றவுடன், வளர்ச்சித் துறையில் பல புதிய திருப்பங்கள் ஏற்பட்டன. பொருளாதார, அரசியல், சமூக, கலாச்சார, அறிவியல், உணர்வியல் துறைகளில் எல்லாம் சடுதியில் ஏற்பட்ட மாற்றங்களால் மக்கள் வாழ்வும் மாறுதலுக்கு உள்ளாயின.

### ஏடே – அடிப்படை :

இந்தியாவில் பிரபலமான செய்தி ஏடுகள் எல்லாம் தலைநகரங்களிலிருந்தே வெளியிடப்பட்டு வந்தன. இதனால் அப்பெரிய நகரங்கள், வட்டாரங்களின் வளர்ச்சி பெருகிற்றே தவிர, இதர பகுதிகளின் தேக்கத்தை எடுத்துரைப்பார் யாருமில்லை. டெல்லி அரசியல் தலை நகரம், பம்பாய் வணிக நகரம், கல்கத்தா தொழில் (தொழிலாளர்) நகரம், சென்னை கலைநகரம் - இங்கிருந்து பிரசுரமான

---

1. "Where it left to me to decide whether we should have a Government without newspapers or newspaper without Government I would not hesitate to prefer the latter" - Thomas Jefferson

பத்திரிக்கைகள் இந்நகரங்களில் பரிணாம வளர்ச்சிக்கு உதவினவே தவிரப் பிறபகுதிகளிலும் அவ்வாறு வளரப் பெருமளவு உதவவில்லை. நம்பத்தகுந்த செய்தியும் நடுநிலைக்கருத்தும் (Reliable News and Balanced Views) வழங்கிய 'ஹிந்து' இதழ் போல மதுரையிலும் ஒரு தமிழேடு வரவேண்டும் என்ற எண்ணம் பரவலாக இருந்து வந்தது.

எற்கெனவே மதுரையில் திரு. சி. பா. ஆதித்தனால் ஆரம்பிக்கப்பட்ட மதுரைத் தந்தி இதழ் பாமரமக்களின் உணர்வுக்குத் தீனி தருவதாயிருந்தது. வெளியிடும் செய்தி யிலும், அதை வெளியிடும் முறையிலும் தனக்கென ஒரு தனித்தன்மையை மேற்கொண்டு குறிப்பிட்டதொரு பகுதி மக்களைக் கவரும் வகையில் அது இயங்கி வந்தது.

நாடு உரிமைபெற்ற பின்னர், மாநிலங்களும் மொழியடிப் படையில் பிரிந்து சம உரிமையுடன், கூட்டாட்சிப் பொறுப் பேற்கவேண்டும் என்பதில் உறுதியான கருத்துக் கொண்டி ருந்த தியாகராசர், தமிழ்நாட்டின் நலம் காக்கவும், மதுரை போன்ற பின்தங்கிய பகுதிகளின் தேவைகளை உணர்த்தவும் மதுரையிலிருந்து ஒரு நற்றமிழ் ஏட்டினை நடத்தவேண்டு மென முடிவு செய்தார்.

வளரமுற்பட்ட இளமையிலேயே பத்திரிக்கையாளராகப் பயிற்சி பெற்று அடக்கப்பட்டோருக்காக அயராப் போர் தொடுத்த அவரது பேனா மீண்டும் எடுக்கப்பட்டது. மதுரையில் 'தமிழ்நாடு' பிறந்தது. ஆம். அப்புறம் தான் இன்றைய 'தமிழ்நாடே' வந்தது!

## ஏடே - இலட்சியம்:

20-10-1951இல் தமிழ்நாட்டின் முதல் இதழ் வந்தது. மொழிபற்றிய செய்திகளும், இலக்கியக் கட்டுரைகளும்

இனிய தமிழ்நடையில் இவ்விதழில் மிகுதியாக இடம் பெற்றன. இவ்விதழின் கொள்கை பற்றி, முதல் இதழில் ''அகர முதல'' எனும் குறளை எடுத்தாண்டபின் நிருவாக ஆசிரியர் தியாகராசர் பின்வருமாறு எழுதினார்:

''தமிழ்நாடு'' எனும் பெயர் பூண்டு இந் நாள் இதழ் இன்று வெளிவருகிறது. கல்தோன்றி மண்தோன்றாக் காலத்தே எனப் பெருமைபெற்ற பழந்தமிழர் உரிமை களை, பண்பாடுகளைப் பாதுகாக்கத்தோன்றும் இவ்விதழைத் தமிழ்நாடு போற்றி வரவேற்குமெனத் (அப்போதே அவருக்கு அவநம்பிக்கை இருந்தது) துணிந்து தொடங்கு கின்றோம். [1]

எதையும் தக்காரைக் கொண்டு சிறப்புற நடத்துவதில் வல்லவரான தியாகராசர் தமிழ்நாடு இதழின் ஆசிரியப் பொறுப்பினை ஏற்கப் பேராசிரியர் எம். இரத்தினசாமியைக் கொணர்ந்தார்.[2] அரசியல் முறை வல்லுநகராகப் புகழ் பெற்ற பேராசிரியர் இரத்தினசாமி அண்ணாமலைப் பல்கலைக்கழகத் துணைவேந்தராயிருந்து ஓய்வுற்றிருந் தார். தியாகராசர் கல்வி நிறுவனங்கள் பலவற்றைத்

---

1. "An Independent, Daily Newspaper, specialising in simple yet pure Tamil, and dedicated to social and intallectual uplift" என முதல் இதழினைத்திறனாய்வு செய்தது 'மெயில்' இதழ்.

2. எம். இரத்தினசாமி, பார்-அட்-லா பட்டமும் ஆங்கில அரசு விருதுகளும் பெற்றவர், திருச்சி சூசையப்பர் கல்லூரி, ஐதராபாத் நிஜாம் கல்லூரிகளில் பயின்றபின், கேம்பிரிட்ஜ் சென்றவர். ஆங்கிலப் பேராசிரியராகப் பரோடாக் கல்லூரி யிலும், வரலாற்றுப் பேராசிரியராகப் பச்சையப்பன் கல்லூரி யிலும் பணியாற்றியவர், சென்னை சட்டசபையில் சபாநாயக ராகவும், பாராளுமன்ற உறுப்பினராகவும், 'டெமாக்கரசி' இதழ் ஆசிரியராகவும், சுதந்திரக்கட்சி அமைப்பாளராகவும் அரசியலில் பங்கு கொண்டவர்.

தொடங்கி யிருந்தமையாலும், அத்துறை வல்லாரின் ஆலோசனை எப்போதும் வேண்டுமென்றும் கருதியதோடு, சற்று இடர்ப்பட்டிருந்த இப்பேராசிரியர்க்கு உதவும் எண்ணத்துடன், தமிழ் ஏட்டிற்கு இவ்வாங்கில வல்லுநரை ஆசிரியராக நியமித்தார். பேராசிரியர் இரத்தினசாமி, அக்காலத்தில், இந்தியாவில் நிறையப் புத்தகம் படித்த மூவரோடு ஒருவராகக் கருதப்பட்டார். சி. பி. ராமசாமி ஐயர், அன்னிபெசண்ட், சீனிவாச சாஸ்திரியுடன் இவரும் அறிஞராகப் போற்றப் பட்டார்.

## ஏடே-கருவி :

தமிழ்நாடு இதழின் மொழித் தூய்மைபேண ஒளவை சு. துரைசாமி பிள்ளை உதவினார். ''அமிழ்தினும் இனிய தமிழ்மொழியை வழுவின்றி நாட்டில் பரப்பத்'' தமிழ்நாடு அருந்தொண்டாற்றத் தொடங்கியது.

'தமிழ்நாடு' - செய்தித்துறையில் தியாகராசரின் சீர்திருத்தப்பிள்ளை. அன்னைத் தமிழில் அழகு நடையில் 'தமிழ்நாடு' இதழில் சொல்லப்பட்ட செய்திகள் சுவையைச் சிந்தின. அவர் எண்ணியவாறும் எழுதியவாறும் தமிழ் வளர்ந்தது. 'ஸ்ரீ' திருவாயிற்று; 'விமர்சனம்' திறனாய்வு ஆயிற்று ; 'பிரசங்கம்' பேச்சாயிற்று; 'மகாநாடு' மாநாடு ஆயிற்று; 'பத்திரிக்கை'யும் இதழாயிற்று. வழக்கிலிருந்து வன்கொடுமையால் மறைக்கப்பட்ட ஆட்சிச் சொற்கள் எல்லாம் அரசு மேடைக்கு வந்தன.

தமிழ்நாடு இதழ் தனக்கெனப் புதுப்புது முறைகளை வகுத்துக் கொண்டது. ஆசிரியர் குறிப்புக்கு ஏற்ற ஆங்கில மேற்கோளும், அதற்கு இணையான தமிழ்மேற்கோளும் தரப்பட்டன. பாலோடு தேன் கலந்தாற்போலச் செய்தி உடன் செந்தமிழையும் குழைத்துத்தரும் புதுநெறி வந்தது.

கவிதைகளும் இலக்கியக் கட்டுரைகளும் - செய்தி இதழுக்குப் பொருந்தாதவை என்னும் நிலைபோய், ஞாயிறு மலர்களில் அவையெல்லாம் அழகு சேர்க்கத் தொடங்கின. இதைச் சுதேசமித்திரன் இதழில் பணிபுரிந்தபோது பாரதியாரே செயற்படுத்த இயலாமல் குறைப்பட்டு எழுதியிருக்கிறார்:

''என்னை வசனம் மட்டும் நித்தமும் எழுதென்று
சென்னைத் தினசரியின் ஆசிரியர் செப்புகின்றார்
பாட்டெழுதவேண்டாமாம்—பார்த்தீரா அன்னவரின்
பாட்டின் பயனறியாப் பான்மையினை',

என்றெழுதினார் பாரதியார். ஆனால் தமிழ்நாடு இதழில் கவிதைகள் நாளும் மலர்ந்தன. இதனால் நாடெங்கும் பாட்டெழுதுவோர் தொகை வளர்ந்தது.

## ஏடே - வழிகாட்டி:

அதற்கு முன்னரெல்லாம் தமிழகத்தின் செய்தி இதழ்கள் ஓரளவு எழுதப் படிக்கத் தெரிந்தார்க்காக மட்டுமே நடத்தப் பட்டமையால், பேசுவது போலவே அதில் எழுதப்பட்டன. பிறமொழிச் சொற்கலப்பும் இலக்கணப் பிழைகளும் மலிந்து இருந்தாலும் அவற்றைக் குறையென யாரும் கருதுவது இல்லை. செய்தி தானே தேவையென்று மொழியைப் புறக்கணித்தே வந்தனர்.

நல்ல தமிழ் நடையில் இதழ்களை நடத்தி வழிகாட்டிய திரு. வி. க, தமிழ் இதழ்களின் குறைகளைப் பற்றிப் பேசுகையில் —

'' தமிழைப் போல் உயர்ந்த மொழி
தரணியெங்கும் கண்டதில்லை.
தமிழரைப் போல் மொழிக் கொலையில்
தலைசிறந்தோர் எவருளரே '' என வருந்தினர்.

" வரவேற்புக்கு வந்தனம் கூறுகையில் ஆனந்தபாஷ்யம் சொரிந்தார்" எனவும் " தஞ்சை டெல்டாவுக்கு மேட்டூர் அணைமூலம் சப்ளை நீடிக்கும்" எனவும் தமிழையே சிதைத்துத் தமிழ் ஏடெழுதிப் பிழைக்க வந்த கொடுமையைப் பாரதி தாசன் தமிழகத்திலே சாடினார்.

" ஈங்கிவற்றில் ஏதுமிலார் தமிழினிலே
ஏடெழுதிப் பிழைக்கவந்தார் "

தியாகராசர் ஏடெழுதிப் பிழைக்க அல்ல. ஆனால் பிழை திருத்தவந்தார். ஆங்கில நாளிதழ்களில் ஆங்கிலப் பேராசிரியர்களை அமர்த்தியதைப் போல, தமிழ்ப் புலவர் களையும் தமிழ் நெஞ்சமுடையவர்களையும், ஓய்வு பெற்ற அறிஞர்களையும் 'தமிழ் நாட்டிற்கு' அமர்த்தினார். திருவாசகமணி கே. எம். பாலசுப்பிரமணியம், சடையப்பர் பரம்பரையில் வந்த திருவெண்ணைநல்லூர் அனந்தவைத்திய நாதன் (ஏ. வி. நாதன்) எம். எஸ். பி. சண்முகம், கலை அன்பன் முதலியோர் தமிழ்நாட்டில் பணி புரிந்தனர். எண்ணற்ற தமிழ் அறிஞர்களின் கட்டுரைகள் தமிழ்நாட்டைச் செழிக்கச் செய்தன.

தமிழ்நாட்டின் தமிழ்நடை, பிற செய்தி இதழ்களின் தமிழ்நடையை மாற்றச் செய்தது. அதுவரை 'ஸ்ரீ' போட்டு வந்த தினமணி, 'திரு' வாக்கிக்கொண்டது. பின்னர் கழக ஏடுகளில் தமிழ்ப்பரணி தொடரத் 'தமிழ்நாடே' முன்னோடி ஆயிற்று.

## ஏடே – எதிரொலி

தனித்தமிழ் இயக்கம் போலவே, 'தமிழ்நாடு' என இந்த நாட்டுப் பகுதியைப் பெயர் மாற்றி அழைக்கவேண்டும் என்ற இயக்கமும் இவ்விதழால் தொடர்ந்து நடத்தப் பட்டது.

1956 இல் தமிழகப் பெயர் மாற்றக் கிளர்ச்சியைத் தமிழரசுக் கழகம் ஆரம்பித்தது. பல்லாயிரவர் சிறைப் பட்டனர். விருதுநகர் சங்கரலிங்கனுர் 78 நாள் உண்ணு விரதமிருந்து உயிர்விட்டார். போராட்டம் தொடர்ந்தது. ''இந்திய அரசியலமைப்பில் வகை செய்யப்பட்டுள்ளவாறு, ஏற்ற சட்டத்தைக் கொண்டுவருவதன் மூலம், சென்னை மாநிலம் என்ற பெயரைத் 'தமிழ்நாடு' என்று மாற்றம் செய்ய இந்திய அர்சினரை வலியுறுத்துமாறு இச்சபை அரசாங்கத்தைக் கேட்டுக்கொள்ளுகிறது'' எனச் சென்னைச் சட்ட சபையில் 1964இல் கொணரப்பட்ட தீர்மானம் பெரும்பான்மையோர் ஆதரவின்மையால் தோல்வியுற்றது. ''இது, கட்சி வேறு பாடின்றி அனைவரும் வெட்கப்படவேண்டிய ஒன்று'' என்றார் கருமுத்து. அவர் கருத்துக்களைத் தமிழ்நாடு விடாமல் பறை சாற்றிவந்தது. பின்னர் ஒருவழியாக, சென்னை மாநிலம் தமிழ்நாடு ஆயிற்று. டெல்லிப் பாராளுமன்றத்தில் 1968 நவம்பர் 23இல் அரசியலமைப்புச் சட்டத் திருத்தத் தீர்மானம் ஒருமுகமாக நிறைவேறியது.

1—11—1956 இலேயே மொழிவழிமாநிலப் பிரிவுப்படி, தமிழ்பேசும் நிலப்பகுதி தனியே அமைக்கப்பட்டாலும் இங்கே ஆட்சிமொழி தமிழாக மாறும்நாள் வரவில்லை. அதற்கும் போராட்டம் நடந்தது. மாநாடு கூடிற்று. காங்கிரசு, திராவிடர்கழகம், தி. மு. க., பொதுவுடைமைக் கட்சி - என எல்லாக்கட்சித் தலைவர்களும் கலந்துகொண்டு, முழு உரிமைபெற்ற தமிழகத்தில் ஆட்சி தமிழிலேயே நடக்க வேண்டும் எனக் குரல் கொடுத்தனர். பிற செய்தி இதழ் களெல்லாம் இச்செய்திகளை எப்போதும் போல இருட்டடிப் புச்செய்து பரந்த பாரதம் பாடின. 1 ஆனால் தமிழ்நாடு

1. "The Power of the press is to sup-press"
- Lord Northcliff

இவ்வகையிலும் போர்க்கொடி உயர்த்திற்று. தன் இந்தி எதிர்ப்புப் போராலும் தனி வரலாறு படைத்தது.

## ஏடே - எதிர் அணி :

ஆலயங்களில் தாய்மொழியில் வழிபாடு செய்யத் தயங்கிய காலம் அது. ''அருச்சனை வயலுள் அன்பு வித்திடுதலுக்கு'' ஆள் இல்லை. அதற்கும் அணி திரட்டிற்று தமிழ்நாடு. பின்னர் 1961இல் மீனாட்சியம்மன் கோயிலில் தமிழவேள் பி. டி. ஆர். தலைமையில், அறநிலைய அமைச்சர் திரு. பக்தவத்சலத்தால் திருமுறையருச்சனை தொடங்கப் பெற்றது. இதிலும் தமிழ்நாடு அணி சேர்த்தது.

''வானொலி'' எனும் வளஞ்சேர்ந்த மொழியிருக்கச் செவிகைக்கும் ஆகாஷ்வாணியைத் திணிக்கலாமா? கரும்பு இருக்க, இரும்பு கடிக்க ஒருப்படலாமா? என்றெல்லாம் கேட்டு, வானொலிவர வழிநடைப்பாட்டிட்டது தமிழ்நாடு.

நல்லதமிழ் நாடெங்கும் பரவுவதற்குப் பல தொடர் கட்டுரைகள் தமிழ்நாட்டில் வெளியிடப் பெற்றன. இராமலிங்கனார், பரந்தாமனார் போன்றோரின் எழுத்தாக்கங்கள் பல இனிய மாற்றங்களை நாடெங்கும் அமைதியாக ஆனால் உறுதியாக உருவாக்கிவந்தன.

## ஏடே - கண்ணோட்டம் :

செய்தித்தாளுக்கென ஒரு தேசீயக் கண்ணோட்டம் வேண்டும் என்பது உண்மைதான். ஆனால் மரபுவழி மாநிலக் கண்ணோட்டமும் தேசீயக் கண்ணோட்டத்தின் ஒரு கூறு என்ற உணர்வு மேலோங்காவிட்டால் தேசீயக் கண்ணோட்டம் என்பது ஒருவர்மீது திணிக்கப்பெறும்

ஆதிக்கக் கண்ணோட்டம் ஆகிவிடும். எனவே மாநிலக் கண்ணோட்டம் தேசீயக் கண்ணோட்டத்தின் ஒரு கூறே என்ற உண்மை விளங்கிவிட்டால், இரு கண்ணோட்டங்களும் ஓரிணையாகச் செயல்பட்டு ஒரே வளர்ச்சிப் பார் வையினை நல்கும். இவ்வகையில் 'தமிழ்நாடு' நல்ல நடையில், ஆனால் செவ்விய உணர்வோட்டத்தில், உண்மையை விடாது சொல்லிவந்தது. ஒரு செய்தித்தாளின் பணி, செய்தியை அப்படியே தருவது, அதைத் திரிக்காமல் விளக்குவது, அதுபற்றி மக்கள் கருத்து உருவாக உதவுவது என்பதே ஆகும். இம்முத்திறப்பணிகளைச் செய்த தமிழ் நாட்டுப் பாங்கினை - 'Dignity, Decency, Decorum' எனும் மூன்று சொற்களால் சுட்டி மகிழ்வார் பேராசிரியர் ரத்தினசாமி.

## ஏடே - எண்ணம் :

சென்னையில் நெடுங்காலமாக நடத்தப்பட்டு வந்த 'மெயில்' ஏட்டினைத் தியாகராசர் பொறுப்பில்விட முயற்சிகள் ஒரு சமயம் நடந்தன. அது கைகூட வில்லை. அது வந்திருந்தால், முதல்தரமான ஆங்கில ஏட்டினையும் தியாகராசர் நடத்திக் காட்டியிருப்பார்.

சென்னையிலிருந்து 'ஹிந்து' இதழுடன் இணையாகத் ''தமிழ்நாட்டை'' வெளியிட ஒரு முயற்சி மேற்கொள்ளப் பட்டது.

''பொருள் வருவாயை மட்டும் குறிக்கோளாகக் கொண் டிருந்தால் கலைத்தந்தை அவர்கள், ''ஹிந்து'' நாளிதழ் உரிமையாளர்கள் மதுரைப் பதிப்பு வெளியிட விரும்பி, அத னோடு சேர்த்துத் 'தமிழ்நாடு' இதழையும் நடத்த முன் வந்தபோது அந்த ஏற்பாட்டை ஒப்புக் கொண்டிருப்பார்.

ஆனால் தனித் தமிழ்க் கொள்கையை விட்டுக் கொடுக்கக் கலைத்தந்தை சற்றும் இசையவில்லை. 1

சென்னையில் தமிழ்நாடு பதிப்புச் சிலகாலம் வெளி வந்தது, பின்னர் மூடப்பட்டது. ஆனால் மதுரைப் பதிப்பும் 1968இல் மூடப்படநேர்ந்தது தான் வருந்தத்தக்கது. அதற்கென உதவித் தொகையாக 50 இலட்ச ரூபாய் வரை வழங்கப்பட்டது. தியாகராசர் தொட்ட துறைகளில், அவர் காலத்திலேயே தழைத்து நிற்காமல் போன ஒன்று தமிழ்நாடு இதழ்தான். அவர் மனதைப் பொறுத்தவரை, அது வாடியதே தவிர, அந்த இதழ் என்றென்றும் கருகிவிட வில்லை.

## ஏடே - இழப்பு :

தமிழ்நாட்டில் வெளி வந்த ஏடுகளில் பல, வலுவான அரசியல் கட்சிகளின் 'வாய்ப்பாடு' களாக வெளி வந்த போது எந்தவித அரசியல் கட்சியின் ஆதரவும் இல்லாமல் தமிழ்நாடு நடக்க வேண்டியிருந்தது, தமிழ் உணர்வு என்பது கழக ஏடுகளாலும் வீறுடன் பரப்பப்பட்டதால் புதிய தலை முறையினர் 'தமிழ்நாட்டால்' ஈர்க்கப்படவில்லை. அதை வாங்குவார் கைகள் சுருங்கின.

"இனம் போன்று இனமில்லாத் தமிழர் கூட்டம் 'தமிழ்நாடு' வாங்கவில்லை. தமிழ்நாட்டை விற்றே பழக்கப்பட்டவர்கள் அல்லவா தமிழர்கள்! வாங்கினால் என்ன வாங்கா விட்டால் என்ன? விற்பனை தொடர்ந்தது, ஆதிவாசிகள் நாட்டில், அவர்கள் ஆடை கட்டிக்கொள்ள வேண்டுமென்று கருதித் துணிக்கடை வைத்த பின்னர் துணி விற்கவில்லை என்று கவலைப்பட முடியுமா?

---

1. சோமலெ - ருக்மாக் - கட்டுரை

தமிழ்நாடு இதழ் விற்பனை குறைந்து கொண்டே வந்தது என்றாலும் 'கடை விரித்தோம் கொள்வாரில்லை' எனக் கட்டிக் கொள்ளவில்லை. இழப்பிருந்தாலும் ஈடில்லாத பணி யென்று எண்ணித் தொடர்ந்தார்

"அவருக்குப் பல இலட்சம் ரூபாய்கள் இழப்பு நேரிட்டும் அவர் தம் கொள்கையிலிருந்து பிறழாமல் நடத்தியதை ஒரு மாபெரும் புரட்சி என்றே சொல்லலாம்" 1 நாளேடாக வந்த தமிழ்நாடு 1973இல் வார மடலாக்கப் பட்டு, 1978 வரை ஓடியது.

இதழை நடத்துவோர் நலனைக் காட்டிலும் என்றும் வளரும் மக்கள் நலனை, நாட்டு நலனை முதல்நோக்காகக் கொண்டு நடத்தப்படும் ஏடுகள் என்றென்றும் வெற்றிபெறும் என்பார்கள். ஆனால் தமிழ்நாடு, தமிழ்மொழியின் நலனையும் தமிழ்நாட்டு நலனையும் தலைநோக்காகக் கொண்டு பரப்பப் பட்டும் அதன் பணிகள் தமிழ் நாட்டவரால் ஏனோ பாராட்டப் படாமல் போய்விட்டன!

ஆனாலும் கூட, இவ்விருவகை நலன்களையும் போரிட்டுக் காக்க வேண்டியதொரு காலகட்டத்தில் அவரால் தொடங்கப் பெற்ற தமிழ்நாடு இதழ் காலத்திற்கு அஞ்சாமல் பணியாற்றியது. ஒருவகையில் காலத்தின் தேவையினையே இது நிறைவு செய்தது என்ற மனநிறைவினைத் தியாகராசர் கொண்டார்.

---

1. கலைத்தந்தை - கட்டுரை

மொழி சீர்திருத்தம், தொழிலாளர்,
நலம் எனுமிவற்றைத் தனித்து
அணுகமுடியாது.

- திரு. வி. க.

# உழைப்பும் உரிமையும்

## 11

### முன்னேற்றச் சிந்தை :

தியாகராசர் - தொழிலாளர் உரிமைகாக்கும் தலைவராக உருவானார். அவர் தொழிலரசர் ஆனபின்னர் அவர் நடத்திய ஆலைகளிலேயே பல தொழிலாளர் பிரச்சினைகள் ஏற்பட்டன. அப்போது கூடத் தொழிலாளர்க்குரிய உரிமை எது, கடமை எது. எனும் தன் கருத்தில் முரண்பாடின்றியே அவர் நடந்து கொண்டார். தொழிலாளிகளைச் சுரண்டிக் கொழுக்க முனைந்த முதலாளித்துவத்தை எப்போதும் தயங்காது கண்டித்தார். அதே சமயத்தில் தொழிலையே குலைக்கும் தொழிற்சங்கப் பேயாட்டத்தையும் அவர் அஞ்சாமல் எதிர்த்தார். இந்த ' முன்னேற்றச் சிந்தையுடைய முதலாளி [1] கொண்டிருந்த தொழிலாளர் பற்றிய கருத்துக்கள் என்றென்றும் உணரத் தக்கவை.

மதுரையில் ஏற்கெனவே இயங்கி வந்த நூற்பாலை யொன்றில் ஏற்பட்ட வேலை நிறுத்தத்தால் வெளியேற்றப் பட்ட தொழிலாளர்கட்கு மறுவாழ்வளிக்கும் முயற்சியாக, மகாத்மா காந்தியடிகளின் தூண்டுதலால் துவக்கப்பட்ட மீனாட்சி ஆலையில் தொழிலாளர் பிரச்சினையே ஏற்படா

---

1. '' Progressive capitalist ''

மலிருந்ததில்லை. உரிமைபெற்ற நாட்டுப் போக்கிலும் தொழிலாளர் இயக்க வளர்ச்சிப் போக்கிலும் நாளடைவில் உருவான சில கொந்தளிப்புகள் மீனாட்சி ஆலைகளையும் உட்படுத்தின. ஒவ்வொரு கால கட்டத்திலும் வெவ்வேறு காரணங்களுக்காக ஏற்பட்ட தொழிலாளர் பிரச்சினைகளின் மீது தியாகராசர் விட்டுக் கொடுத்த தருணங்களும் உண்டு. விடாப் பிடியாகத் தாக்குப்பிடித்த சந்தருப்பங்களும் உண்டு. ஆனாலும் கூடத் தொழில் நலம் கருதிய தொழிலாளர் களின் வளர்ச்சித் திறம் குன்றாத வகையில் எப்போதும் நடந்து கொண்டிருக்கிறார். தொழிலாளர் வாழ்க்கை நலம் பற்றிய முன்னோக்கக் கருத்துக்களை ஆலை உரிமையாளர்களிடமும் அரசதிகாரிகளிடமும் பலமுறை தெரிவித்திருக்கிறார். தொழிலாளர்களை உழைக்கும்கைகளை உடைய இயந்திரங்களாக மட்டும் கருதி விட்டு அவர்கட்கு இதயமும் வயிறும் உண்டு என்பதைப் புறக்கணித்து விடக் கூடாது என எச்சரிப்பார். அவர்களது வயிறும் மனமும் நிறைந்தால் தொழிலும் வளமும் சிறக்கும் எனப் புலப்படுத் துவார். மரம் இருந்தால் மட்டுமே நிழல் கிடைப்பதுபோலத் தொழில் இருந்தால்தான் தொழிலாளர் நலமும் நிலைக்கும் என்பதைப் புரிந்து, தொழில் திறம் கெடாமலே தொழி லாளர்கள் உரிமை கோர வேண்டுமென்றும் எப்போதும் துணிவோடு சொல்வார். பொருளாதார மந்த காலத்தில் ஆலையை நடத்துதற்குப் பெரிதும் அல்லற்பட்ட சமயங்களில் கூடத் தொழிலாளர்க்கு வாரச் சம்பளம் போட்டுவிடுவதில் பல சிரமங்களை அனுபவித்தவர் அல்லவா?

## அபிமானத் தொண்டு:

தொழிலாளர்க்கு வாழ்க்கைக் கூலியைத் தருவதோடு, அவர்கட்கு மகிழ்ச்சியும் மனநிறைவும் தரும்வகையில் வீட்டு வசதி; கல்வி வாய்ப்பு முதலிய சேமநல வசதிகளையும்

செய்தளிப்பதைப் பெரிய தொழில் நிறுவனங்கள் தம்செயல் திட்டங்களில் ஒன்றாகவே கருதவேண்டும் என அகமதாபாத் நெசவாலை ஆய்வு மன்றத்தில் பேசுகையில் தியாகராசர் வலியுறுத்தினார்.[1] தொழிற்சாலைகளைக் கட்ட எவ்வளவு அக்கறை எடுத்துக்கொண்டாரோ அதுபோலத் தொழிலாளர் குடியிருப்புகளைக் கட்டுதற்கும் முன்னோடியாகத் திகழ்ந்தார். சமயநல்லூர், மணப்பாறை. மதுரை முதலிய இடங்களில் அரசு நல்கிய உதவியினையும் ஏற்று, தொழிலாளர்க்கென நவீனமான குடியிருப்புகளைக் கட்டித் தந்தார்.[2]

மீனாட்சி நூற்பாலைத் தொழிலாளர்க்கெனப் பரவையில் கட்டப்பெற்ற வீடுகளை முதலமைச்சர் திரு. காமராசர் திறந்து வைத்தார். அவரை வரவேற்றுப் பேசுகையில் தியாகராசர் கூறினார்:

''இலங்கையில் தொழிலாளர் இயக்கத்தில் ஈடுபட்டிருந்த என் இளமைப் பருவத்தே தொழில் முதல்வர்கள் தொழிலாளர்கட்கு ஏற்புடைய நல்ல வீடுகள் கட்டித் தரவேண்டும் என்ற எண்ணம் என் உள்ளத்தில் வேரூன்றியது. பின்னர், நூற்பாலைத் தொழிலை மேற்கொண்டது

---

1. "Along with a living wage. Welfare Schemes such as good homes and educational facilities ensuring happiness and contentment amongst employees, must form part and parcel of large organisation" Speech from the Chair by Karumuttu (8th Febry 1958)

2. போர்ப் பிற்கால நெசவாலைத் தொழில்பற்றி அவர் எழுதிய கையேட்டில் உள்ளவை இவை "They (Mills) must have an ideal colony of their own under an obligation to provide quarters for workers, school and hospital"

- Postwar Textile Industry-1946

முதல் அக்குறிக்கோளை நிறைவேற்ற முயன்றும், பல இன்னல்களால் அது கைகூடவில்லை. இறுதியில் அந்நாள் புதுக்கோட்டை அரசின் உதவியால் மணப்பாரையில் ஏற்ற இடங்கிடைக்கவே அக்கனவு ஓரள்வு நனவாகியது. பின்னர் பசுமலையில் அரிதின் முயன்று, இடம்பெற்று, நூற்றறுபது வீடுகள் கட்டப்பெற்றன. இவை ''தொழிலாளர் சிறு மாளிகைகள்'' என்று கண்டோர் பலராலும் பாராட்டப் பெறுகின்றன'' என்று அவற்றை மாளிகைகள் என்றே பெருமையுடன் அழைத்தார். (பரவை மீனாட்சி குடியிருப்புத் திறப்பு விழா வரவேற்புரை-1958) இந்தியாவிலேயே மிகச் சிறந்தனவாக நல்ல இயற்கைச் சூழலில் தோட்டங்களின் நடுவே, சிறுசிறு மாளிகைபோலக் குடிநீர், காற்றோட்டம், சாலைகள், பூங்காக்கள், பிள்ளையார் கோவில்கள், படிப் பகங்கள் விளையாட்டிடங்கள், கூட்டுறவுக் கடைகள், பள்ளிகள், மருத்துவ மனைகள் சேர்ந்தமைய இக்குடியிருப் புக்கள் திட்டமிட்டு அமைக்கப்பட்டன. பரவை, பசுமலைக் குடியிருப்புக்களைப் பார்த்துப் பிற ஆலைகளும் அவ்வாறே திட்டமிடத் தொடங்கின. இத் தொழிலாளர் குடியிருப்புக் களின் இன்னுமொரு சிறப்பம்சம், இலக்கியச் சொற்பொழி வுக்கான ஏற்பாடுகள் ஆகும். அரசியல் ஆவேசப் பொழிவுகளையும் உரிமைப் போராட்டக் கோரிக்கை களையுமே கேட்டுக்கேட்டு அடைத்துப் போயிருந்த காது கள், பெரியபுராணம், திருவிளையாடற்புராணம், சிலப் பதிகாரம், கம்பராமாயணம் பற்றிய தொடர் சொற்பொழிவு களையும், வகுப்புகளையும் அறிஞர் பெருமக்களிடம் கேட்டன. பின்னாளில் அரசாங்கத்தால் ஏற்பாடு செய்து நடத்தப்பட்ட தொழிலாளர் கல்விக்கே (Workers Education) இது வழிகாட்டியாக அமைந்தது.

**உரிமைப் பிரகடனம் :**

நூல் ஆலைத் தொழில் விசாரணை நீதிபதி முன் தியாகராசர் 1946இல் கொடுத்த குறிப்பிலிருந்து 1939 முதலே தொழிலாளர் நலனில் அவருக்கிருந்த ஈடுபாடு புலப்படும்.

''1936 ஜனவரி 4இல் பிரதம மந்திரிக்கும், 1939 பிப்ரவரி 10இல் தொழிலாளர் மேற்பார்வை அதிகாரிக்கும் எழுதிய தொழிலாளர் சங்கங்கள் பற்றி விரிவாக எழுதியிருக்கிறேன்.

''தொழிலாளர்களின் நிலைமை பரிதாபகரமானதும் இரங்கத்தக்கதாகவும் இருக்கிறதென்பதையும், இதுகாறும் முதலாளிகளும், அரசினரும் அவர்களைப் பண்டங்களைப் போல் (Chattal or Commodity) மதித்து நடத்தியிருக்கிறார்களென்பதையும் மறுக்கமுடியாது. ஆகையால் முதலாளிகள் தங்கள் மனப்பான்மையை விரைவில் முற்றும் மாற்றிக்கொள்ள வேண்டியது மிக அவசியம். தொழிலுக்கும் அரசுக்கும் ஏற்படக்கூடிய அபாயத்தைத் தடுக்கும் பொருட்டாவது அவர்கள் மனப்பான்மை மாறவேண்டும். இல்லையானால் பழிக்கஞ்சாத கிளர்ச்சிக்காரர்கள் தற்காலமிருக்கும் தொழிலாளரின் தாழ்ந்த நிலையைப் பயன்படுத்திக் கொண்டு அவர்களை முற்றும் தங்கள் வசப்படுத்தி எல்லோரையும் கீழான நிலைக்கு கொண்டுவர, வெறுக்கத்தக்க புரட்சி செய்வார்கள்.

தொழிலாளர்களின் குறையைப் போக்குவதற்குப் பரிகாரம் சொந்தச் சொத்துக்களை ஒழித்தலும் எல்லாத் தொழில்களையும் தேசீயமயமாக்குதலுமேயாகும் என பொது உடைமைக்காரர் கூறும் உபாயம் நோயினுங் கொடிய மருந்தையொக்கும். இதைக் கையாண்டால் சிறந்த

வினையாளர் திறமையாலும் உழைப்பாலும் உண்டாக்கும் செல்வம் வரண்டு, நாடெங்கும் துன்பம் பெருகும். தொழில்களை அரசாங்க உடைமையாக்குவதால், தொழிலாளி - முதலாளி என்ற தீமை ஒருசிறிதும் ஒழிந்து விடாது. அரசே முதலாளியாகிவிடும், அரசால் நடத்தப் படும் புகைவண்டி, பேருந்து முதலிய தொழில்களில் தொழிலாளர் வேலை நிறுத்தம், ஆதாயமின்மை தொந்தரவுகளும் தீர்ந்தபாடில்லை.

ஆகையினால் இப்பொழுதுள்ள தீமைகளைப் போக்கி முதலாளி தொழிலாளிகள் அவரவர் உரிமைகளையும் கடமைகளையும் வரையறுத்து நன்கறிந்து அனுதாபத்தோடு ஒத்துழைக்க இருவரையும் அன்பால் பிணைத்து ஒற்றுமைப் படுத்துவதே இதற்குப் பரிகாரமாகும். இதில் அரசாங்கம் தமது கடமையைச் சரிவரச் செலுத்த வேண்டும்.[1]

## தொழிற்சங்க வாதம் :

தொழிற் சங்கங்கள் ஏற்படுத்திக் கொள்ளுவதற்குத் தொழிலாளர்க்குரிய உரிமையையோ அவற்றின் தேவையையோ தியாகராசர் மறுக்கவில்லை. அவர் சொல்கிறார்:-

''சங்கத்தின் நோக்கம் முதலாளிகட்கும் தொழிலாளிகட்குமிடையேயும் தொழிலாளிகள் தங்களுக்குள்ளும் நல்லுறவை வளர்க்கத்தக்கதாகவும் பொதுவாக தொழிலாளர்களின் நிலைமையை உயர்த்தக் கூடியதாகவும் இருக்க வேண்டும். அன்றி வகுப்பு விரோதங்களை உண்டு பண்ணவும் வேலை நிறுத்தம் செய்யத் தூண்டவும், தான்

---

1. Memorandum - submitted to the Court of Enquiry about Textile Industry.

தோன்றித் தலைவர்களின் சுயநலம் பேணத்தக்கதாகவும் இருக்கக் கூடாது. இப்போதைய சங்கங்கள் தொழிலாளர்க்கும் தொழிலுக்கும் இடையூறாகவும், நாட்டின் நலம் அமைதிகளுக்கு அபாயமாகவும் தொழிலாளர் தலைவர்களுக்கு அதிக்கிரமித்த சுயேச்சையைத் தருவதாகவும் அமைந்திருக்கின்றன. சங்கங்கள் பலவாகி அவைகள் தங்களுக்குள்ளே போர் தொடர்ந்து கொள்ளுகின்றன. சில சங்கங்கள் பண வருவாயை முன்னிட்டு நடத்தப் படுகின்றன என்பதற்கும் மற்றும் சில இரகசியமாக அபாயமான கொள்கைகளை மேற்கொண்டு நடத்தப் படுகின்றன வென்பதற்கும் போதிய சான்றுகளிருக்கின்றன. தொழிலாளர்கள் இத்தகைய சங்கங்களின் சூழ்ச்சிக்குட்பட்டு வேலை நிறுத்தம் செய்து தங்கட்கும் தொழிலுக்கும் பொது நலனுக்கும் கேட்டைத் தேடிக்கொள்ளுகின்றனர். தொழிலாளர்கட்கும் தொழிலுக்கும் அரசுக்கும் அபாயமான சங்கங்களை ஒழிக்க வேண்டும். முதலாளிகட்கும் தொழிலாளர்க்குமிடையே சமரசத்தை உண்டுபண்ணத் தொழில் ஆலோசனைச் சங்கங்கள் நிறுவவேண்டும்.

தொழிலாளரின் நலஉரிமைச் சாசனம் போல இருந்த இக்கொள்கை இதழை அச்சிட்டு எல்லோர்க்கும் தியாகராசர் வழங்கினார்.

## முகத்திரை நீக்கம் :

நாட்டில், தொழிற் சங்கங்களில் சில சக்திகள் ஆதிக்கம் பெற்றமையால் நாடெங்கும் வேலை நிறுத்தங்களும் தொழிற் தகராறுகளும் ஏற்பட்டபோது, அவர்களின் முகத்திரையைக் கிழித்து, இனங்காட்டித்தர அவர் பின்னிட வில்லை.

"It is most painful that Government should think of enhancing the punishment of the employers instead of protecting them from the attack and violence of ungrateful labour misled by mischievous communism. Unless communism of this type is suppressed, the Industry will die and the country will soon become bankrupt" 1

போட்டித் தொழிற் சங்கங்களால் சராசரித் தொழிலாளி தவருன பாதையில் ஈர்க்கப்படுவதாகவும் அதனுல் அவனுக்கும் தொழிலுக்குமே தீங்குநேருவதாகவும் எச்சரித்தார்.

தொழிலக உடன்பாடு என்ற பெயரால் அரசாங்கம் விதித்த புதிய கட்டுத் திட்டங்களால் நாடெங்கும் கதவு அடைப்புக்களே பெருகின. தமிழ்நாட்டில் மட்டும் 35 ஆலைகளை மூடநேர்ந்துவிட்டது. இதற்கெல்லாம் அரசாங் கத்தின் தவறான அணுகுமுறையே காரணம் என்பதையும் சுட்டிக்காட்ட அவர் தயங்கவில்லை. 2

"The little freedom enjoyed by industrialists is now lost after the attainment of Independence."

முதலாளிகள், தொழிலாளர்களை எதிரிகள் போலக் கருதாமல் தொழில் முயற்சியில் தம்மோடு ஒத்துழைக்கும் உடனுழைப்பாளர்களாகக் கருதவேண்டும் எனத் தியாகராாசர் பலதடவை பேசியிருக்கிறார் :-

"Labour, when regarded with consideration and courtesy is bound to respond with a sense of responsi bility. So it is incumbent on the Management to

1. Industry killed - by Karumuthu Thiagaraja. 1947
2. Industrial Truce - by Karumuthu - 1948

treat labour as brethren, as partners in a united endeavour, as members of a joint family, with respect for their freedom and dignity." 1

தர்மகர்த்தாத் தத்துவம்: காந்தியடிகள் வற்புறுத்திய தர்ம கர்த்தாத் தத்துவத்தை ஓரளவு மறவாது வலியுறுத்தினார்.

"Thus industry itself, though not a trusteeship but resembling trusteeship wields power and controls capital in the common interest of all - the Investors, Managers, staff, workers and the country."

அப்போது இலாபம் ஈட்டுவதே முதன்மை நோக்காய் அமையாது; நாட்டுத் தொண்டின், பிறரன்புத் தொண்டின் ஒரு பகுதியாக அமைவதே தொழில்களின் நோக்காக மாறும் என நம்பிக்கையுடன் தெரிவித்தார்.

அரசியல் கட்சிகள் தொழிற் சங்கங்களைத் தமது ஆதிக்கப்பிடிக்குள் கொண்டுவருதற்குப் போட்டாப் போட்டி களில் இறங்கியமையால் உற்பத்தி குறைந்து பொருளாதார நலிவேற்பட்டதையும் அவர் சுட்டிக்காட்டத் தவறவில்லை:-

"Added to this intrusion, in season and out, by political parties that exploit labour to serve their ends has further created chaos disturbing the peaceful working of mills and loss of precious man hours." 2

---

1. Address by Karumuthu in the conference on 'Management Organisation SITRA - Coimbatore-1959
2. 16th Annual conference of the All India Textile Association - Bangalore -1959

**தியாக நோக்கம் :**

தொழில் ஒன்று செழிக்கவேண்டுமானால், அதனோடு தொடர்புடைய ஒவ்வொரு சாராரும் தம்மால் இயன்றளவு அதன் வளர்ச்சி கருதிச் சில தியாகங்களைச் செய்ய முன் வரவேண்டும் என The Textile Digest எனும் இதழுக்கு அளித்த பேட்டியில் தெரிவித்தார் :-

"The prime condition is that the Government, management and labour all must agree to sacrifice, for once a mill closes, none of them will benefit and all stand to loss." [1]

இவ்வாறு ஒரு முதலாளியின் நோக்கம், தொழிலாளியின் உரிமை, அரசாங்கத்தின் நலம் ஆகிய மூன்று நிலைகளிலு மிருந்த தொழிற் பிரச்சினையை அணுகுவதில் அவர் வல்லு நராகத் திகழ்ந்தார்.

அவருடைய ஆலை நிர்வாகக் கட்டுக்கோப்பில் பல துறைகள் இருக்கும்; பஞ்சுத் துறை, நூல் துறை, பொறியியல் துறை, கருவி நுட்பத் துறை, சட்டத் துறை என்பனவற்றோடு தொழிலாளர் நலத்துறையும் சிறப்பிடம் பெற்றிருக்கும். ஒரு தகராறு வந்தபின் நிலைமையைச் சமாளிப்பதைவிட அது வராமலே தவிர்த்துவிட எப்போதும் தன்னால் இயன்றவரை முயல்வார். தனக்கு நியாயமெனத் தோன்றினால் உடனே இசைவார். இல்லையென்றால் கடைசிவரை இணங்க மாட்டார். இதற்குப் பல சம்பவங்களைச் சுட்டிக் காட்டலாம். ஒரு சான்று :

**அஞ்சாத்திறம் :**

கேரள ஆலையில் 4% குறைந்தபட்ச போனஸ் தர வேண்டும் என்ற அரசாணையைத் தொடர்ந்து வேலை

1. An Interview by S. P. Nanal 1967

நிறுத்தம் ஏற்பட்டது. அதுவரை (Sick Mills) நலிந்த ஆலையாயிருந்து அப்பொழுது தான் ஓடத் தொடங்கிய ஆலைகள் இதை ஏற்பது சிரமாயிருந்தது. அரசாணைப்படி உடனே போனஸ் வேண்டுமெனத் தொழிலாளர்கள், தியாக ராசரை 'கெரோ' செய்தனர். தொழிலாளர்கள் அவரைச் சுற்றிலும் அமர்ந்தபடி செய்த கெரோ 1 1/2 நாட்கள் நீடித்தது. இந்த 36 மணி நேரமும் தியாகராசர் இருந்த இடத்தை விட்டு அசையாமல், தண்ணீர் கூடக் குடியாமல் மலைபோல இருந்தார். இந்த இடர்ப்பாட்டை அறிந்து, சரி எனச் சொல்லிவிடுங்களேன் எனக் குடும்பத்தினர் வந்து கண்கலங்க வற்புறுத்திக் கெஞ்சினர். அதற்கும் தியாகராச மலை அசையவில்லை. விபரீதமான முட்டுக் கட்டையை அறிந்து, அமைச்சராயிருந்த மத்தாய் மஞ்சூரான் ஓடிவந்து நிலைமையை ஒருவாறு சமாளித்தார் !

''தொழிலாளரிடையே கொந்தளிப்பான நிலை ஏற்பட்டிருந்தாலும் அப்பதட்ட நிலையிலும் சற்றும் மனக்கலக்கமோ அல்லது நிதானத்தையோ இழந்துவிடாமல் அச்சமின்றி ஆலைக்குள் அவர்கள் இருக்குமிடத்திற்கே நேரடியாகச் சென்றுவிடுவார்கள். அவ்விதச் சந்தர்ப்பத்திலும் இவரைக் கண்டவுடனே யாவரும் அடங்கி, ஒடுங்கி, ஒதுங்கி, பயபக்தியுடன் விலகிநின்று விடுவார்கள். தவிரவும் அவரிடம் கடுமையாகப் பேசவும் அஞ்சுவார்கள் என்றால் அப்பேர்ப்பட்ட பெற்றோர் பாசத்தை அவர்களிடையே வளர்த்துவிட்டிருந்தார் 1

பெரிய தொழில் அதிபர்களுள் தியாகராசச் செட்டியார் ஒருவர்தான் தன் தொழிற்சாலைக்குள்ளேயே வீடு கட்டிக் கொண்டு வாழ்நாள் முழுவதும் வாழ்ந்தார். அவருடைய தொழில்நுட்ப அறிவின் காரணமாகத் தொழிலாளர் அனைவரும் அவரிடம் பெருமதிப்பும் மரியாதையும் கொண்டிருந்தார்கள் என்பார் சோமலெ.

1. எனது சிந்தனையில் ஸ்ரீகருமுத்து - சி.வெ.ரெங்காச்சாரி

ஒருமுறை வேலை நிறுத்தத்தின்போது கட்டுமீறிய நிலை ஏற்பட்டுப் போலிசார் துப்பாக்கிப் பிரயோகம் செய்ய முற்பட்டபோது, என் வீட்டின் முன் தொழிலாளர் மீது துப்பாக்கிப் பிரயோகம் செய்ய ஒருபோதும் அனுமதிக்க மாட்டேன் என முழங்கினார். ஒருமுறை நாயுடுகட்சியையும் தேவர்கட்சியையும் சேர்ந்த தொழிலாளரிடையே பிணக்கு ஏற்பட்டுப் பலாத்காரம் எல்லைமீறியபோது அவருடைய டிரைவர் செல்லம் குத்தப்பட்டார். செய்தி அறிந்தவுடன் தியாகராசர் அஞ்சாமல் செல்லம் குத்தப் பட்ட இடத்திற்குச் சென்று, உடலைக் கொணர்ந்து மருத்துவ மனையில் சேர்த்து அங்கு ஆவி பிரிந்தவுடன் தக்க மரியாதை செய்து மிகப் பிரமாதமாக அச்சவ அடக்கத்தை நடத்தினார்.

### கனிவான நெஞ்சம் :

தம்மிடம் விசுவாசமாக வேலை பார்த்தவர்களுக்குத் தாராளமாகச் செய்து வந்தார். வாழ்க்கை உயர்வு கருதி அவர்கள் வேற்றிடம் போக முற்பட்ட போதெல்லாம் வாழ்த்தி வழியனுப்பினார்.

"நான் அவருடைய ஆலையில் சேர்ந்து 5 வருடங் களுக்குள், 1949ஆம் வருடம் மத்திய சர்க்கார் இந்திய நிர்வாக வேலைக்கு (ஐ. ஏ. எஸ்.) மனுப்போட்டு அதிகாரிகளைத் தேர்ந்தெடுக்க விசாரணைக்குழு என்னை வருமாறு அழைத்தபோது எனது மேலதிகாரிகளுக்கு என்னை அனுப்பவிருப்பமில்லா விட்டாலும் சிறந்த வேலை வாய்ப்புக் கிடைக்கும் பொழுது நாம் ஏன் தடையாக இருக்க வேண்டுமென்று அன்புடன் அனுமதி அளித்தார்" என நினைவு கூர்கிறார் திரு. டி. ஆர். நரசிம்மாச்சாரி.

''அவர் மிகவும் தாராள மனப்பான்மை கொண்டவர். பிறர் மனம் நோக நடந்து கொள்ளமாட்டார். யாரை யேனும் வேலையிலிருந்து விலக்க நேரிட்டால் அவர் எதிர்பார்க்கும் தொகையைவிட அதிகமாகவே கொடுத்து மனநிறைவோடு வெளியே போகுமாறு செய்வார். வேலையைவிட்டுச் சென்ற அநேகர் அத்தருணங்களில் என்னிடம் வந்து அவரை மனமார வாழ்த்தி விட்டுச் சென்றிருக்கிறார்கள்'' எனப் பெருமைப் படுகிறார், அவரிடம் நிர்வாக மேலாளராக இருந்த திரு எல். என். எஸ். சுந்தரராமன்.

## தோழமை உள்ளம் :

தன்னிடம் தொண்டராய், தோழராய், துணைவராயிருந்த திரு. இராமச்சாரி விலக நேர்ந்த போது தியாகராசர் பெரிதும் சங்கடப்பட்டார். அவர் தனியாக நிறுவனம் கண்டு உயர்வார் என்ற பெருமிதத்துடன், தன் பிள்ளைகள் பொறுப்பேற்க வந்து விட்டார்கள் என்ற தன்னம்பிக்கை யுடன் அவருக்குப் பிரியா விடை கொடுத்தார். விலகிய மறுநாள், திரு. ராமாச்சாரி திரும்ப வந்து, தியாகராசர் பல்லாண்டுகளாகத் தொழில் முறையிலும் நட்பு முறை யிலும் எழுதிய பல முக்கியமான கடிதங்களைப் பத்திரமாகக் கொணர்ந்து அவரிடமே நன்றியுணர்வுடன் திருப்பித் தந்து சென்றார். திரு இராமாச்சாரி நிறுவிய ஆலையைத் தானே மகிழ்வுடன் சென்று தியாகராசர் திறந்து வைத்து வாழ்த்தினார்.

இவ்வாறு ஆலையிலும் சரி, கல்வி நிறுவனங்களிலும் சரி தியாகராசர் எல்லோர் மனத்திலும் 'பெரியவராகவே' விளங்கினார். தொழிலாளர்கள் பிள்ளைகட்குத் தம் கல்வி நிறுவனங்களில் முன்னுரிமையுடன் இடம் அளித்துப்படிப்பு தவிகளும் நல்கினார். தொழிலாளர் உலகம் சந்தித்த

முதலாளிகளுள் அவர் தனி ஒருவராக எப்போதும் நியாயத்திற்கு உட்படுகிறவராக, அதேசமயம் நிர்ப்பந்தத்திற்குப் பணியாதவராகத் தோன்றினார். முதலாளி தொழிலாளி உறவுகள், சட்டமெனும் வட்டத்திற்குள் சம்பிரதாய ரீதியில் நடத்தப்படும் ஒன்றாக இப்போதெல்லாம் ஏற்பட்டுவிட்டன. என்றாலும் தொழிலாளர்களின் உழைப்பையும் உரிமையையும் மதித்து மனிதாபிமானத்துடன் சிக்கல்களை அணுகித் தீர்வு காணக்கூடிய தியாகராசர்கள் அபூர்வமாக அமைந்தே வழிகாட்டுவார்கள்.



" The Story of Art is the Story of Man"
—French Novelist - Andreu Maulrex

# கலையும் கவினும்

# 12

## தியாகராச மரபு:

வானமெங்கும் பரவிநிற்கும் நீலவண்ணம்போல், தியாகராசரின் மனமெங்கும், செயலெங்கும் பரவி நின்ற மற்றுமொரு பொதுத் தன்மை அவருக்கு அமைந்திருந்த கலை உணர்வு. அவர் சமைத்த கட்டிடம் ஒவ்வொன்றிலும் ஊடுருவி நின்ற பாரம்பரியக் கட்டுக்கோப்பு தனக்கேயுரிய தனித்தன்மையோடு விளங்கியது. ஆலைகள், கல்விச் சாலைகள், மாளிகைகள் மற்றக் கட்டிடங்கள் ஆகிய அனைத்திலும் இவை தியாகராசரின் நிறுவனத்தைச் சேர்ந்தவை எனும் 'தனி முத்திரை' பளிச்சிடும். தமிழகத்தில் பல்லவ, சோழ, நாயக்கர் மரபுகளுக்குப் பின்னர், தனி நபர் ஒருவர் நாடெங்கும் தானமைத்த கட்டுமானங்களில் ஒரு தனி மரபைப் பேணியதாகச் சான்றேதும் இல்லை. இந்த வகையிலும் 'தியாகராச மரபு' எனும் ஒன்றை ஏற்படுத்தி கலைத்தந்தை எனப் பெயர் பெற்றார். கட்டிடம் கட்டத் தேர்ந்த மனையிடம், கட்டிடக்கோப்பு, நுழைவாயில், வண்ணக்கலவை, சுற்றுச் சூழல் ஆகிய அனைத்திலும் ஒருவகைக் கலைத்திறம் இழையோடியிருக்கும்.

எழிலார்ந்த கலைகள் எல்லாவற்றிலும் சிறந்தது கட்டிடக்கலை. அழகுக்கலைகள் பலவற்றின் கூட்டியமாக உருவாக்கப்பெறும் கட்டிடக்கலை நாட்டின் நாகரிகப்

பெருமையை விளக்குவது. கல்கண்ட இடமெல்லாம் கலை பேசவைத்த பல்லவ, சோழ மன்னர்களால் நம்நாட்டில் நெடுங்காலம் பராமரிக்கப்பட்டது. இது 15ஆம் நூற்றாண்டின்பின்னர் பிறர் படையெடுப்புக்களால் நிலைகுலைந்து போய்விட்டது; பின்னர் நாயக்க மன்னர்களின் ஆட்சிக் காலத்தே மறு ஆக்கம் பெற்றது.

'தென்னிந்தியாவின் ஏதன்சு நகரமாகப்' போற்றப் பெற்ற மதுரையில் மீனாட்சி ஆலயம் ஒரு கலைக் கருவூலம் ஆகத் திகழ்கிறது; தமிழர்தம் சிற்பக்கலைச் சிறப்பையும் கட்டடக் கலைப் பெருமையையும் காலமெல்லாம் பறைசாற்றி வருகிறது; காலதேச வரம்புகளைக் கடந்து, மிகப் புனிதமாக, என்றென்றும் பிரகாசிக்கக் கூடியதாக நமக்குப் பெருமை சேர்த்துத் தருகிறது.

இம்மதுரையில் திருமலை மன்னர் கலையுள்ளம் கொண்டவராய் அரசோச்சி இன்றளவும் தனது கலைப்பணிகளால் வாழ்கிறார். புதுமண்டபமும், மகாலும், தெப்பக்குளமும், சிலைகளும் அவர் புகழை நிலையாக்கி வைத்துள்ளன. திருமலை மன்னருக்குப்பின் மதுரையின் அழகுக்கு அழகு ஊட்டியவர் தியாகராாசரே எனப் பெருமையுடன் வரலாறு சொல்லும். மதுரைக்குள் எந்தப்புறமிருந்து நுழைந்தாலும் உட்புகும் சாலை வாயிலேயே தியாகராாசரின் புகழ்பாடும் கட்டிடங்கள் வரவேற்கும்.

## விறகா ? வேய்ங்குழலா ? :

நாட்டிற்குப் பொருள் செல்வங்களைப் போலவே கலைச் செல்வமும் வேண்டும். உடல் வளர்ச்சிக்கு உணவுபோல, மனவளர்ச்சிக்குக் கலை தேவை. பழைய செல்வங்களைப் பேணுவதுபோலப் புதிய கலைப் படைப்புக்களையும் உருவாக்க வேண்டும். உள்ளத்து உணர்ச்சியையும், வாழ்க்கையையும்

பண்பாட்டையும் புலப்படுத்தும் அளவுகோல்கள் நாம் உருவாக்கும் கலைத் துறைகளேயாகும். அவைகளே நாம் வாழும் சிறப்பையும் அதன் வனப்பையும் பிறருக்கு எடுத்துச் சொல்லக் கூடியவை. அறிவுக்கு விருந்தாகக் கம்பன் காப்பியமும், உணர்வுக்கு விருந்தாகச் சேக்கிழார் நூலும் இருப்பது போல, நம் கண்களுக்கு விருந்தாகக் கலைப் பொருள்களும் இருக்க வேண்டும். ஒரு மூங்கில் குச்சியைக் கையில் எடுத்ததும், அது விறகுக்காகுமா என்று பார்க்காமல், புல்லாங்குழலாகப் பயன்படுமா எனப் பார்க்கும் கலைப் பார்வை ஏற்படவேண்டும். 'வேறுபடு பொருள்கள் எல்லாம் புகுந்து பார்க்கின் விளங்கு பரம்பொருளே உன் விளையாட்டல்லால்' என்றபடி, காணும் பொருள்களில் எல்லாம் ஒருவகை ஒருமைப் பாடிருப்பதையும் அன்னியோன்னிய உறவு பொதிந்திருப் பதையும் கண்டு தெளியவேண்டும். பானை வனையும் குயவனின் கையானது சக்கரத்தைச் சுழற்றும் போதே அவன் இதயத்தில் ஒரு கலையுணர்ச்சியும் வட்டமிடுவதுபோல, நாம் வாழ்வரங்கில் சுழலும் ஒவ்வொரு நிலையிலும் நம் மனத்தில் ஓரளவேனும் கலைப் பாங்கு அரும்பு கட்டவேண்டும். இத்தகைய கலைப் பாங்கு, இதயத்தோடு அறிவையும், உணர்ச்சியோடு கருத்தையும், புலன்களோடு ஆன்மாவையும் வளம்படுத்த உதவும் இவையெல்லாம் தியாகராசரின் கலைச் சிந்தனைகள்.

## தொலை நோக்கு :

தியாகராசர் கட்டிடம் கட்டுதற்குத் தேர்ந்தெடுக்கும் மனையிடச் சூழலிலேயே ஒரு கலையம்சம் செறிந்திருக்கும். வைகையாற்றின் கரையில் தியாகராசர் கல்லூரி, தெப்பக் குளத்துக்கு எதிரில் ஆசிரியக் கல்லூரி, திருப்பரங்குன்ற மலை அடுக்குகளில் பொறியியற் கல்லூரி, பொன்னமராவதிச் சாலை வளைவில் தெற்கூர்க் கலாசாலை, கொடைக்கானலில்

ஏரிக்கரை மாளிகை, குற்றால மலையுச்சியில் புலியருவிக் கோடை இல்லம், மேட்டு நிலங்களில் விரிவாக்க வசதியுடன் அமைந்த ஆலை வளாகங்கள், இயற்கைச் சூழலில் தொழிலாளர் சிறு மாளிகைகள், என்பனவெல்லாம் அவருடைய தொலைநோக்கிற்கும் கலைப் பார்வைக்கும் சான்றுகள். 1

கட்டிடங்களில் திராவிடக் கலைப்பண்பே அடித்தளமாய் இருக்கும். செட்டிநாட்டுச் சிறப்பும் கேரளக் கூரை ஒழுங்கும், சப்பானியமுறை யமைப்பும் மேலை நாட்டுப் பாணியும் ஆங்காங்கு பளிச்சிடும். பண்பாடு வழுவாத பல நாட்டுக் கூட்டமைப்பாயிலங்கும்.

''இவர் கட்டிய கட்டிடத்தின் ஒவ்வொரு பகுதியும் இவர் பெயர் கூறும். திருத்தமான அடிப்படை முதல், விளிம்பு வளைந்த மேற்கட்டி வரை, வாயிலில் இருபுறமும் சுவரை ஒட்டிய கருங்கல் தூண் முதல் அதன் மேல் படிந்து முன்புறமாக நீண்டு பெரியதோர் தேளின் கொடுக்கைப் போல் விளங்கும் கொடுங்கை வரை, தியாகராசக் கலைஞரின் தனி முத்திரை என்று தமிழகமெல்லாம் அறியும், வளமனைக் கட்டிடக் கலையை மட்டுமின்றிக் கோயில் கட்டிடக் கலையையும் தியாகராசர் நன்கு அறிந்திருந்தார். சிற்பங்களிலும் ஓவியங்களிலும் இவருக்கு மிக்க ஈடுபாடு உண்டு 2

## கலைத்திறம் :

அவரது கட்டிடங்களின் முகப்பு வாயில்கள் ஒரே மாதிரியாக அமைக்கப்பட்டிருக்கும். செதுக்கி இழைக்கப்பட்ட

---

1. "Art is the modern religion. Every master piece, tells of a human victory over the blind forces of destiny"
- Andre Manbex

2. டாக்டர் சுப. அண்ணாமலை - தினமலர் - அஞ்சலிக் கட்டுரை

வெள்ளைக் கல் தூண்கள் இருபுறமும் கம்பீரமாக நிற்க, அவற்றில் வலுவான இரும்பிக் கம்பிக் கதவுகள் இணைக் கப்பட்டிருக்கும், அவற்றில் பித்தளைத் தகட்டில் யானையின் உருவம் பதிக்கப்பட்டிருக்கும், சேர்மானக் கல்லில் வாழைத் தார் வடிவம், முந்திரிக்குலை, பன்னீர்ச் செம்பு, தாமரைப்பூ முதலியன செதுக்கப்பட்டிருக்கும், உள்வாயில் மர நிலை களின் மேலே மீனாட்சி திருக்கல்யாண அர்த்த சிற்ப உருவம் பொருந்தியிருக்கும். தூண்கள் சதுரவடிவில் விளங்கும். முகப்புத் தூண்கள் கருங்கல்லால் அமைந்த பித்தளைப் பூணோடு பளபளக்கும். கிராதிகளும் கைபிடிச் சுவர்களும் தேன்கூடுராட்டுப் போன்ற 6 பட்டைக் கண்கள்போல இலங்கும். செட்டிநாட்டுமரபை நினைவூட்டக் கூடிய சிறு திண்ணைகளும் பூக்கல்தளவரிசைகளும் இருக்கும். சன்னல்கள் அனைத்தும் சிறியனவாகக் கேரளப் பாணியில் பொருத்தப்பட்டிருக்கும். மாடிப்படிகள் பெரும்பாலும் சிறியனவாக இருக்கும். கட்டிட விதானம், ஓடுகள், தளவரிசை என்பன சப்பானிய கேரள முறையமைப்புப் போலத் தோன்றும், மேற்கொடுங்கையில் கோவில் சுற்றுப் பிரகார விளிம்புபோலப் பல்லவ மரபு புலப்படும். மேல் நிலைத் தண்ணீர்த் தொட்டிகள் அனைத்தும் தனியாக ஒற்றைத்தூணில் நிறுத்தப் பட்டிருக்கும். கட்டிடத்தைச் சுற்றிலும் போதுமான திறந்த வெளியில் புல் வளர்க்கப் பட்டிருக்கும், இப்பூங்காவில் ஆங்காங்கு திருஷ்டி பரிகாரம் போல, மேலைநாட்டு அழகுச் சிலைகள் ஈர்ப்புற நிற்கும், மஞ்சள், தந்த வெள்ளை, காவி மூன்றும் சேர்ந்த வண்ணக் கலவையே எல்லாக் கட்டிடங்களிலும் பூசப்பட்டிருக்கும். பூங்கொடி வளரத் தனித்தூண்கள் நாட்டப்பட்டிருக்கும் - இவையெல்லாம் தியாகராசர் எனும் மயன் சமைத்த மாளிகைகளின் இயல்புகள்.

## இரு வடிவங்கள்:

இந்தியக் கலைப்படைப்புகளில், ஆயிரமாயிரம் ஆண்டுகளாக அனைத்துச் சமய மரபினர்களாலும் சக்கரவர்த்திகளாலும் போற்றிப் பின்பற்றப்பட்ட கலையம்ச வடிவங்கள் இரண்டே. இரண்டு என்பார் புகழார்ந்த ஆனந்த கே. குமாரசாமி.[1] அவை யானையும் தாமரையும். இவை இரண்டும் இடம் பெறாத சிற்ப சித்திர அமைப்புக்களைக் காணவேமுடியாது. இந்த மரபு - தியாகராசரின் கலைப் படைப்புக்களிலும் இடம் பெற்றுவிட்டது. வேதங்களில் படைப்புக்கடவுளின் நாபியிலிருந்து தோன்றும் கமலத்தில் பிரம பிரஜாபதி வீற்றிருப்பார். புத்தசமய மரபுகளில் தாமரை வடிவம் - உருவாக்கத்தையும், சமண மரபில் ஞானச் செல்வத்தையும் சுட்டிக்காட்டும். யானை மெய் நலனையும் பெருமிதத்தையும் இலக்கிய மரபுகளில் புலப்படுத்தி நிற்கும்.

## வந்தால் செலவு :

பெரிய கட்டிடமாயினும் சிறிய கட்டிடமாயினும் அதற்கு வரைப்படம் போடுவதிலிருந்து ஒவ்வொரு நிலையாகக் கட்டிமுடித்தல்வரை 'பெரியவரே.' நேரிற்சென்று மேற்பார்வையிடுவார். பொறியியலாளர்கள் எல்லாம் போனபின் மாலை நேரத்தில் மேஸ்திரிகளை உடன்வைத்துக் கொண்டு, ஒவ்வொன்றாகப் பார்ப்பார். ஏதேனும் குறை தெரிந்தால் போதும், அப்படியே இடித்துவிட்டு மறுபடியும் கட்டச்செய்வார். ''பெரிய செட்டியார் கட்டிடத்தை மேற்பார்வையிட வந்தாலே செலவு அதிகம் தான்'' என்று இன்றும் சொல்கிறார் ஓர் அன்பர்.

1. Ananda K. Coomarasamy - ' Dance of Siva"

## நூற்றாண்டு நிலைபேறு:

'' திருப்பரங்குன்றம் தியாகராசர் பொறியியற் கல்லூரிக் கட்டிடப் பிரிவு மேலாளனாகப் பணியாற்றிக் கொண்டிருந்த பொழுது, கற்கட்டிடத்தை அடிக்கடி பார்வையிட வருவார்கள். ஓரிடத்தில் ஒரு சிறு மாற்றம் செய்யவிரும்பினார்கள். அம் மாற்றம் செய்வதாயிருந்தால், ஏற்கனவே கட்டிமுடித்த சுமார் 3, 4 அடி கட்டிடத்தைப் பிரித்து விட்டு மீண்டும் கட்ட வேண்டும். அதற்கு ரூ. 5000/-க்கு மேல் செலவாகும். செலவைச் சுட்டிக் காட்டினேன். உடனே '' எத்தனையோ நூறு ஆண்டுகளுக்கு இருக்கப் போகிற கட்டிடம். இதில் ரூபாய் 5000/- அதிகச் செலவைப் பற்றி யோசிக்கலாமா? உடனே நாளையே பிரித்து வேலையைப் பார்க்கச் சொல் '' என்று கட்டளையிட்டார்கள். தனக்குத் திருப்தியில்லை என்றால், செலவைப் பற்றிச் சிறிதும் யோசியாமல், திருப்தி ஏற்படும் வரை மாற்றங்கள் செய்யத் தயங்கமாட்டார்கள். அலுவலங்களில் மேசை, நாற்காலிகள் கூட ஒரே ஒழுங்காகப் போடப்பட்டிருக்க வேண்டும். இங்கொன்றும் அங்கொன்று மாகத் தாறுமாறாகப் போடப்பட்டிருந்தால் அவர்களுக்குப் பிடிக்காது. கற்கட்டிடங்களும் கற்களும் நூல் பிடித்தாற் போல ஒரே சீராக இருக்கவேண்டும். 1/4 அங்குலம் வித்தியாசம் இருந்தால் கூட அவர்களுடைய கண்கள் காட்டிக் கொடுத்துவிடும். 'ஏனப்பா' அதோ தெரிகிற அந்தக்கல் 1/4 அங்குலம் விலகியிருப்பதாகத் தெரிகிறதே? என்பார்கள். டேப் வைத்து அளந்து பார்த்தால், சரியாகக் காலங்குலம் வித்தியாசம் தென்படும்''. 1

''அது கல்லூரியானாலும் சரி, நூற்பு ஆலையானாலும் சரி, கட்டிட வல்லுநர்களால் தயாரிக்கப்பட்ட வரைபடத்தை

1. திரு. க. சண்முககந்தரம் - ' நினைவு அலைகள் - கட்டுரை

பார்த்து தன் மனதிற்குச் சரியென்றால் கொஞ்சம் மாதிரிக் காகக் கட்ட அனுமதி கொடுப்பார். ஆனால் அப்படிக் கட்டப்பட்ட கட்டிடம் அவர் வருகைக்காகப் பலநாட்கள் காத்திருக்க வேண்டியிருக்கும். அப்படி அவர் வந்து பார்ப்பாரேயானால், அதில் தமிழ்க்கலை மிளிரவேண்டும். பூக்களின் அழகு பொங்கவேண்டும். சிலைகளின் அழகு சிறக்க வேண்டும் எனப் பெரிதும் எண்ணுவார். அப்படி இல்லையென்றால் அது எவ்வளவு செலவு செய்து கட்டப்பட்ட கட்டிடமாயினும் சரி, அதை இடித்து விட்டு, அந்த இடத்தில் மறுபடியும் புதுக்கலையுடன் கட்டிடம் காட்சியளிக்கும்.[1]

## மூன்று நிலைகள் :

அவரது நிருவனப் பொறியியலாளர் சொன்னார் :- ''பெரியவரின் கட்டிடங்களுக்குரிய மூன்று நிலைகள் வருமாறு : Plan - Permission - Perfection. மீனாட்சி ஆலை மாளிகை, ஆ. தெற்கூர் பெரியவீடு, குற்றாலம் கோடை இல்லம், சென்னை வீடு ஆகியவற்றில் எல்லாம் இந்த மூன்று கூறுகளும் விளங்கக் காணலாம்.''

மீனாட்சி ஆலைக்குள் உள்ள மாளிகை இந்திரன் அமராவதியில் அமைத்த சுதர்மை போன்றது எனலாம். அதைச் சுற்றியுள்ள பூங்காவும் நீர் ஊற்றும் ஆலமர வளாகமும் அருகம்புல் பரப்பும் சிலை வனப்பும் தல அமைப்பும் அதனைப் பழமையும் புதுமையும் இணைந்த கலைச் செல்வமாகவே காட்டுகின்றன, தெற்கூரில் பரம் பரைப் புராதன வீட்டின் எதிரில் அமைந்துள்ள பெரிய வீடு, அளவில் பிற செட்டிநாட்டு வீடுகளை நோக்கச் சிறிதே ஆயினும், தியாகராச மரபால் தனியிடம் பெற்றுத் திகழ்வது.

---

1. பல்லை கரிகாலன் - கட்டுரை

## வாங்கிய கதைகள் :

கொடைக்கானல் மாளிகைக்குச் சுவையான பின்னணி உண்டு பஞ்சாப் மாநிலத்தில் நபா எனும் சுதேசித் தனியரசு இருந்தது. இந்த மன்னர், நம் சின்னமருதுபோலத் தேசீய உணர்வுள்ளவராயிருந்ததால், வெள்ளையர்களால் '' நாடு கடத்தப்பட்டு '' கொடைக்கானல் மலையில் ஆயுள் தண்டனைக் கைதிபோல வைக்கப்பட்டிருந்தார், 1930இல் அவர் காலமானபின், இதனை அரசு ஏலம் போட்டபோது தியாகராசர் அதனைத் துணிந்து வாங்கிக் கோடை இல்லமாக்கினார். அன்பர்களும் நண்பர்களும் வந்து தங்கிப் போக வசதி செய்தார். ஏரிக்கரையில் தனக்கென ஒரு தனிப்படகு வீட்டைக் கட்டினார். அதுபோலக் குற்றாலம் மீனாட்சி மாளிகைக்கும் பசுமையான வரலாறு உண்டு. இராமநாதபுரம் சேதுபதிக்குச் சொந்தமான மாளிகையை வாங்கிப் புதுப்பித்தார். அவர் இயற்கைக் கலைஞர் என்பதைக் குற்றால மாளிகைப் பின்னணியே எடுத்துக் காட்டும், 1950இல் இங்கு புலியருவி ( Tiger Falls ) எனும் இடத்தை உருவாக்கிச் சீராகக் கட்டி மக்கள் வசதியாக நீராடி மகிழ ஏற்பாடு செய்தார். நீராடிய மக்கள் வழிபட்டு வணங்க, அந்த அருவிக்கரையில் எழுந்தருளியிருந்த ஐயனாருக்குப் புதிய ஆலயம் கட்டினார். (அதுபோல அழகப்பா நகரில் பகவதி கோயிலுக்குத் திருப்பணி செய்து புதுப்பித்தார்.) புலி அருவிக்கு அருகே மலைமீது சிலப்பதி காரம் காட்சிகளை ஓவியமாக அமைக்கத் திட்டமிட்டிருந்தார்.

## "எனக்கு விண்ணகம்"

ஏறத்தாழப் பன்னிரண்டு ஆண்டுகள் குற்றாலக் கட்டிடப் புனரமைப்பு வேலைகள் நடந்தன. ''இங்கே நாம் செல விட்டிருக்கும் ரூபாய்க்கு ஒரு பெரிய அலுவலர் குடியிருப்பையே ( Staff Quarters ) கட்டியிருக்கலாம்'' என அவர் அலுவலக

மேலாளர் திரு. சி. எஸ். ஆர். தெரிவித்தபோது ''நீயும் நானும் வானுலகைக் கண்ட தில்லை. எனக்குக் குற்றாலம் தான் கண்ணாரக் கண்ட சொர்க்கம்'' (You and I have not seen Heaven, whereas to me Courtallam is the heaven on Earth'') அப்போதே தியாகராசர் அந்தக் குற்றால மண்ணைத் தனக்குரிய விண்ணாக மனத்தில் வரித்துக் கொண்டு விட்டார் போலும்!

சென்னையில் இவர் பொறுப்பில் வந்து சேர்ந்த அடையாறு வீட்டைப் புதுப்பிக்கச் செட்டி நாட்டுக் கொத் தனார்களைக் கூட்டிச் சென்று அங்கேயும் செட்டிநாட்டுக் கலை மரபை நிலை நாட்டினார்.

கல்வி நிலைய அமைப்பில் தலை சிறந்தது தியாகராசர் பொறியியற் கல்லூரி. திருப்பரங்குன்றம் மலைத் தொடரில் கண்ணுக்கும் கருத்துக்கும் விருந்து தரும் வகையில் இதனைக் கட்டினார். இங்கே கட்டிடத்திற்கென நிறையச் செலவிட்டார். ''பிற நிறுவனங்களின் வளர்ச்சி பாதிக் கப்படும் அளவுக்கு இங்கே பணம் கொட்டப்பட்டது''.

## தீப்பெட்டி அடுக்கு :

பம்பாய் போல அடுக்கடுக்காக அமைந்த பலமாடிக் கட்டிடங்களை நம் நகர்களில் கண்டால், நாம் மகிழ்ந்து வியந்து அண்ணாந்து பார்ப்போம். ஆனால் அவர், வருந்தி, முகம் சுளித்துத் தலை குனிவார். திராவிடக் கட்டிடக்கலை வளர்ந்த நாட்டில் இப்படித் தீப்பெட்டிகளை ஒன்றின் மேல் ஒன்று அடுக்கி வைத்தது போல், கலை உணர்வு சிறிது மில்லாமல் கட்டியிருக்கிறார்களே என்று கூறுவார். திருமலை மன்னருக்கு சுமந்திரமூர்த்தி எனும் சிற்பி அமைந்ததுபோல தியாகராசர்க்கெனச் சில செட்டிநாட்டு மேஸ்திரிகள்

அமைந்தனர். லூர்து மேஸ்திரி, அடைக்கல மேஸ்திரி, ஆரோக்கிய மேஸ்திரி, உபகார மேஸ்திரி, சின்னய்யா மேஸ்திரி எனும் கொத்தனார்களையும் கலைஞர்களாக்கி விட்டார். எஞ்சினியர் கட்குமேல் இவர்களை மரியாதையுடன் நடத்தினார்.

## ஏமாந்த கல்கி :

தியாகராசர் கட்டிட உணர்வின் ஒரு சிறப்பம்சம் அங்குள்ள சிற்பச் செல்வங்கள். பயணம் செல்கையில், அழகான சிற்பம் ஒன்றைப் பார்த்துவிட்டால், அதை என்ன விலை கொடுத்தேனும் வாங்கி வந்து, அதைப்போலவே இங்கும் உருவாக்கி வைப்பார். அவருடைய மாளிகைக்கு வந்த ‘ கல்கி ’ ஒருமுறை இதைக் கண்டு ஏமாந்து போனார்.

கலைத்தந்தையின் மாளிகைக்கு வருகை புரிந்த கல்கி, வாயிற்படியில் அமர்ந்தபடியே காவல்காரன் தூங்கக் கண்டு, சற்றுத் துணுக்குற்றார். இன்னும் சற்று அருகில் வந்து பார்த்தபோது, தூங்கிய நிலையில் இருந்தது மனிதன் அல்ல, சிலை என்று கண்டு ஆச்சரியப் பட்டு, ஊரையே ‘‘ ஆ. ஆ. தெற்கூர் ’’ எனப் பாராட்டி எழுதினார்.

சென்னை சென்றால் அங்குள்ள நவீன கலைப் பள்ளிக்குச் செல்லத் தியாகராசர் தவறமாட்டார். அதன் முதல்வர் திரு. பணிக்கர் போன்ற கலைஞர்களுடன் தொடர்பு கொண்டு புதிய முறைக் கலை நுணுக்கங்களைப் பற்றி அறிந்து கொள்வார். ஓவியக் கலையிலும் நாட்டம் உண்டு. ‘‘உலகில் மிகப் பெரிய சாதனைகள் நிகழ்த்தக் கூட்டம் அதிகம் தேவை இல்லை என்பதை வலியுறுத்தும் செட்டியார் அவர்கள் அடிக்கடி ஏசுக்கிறிஸ்துவின் லாஸ்ட் சப்பர் (இறுதி இராப் போசனம்) என்ற ஓவியத்தை என்னிடம் சுட்டிக்காட்டி - ‘‘பார்த்தாயா, ஏசுவுடன் உள்ளவர்கள் 12 பேர்தான்.

இவர்கள் கடுமையாக முயன்று உலகில் 3இல் ஒரு பங்கைக் கிறிஸ்தவ மதமாக்கியுள்ளார்கள். இது இப்படியிருக்க நாம் சிலர் மட்டும் சேர்ந்து கடுமையாக முயன்றால் ஏன் நாட்டில் பல பெரிய காரியங்களைச் சாதிக்க முடியாது?'' என்று கூறுவார். செட்டியாருடைய முன்னேற்றங்களுக்கு இந்தப் படம் மிகவும் துணையாக இருந்தது போலும்[1]

## மணிவாசக மதிப்பு:

அதுபோல ஆலய அமைப்பிலும் அங்குள்ள சிற்பச் சிறப்பிலும் அவருக்கு ஈடுபாடு உண்டு. ''ஆவுடையார் கோயில் என வழங்கப் பெறும் திருப்பெருந்துறைக்குச் சென்றார். இத்திருத்தலம் மாணிக்கவாசகர்க்கு இறைவன் குருபிரானாக எழுந்தருளி உபதேசம் செய்த சிறப்புடையது. மாணிக்கவாசகரது திருவாசகத்தை எழுத்து எண்ணி ஓதியவர் தியாகராசர். அக்கோவிலில் அண்மையில் நடந்த திருப் பணிகளைப் பார்த்து வரும்போது மேல்விதானத்தில் பெரிய சாளரங்களை அமைத்து, நிறைய ஒளிபுக வைத்துக் கட்டிடக் கலையில் ஏற்கெனவே அமைந்திருந்ததொரு நுட்பத்தை மாற்றியிருக்கக் கண்டார். சந்நிதிக்குள் மிகச் சிறு ஒளிபரவ, மூலத்தானத்தில் திருவிளக்கு ஒளிவிட, அருவமாக எழுந் தருளியிருக்கும் இறைவனை மனக் கண்ணால் வழிபட்டதாக மணிவாசகர் பாடிய திருவாசகப் பாடலை எடுத்துச் சொன்னார். 'திணிந்ததோர் இருளில் தெளிந்த தூ வெளியே' எனப் பாடிய மணிவாசகரின் பாடலுக்கு மாறாகக் கலை நுட்பம் அறியாமல் அதிக ஒளிவரும் படியாக அந்த இடம் மாற்றிக் கட்டப்பட்டிருத்தல் கண்டு வருத்தப் பட்டார்.''[2]

---

1. திரு. சி.எஸ். இராமாச்சாரி - 'தினமலர்' பேட்டி - 1974
2. உடனிருந்து கேட்டவர். டாக்டர் சுப. அண்ணாமலை.

மதுரை மீனாட்சி அம்மன் கோயிலை 1963இல் புதுப்பித்துத் திருமுழுக்குச் செய்ய ஏற்பாடாகியிருந்தது. மதுரைத் திருக்கோவிலில் பெரியதும் சிறியதுமான கோபுரங்கள் 12ம் விமானங்கள் 2ம் உள்ளன. திருப்பணிக் குழுவின் தலைவராயிருந்த திரு. பி. டி. ஆர். அதற்கெனக் கணிசமானதொரு நன்கொடை கேட்டார். தியாகராசர் ஏதேனும் ஒரு கோபுரத்தைப் புதுப்பிக்கும் பணியைத் தன் பொறுப்பில் விடும்படியும் ஏற்கெனவே தனவணிகர்கள் ஏற்றுச் செய்ததுபோல, அதற்காகும் செலவுகளை ஏற்பதாவும் தெரிவித்தார். ஆனால் திருப்பணிக் குழுவினர் இதை ஏற்கவில்லை.[1] மாற்றூர்க் கோவில் திருப்பணிக்கும் உதவினார்.

## மரம் வளர்த்த நாயனார் :

தோட்டக்கலையிலும் தியாகராசச் சுவைஞர்க்குப் பேரீடுபாடு உண்டு. மாளிகை, தொழிற்சாலை, கல்லூரி ஆகியவற்றில் அமைக்கப்பட்ட தோட்டங்கள் பூங்காக்களில் எல்லாம் ஒருவகைச் சீர்த்தி புலப்படும். அவற்றைப் பராமரிக்க எப்போதும் ஆள் இருக்கும். கோவை வேளாண்மைக் கல்லூரியிலிருந்தும், பெங்களூரிலிருந்தும் தோட்டக் கலைஞர்களைக் கூட்டி வந்து அவற்றைப் புதுப்பிப்பார். ஆலமரங்கள் நிறுவனத்தின் ஓர் அங்கமாக

---

1. மதுரை மீனாட்சி அம்மன் கோவிலுக்கு நகரத்தார் காலந்தொறும் திருப்பணி செய்துள்ளனர். 1877இல் நாட்டுக் கோட்டை நகரத்தார்களே ஒன்றுகூடிக் குட முழுக்குச் செய்தனர். திருக்கல்யாண மண்டபத்துக்குச் செப்புத்தகடு வேய்ந்து ஆடிவீதியில் கருங்கல் தளவரிசை போட்டனர். அமாரவதிபுதூர் வயிநாகரம் குடும்பத்தார் செய்த திருப்பணி வரலாற்றுச் சிறப்புடையது. 1922இல் திரு. அழகப்பச் செட்டியார் விமானங்களை புதுப்பித்துக் கிளிக்கூண்டு மண்டபத்துக்கு வண்ணம் பூசினார். இன்றும் அதன் அறங்காவலர்களாக நகரத்தார்கள் விளங்குகின்றனர்.

வளர்க்கப்படும், பொறியியல் கல்லூரி வளாக ஆல்மரம், அடையாறு ஆலமரம் போன்ற பாரிப்பும் பரப்புமுடையது. 'பெரியவரைக்' கேட்காமல் ஒப்புதலாக அவருடைய கையெழுத்துப் பெறாமல் ஒரு சிறு செடியைக் கூட யாரும் வெட்டிவிட முடியாது. அந்த அளவுக்கு மரங்களைப் பேணுவதில் கண்டிப்பாயிருப்பார். ஒரு முறை ருக்மணி மில் கட்டிடவேலையைப் பார்வையிட்டு வரும்பொழுது சாரம் கட்டப்பட்ட மரத்தால் பூந்தொட்டிச் செடிகள் வளைக்கப் பட்டிருப்பதைக் கண்டு கூச்சலே போட்டு விட்டார். உடனே சாரத்தைப் பிரிக்கச் சொல்லிப் பூந்தொட்டிகளைப் பத்திரமான இடத்தில் வைக்கச் சொன்னார். மைசூர் பிருந்தாவனம் பூந்தோட்டம் போல மின்சாரமும் நீர்ச்சுழலும் கண்ணாமுச்சி விளையாடும் நீரூற்றில் மனம் சொக்கி நிற்பார்.

கலையுணர்வு நிறைந்த ஒருவரின் வாழ்வில், ஒவ்வொரு துறையிலும் அதன் ஆட்சியமைந்திருக்கும். தியாகராசரிடம் அழகுணர்ச்சி என்பது ஆளுமைப்பண்பாயிருந்தது. கறுப்பு வண்ணம் அவருக்குப் பிடிக்கும். அவருடைய பென்ஸ் காருக்குக் கறுப்பு வண்ணம் அடிக்கப்பட்டபோது, அதன் கலவைமாறி விடாதிருக்க, டி. வி. எஸ். தொழிற்சாலையில் அவரும் கடைசி வரை கூடவே இருந்தாராம். தமிழ்நாடு நாளிதழில் கறுப்புமை தவிரப் பிறமைகளைக் கவர்ச்சிக்காகக் கூடப் போட இசையமாட்டாராம்.

**நவரச நாயகர் :**

இசையிலும் நடனத்திலும் அவர்க்கு ஈடுபாடு உண்டு. நல்ல ராகங்களின் பெயர்கள் தெரியும். குதிரையேற்றப் பயிற்சி உண்டு. டென்னிஸ் விளையாடுவார். நல்ல தமிழ்க் கவிதைகளில் மனம் சொக்கிப் போவார்.

தியாகராசர் சிறந்த நூலார்வலர். அவருடைய மாளிகையில் அமைக்கப்பட்டுள்ள நூலகம், பல்கலைக் கழகப் பாங்கும் தஞ்சை சரசுவதிமகால் போன்ற பழமையும் உடையது.

''அவர் பஞ்சாலைகளைத் தோற்றுவித்துப் பருத்தி நூல்களை மட்டும் ஆராயவில்லை. பழந்தமிழ் நூல்களையும் ஆராய்ந்தார். அவர் படித்தறிந்த நூல்கள் அனைத்தையும் அவரது மதுரை நகர் மாளிகையில் கண்டு மலைத்து நின்றவர் பலர். அந்நூல்நிலையம் ஒரு பல்கலைக் கழகத்தின் நூல் நிலையம் போன்று காட்சியளிக்கும். அங்கு நூல்கள் ஒழுங் காகவும் அழகாகவும் அடுக்கி வைக்கப் பெற்றிருப்பது மட்டுமல்ல; ஒவ்வொரு நூலிலும் அவர் எழுதிவைத்துள்ள அடிக்குறிப்பும் காணப்பெறும். இவற்றினைக் கண்டு வியப்பு அடைந்தோரில் யானும் ஒருவன்.'' 1

## நூலார்வலர் :

ஆராய்ச்சியாளர்களுக்குதவும் நூலகம் போன்ற இதில் தொகை தொயைான தமிழ் ஆங்கில நூல்கள் வகைவகையாய் அமைந்துள்ளன. பல்வேறு வகைத் தமிழ் அகராதிகள் உள்ளன. வின்ஸ்லோ தமிழ் ஆங்கில அகராதியின் பழம் பதிப்பு இருக்கிறது. ஆக்ஸ்போர்டு பெரிய ஆங்கில அகராதித் தொகுதிகள் உள்ளன. ஷேக்ஸ்பியர் நூல் வரிசைகள் சிறப் பிடம் பெறுகின்றன. சங்க இலக்கியத் தொகை நூற்கள், சைவ சித்தாந்த சாத்திரங்கள், பஞ்சாங்கங்கள், கலைக் களஞ்சியத் தொகுதிகள், திருக்குறள், திருவாசகம் பற்றிய அரிய பதிப்புக்கள் (1900 இல் பதிப்பிக்கப்பட்ட டாக்டர் ஜி. யூ. போப்பின் திருவாசக மொழிபெயர்ப்பு) செந்தமிழ்ச்

---

1. திரு கி. ஆ. பெ. விசுவநாதம் - பேட்டிக் கட்டுரை

செல்வித் தொகுதிகள் எனப் பற்பல உள்ளன. ஆங்கில நூற்களில் 'T. Raj' எனக் கையெழுத்திட்டுள்ளார். பல நூல்களில் ஒப்புநோக்கக் குறிப்புகள் எழுதப்பெற்றுள்ளன.

இந்நூலகத்திற்கு மற்றொரு பெருமையும் உண்டு. பண்டித மணியின் நூலகத்தினை வாங்கிச் (தியாகராசர் கல்லூரிக்கு அளித்ததுபோக) சேகரித்த நூல்கள், பேராசிரியர் ரத்தினசாமி மனமுவந்து அளித்தவை. இராமனாதபுர மன்னருடைய நூலகத்தை வாங்கிச் சேர்த்தவை, திரு. ஐ. என். மேனனிடமிருந்து பெற்றவை, பேராசிரியர் டஸ்ட்டுர் என்பாரிடமிருந்து கொடைக்கானலில் வாங்கியவை (தியாகராசர் இறப்பதற்குச் சிலநாட்களுக்கு முன்னரே வாங்கப்பட்டதாம்) எனப் பல பெரியவர்களின் அரிய தொகுப்புகள் இங்கே உள்ளன.

இல்லத்தையும் இதயத்தையும் அழகுசெய்வது நூலகமே எனக் கொண்ட தியாகராசர் பல நூலக விழாக்களில் பேருரை யாற்றியுள்ளார். நடேசய்யர் வாசகசாலையில் தலைமை உரை (28—8—1954) ஆற்றியபோது ''இருள் கடிந்து எழுதரு ஞாயிறு'' என நூலகத்தைப் போற்றினார்.

மதுரை ஹார்வி நூலகத்தில், பிரிட்டிஷ் கவுன்சில் ஏற்பாடு செய்து நூலகக் கண்காட்சியைத் திறந்து வைத்துப் பேசுகையில் '' நூல் நிலையமே பெருஞ் செல்வம் என்றும், இளையர்க்கும் பெரியோர்க்கும் ஆக்கம் தருவதென்றும், படித்தவரின் நெஞ்சம் நிறை ஆலயம் என்றும், பயில்வோர்க்கு ஆராஅமுது என்னும்'' அழகுறப் பேசினார். அவருடைய ஆங்கிலப் பேச்சின் ஒரு பகுதி இது ;

"Libraries are shrines, where lie all the relics of saints, poets, and scientists have been bequeathed precious, glorious monuments of knowledge, beacons

of light, to heirs who should value such an intellectual inheritance. Libraries are chambers in which young and old may now take counsel with those who in their day have been wise, great and good. To a literary man no earthly possession can equal a good library. Periodicals are our daily food and boon companiens." (Speech delivered at Harvey Library, Madurai on 12—1—1951)

## வழிகாட்டி :

நூலகங்களைக் கிராமந்தோறும் நகர் தோறும் அமைக்க அரசு முன்வர வேண்டும் என்பார்; தொழிலதிபர்கள் தம் இலாபத்தில் ஒரு பங்கை இப்பெரும் பணிக்கு அளிக்க வேண்டும் எனத்தூண்டுவார். சென்னை, அடையாறு, மகாமகோபாத்தியாய டாக்டர் உ. வே. சா. நூல் நிலைய விழாத் தலைமைப் பேருரையில் (9-3-1958) தமிழ் இலக்கியச் செல்வங்களைச் சாமினாதைய்யரைப் போல ஒவ்வொருவரும் பேணிவர வேண்டுமெனக் கேட்டுக் கொண்டார்.

## அழகே இன்பம் :

போராட்டமே வாழ்வாக அமைந்த தொழில்துறைக்கு வந்த தியாகராசர் அந்தப் போட்டியில் மட்டுமே மூழ்கி விடாமல், புலன்களைத் திருத்தி உயர்த்தும் கலை உணர் வுக்கும் ஆட்பட்டார். கலை உணர்வுக்கு ஆட்படுவது ஒரு நிலை, அதை ஆட்படுத்துவது மறுநிலை. தியாகராசரிடம் இந்த இரு நிலைகளும் சமமாக விளங்கின. 'அழகிய

பொருள் என்றும் இன்பம் தருவது[1] எனக் கண்டு, தாம் உணர்ந்தவாறே பிறர்க்கும் உணர்த்துதற்குக் கலைப்பணி யாற்றிய அவரைக் 'கலைத்தந்தை' என அழைப்பது எவ்வளவு பொருத்தம்! அவரே ஒரு தடவை கூறியது போல, அவர் ஒரு தலைமுறைக்காக மட்டும் எதையும் கட்டவில்லை, காலமெல்லாம் நிலைத்து நிற்கும் கலைப் படைப்புக்களையே அவர் நிர்மாணித்தார். அவர் அமைத்த 'தியாகராச மரபு' என்றென்றும் வழிகாட்டும்; வழிபாட்டு நிலையமாகவும் விளங்கும்!

---

1. "A thing of beauty is a joy for ever" - Keats



"பான்மைதரு செய்யதமிழ்
பார்மிசை விளங்க"

- உமாபதிசிவம்

# மொழியும் சமயமும்

## 13

### இரு கண்கள் :

தியாகராசர் ஆழ்ந்த தமிழ்ப் பற்றும், நிறைந்த இறைப் பற்றும் உடையவர். ஆரவாரமற்ற மொழியுணர்வும், ஆசாரக் கோலமற்ற சமயநெறியும் அவர்க்குப் பேச்சும் மூச்சுமாய் அமைந்தன; மேடைகளில் பேச முற்பட்ட போதெல்லாம் தமிழ் மொழியின் ஞாலப் பழமையையும் அது பெற வேண்டிய காலப் புதுமையையும் வலியுறுத்துவார். தமிழ், தமிழர், தமிழர்நாடு - இம்மூன்றின் வளர்ச்சியும் சமதள முக்கோணம் போல அவர் உரையில் புலப்படும். எழுத்தாளர் மன்றங்கள், புலவர் பேரவைகள், கல்லூரி விழாக்கள், தமிழ் மன்றங்கள், இலக்கிய வெளியீட்டு விழாக்கள் எனப் பலநிலையில், வெவ்வேறு ஆண்டுகளில் அவர் உரையாற்றியுள்ளார். இவை அனைத்திலும் அவரது மொழி உணர்வு வீறு பெற்றிலங்கக் காணலாம்.

"மொழிகள் அனைத்திலும் நம் தமிழ் மொழியே தொன்மையும் வன்மையும் உடையது. நீரால், நெருப்பால், கரையானால் பகைவரால் அழிந்தன பலபோக எஞ்சி நிற்கும் இலக்கண இலக்கியங்கள் எந்நாட்டவரும் பெற்றிராத ஒப்பற்ற கருவூலங்களாகும். ... ..."

### கடமை உணர்வு :

"... ... எழுத்துக்கும் சொல்லுக்குமேயன்றி வாழ்க்கைக்கும் இலக்கணம் கூறும் ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியமும்

போன்ற ஒரு நூல் எந்நாட்டிலும் எம்மொழியிலும் இதுகாறும் தோன்றியதில்லை ; நீதி நெறிதவறாது செங்கோலோச்சிய சேர, சோழ, பாண்டியராகிய மூவேந்தருடைய ஆட்சி மன்றங் களிலும் அறங்கூறவைகளிலும், ஆண்டவன் கோயில்களிலும் வீற்றிருந்தது நம் கன்னித் தமிழே'' எனத் தமிழின் தொன்மை, சிறப்பு, வளமை, வனப்பு, இனிமை, ஏற்றம் எனுமிவற்றைக் கூறி நம் கடமையையும் பின்வருமாறு வலியுறுத்துவார் ''இத்துணைச் சிறப்பு வாய்ந்த தமிழ் மொழி, நாடு விடுதலை அடைந்து உரிமை பெற்றுப் பதினாறு ஆண்டுகளாகியும், கல்லூரிகளில் பாடமொழியாக இல்லை. இன்றும் ஆங்கிலத்தின் வாயிலாகவே பாடங்கள் கற்பிக்கப்படுகின்றன. அரசின் அலுவல்களும் ஆங்கிலத் திலேயே நடைபெறுகின்றன. இந்த அவலநிலை வேறு எந்த நாட்டிலும் இல்லை. இவற்றிற்குத் தீர்வு நாள் என்று வரு மோ? எப்படி ஒரு பெருமரத்தின் நிழலில் பிறிதொரு மரம் வள ராதோ அப்படியே ஆங்கிலம் அரசு கட்டிலில் வீற்றிருக்கும் வரை, தமிழ் வளராது. பயிர் செய்பவன் நிலத்திலுள்ள செடி கொடிகளை அறவே களைந்து உழுது பரம்படித்துப் பயன் படுத்துவது போல, தமிழை வளர்க்கும் கடமையால் நாம் ஆங்கிலத்தைத் துணிந்து அகற்றுதல் இன்றியமையாத தாகும் 1

இந்திய மொழிகட்கெல்லாம் பொதுவானதொரு எழுத்து முறை போதும் எனப் பேசப்பட்டதை எதிர்த்து முழங்கினார்.

## எழுத்து மாற்றமா ?

''மொழி வெறியரின் கொடுஞ்செயல் இம்மட்டோடு நிற்கவில்லை. நம் தமிழ் எழுத்தை அறவே அழித்து ஒழிக் கவும் சூழ்ச்சி செய்கின்றனர். நாட்டிற்கு ஒரு பொதுமொழி

1. மதுரை, தமிழ்க் காப்புக் கழக முதலாண்டுவிழா
- தலைமை உரை 1963.

வேண்டுமென்று சொல்வதுபோல் மொழிகளுக்கெல்லாம் ஒரு பொது எழுத்துவேண்டுமென்று கூறவும் துணிந்து முற்பட்டுவிட்டனர். என்னே இவர் தம் பேதைமை! எல்லா மொழிகட்கும் ஒரே எழுத்து வேண்டும் என்று கிளர்ச்சி செய்வோர் மொழியின் அடிப்படை, அமைப்பு, நுட்பம், இலக்கணம் முதலிய வரலாற்று மரபுகளை அறவே தெரியாதவர்கள் என்று துணிந்து கூறலாம்.'' 1

''நாட்டின் ஒற்றுமைக்காக முன்பு ஒரு மொழி வேண்டும் என்றனர். இப்பொழுது எல்லா மொழிகட்கும் ஒரே எழுத்து வேண்டும் என்கின்றனர். இனி ஒரே சமயம் வேண்டும் என்று கூறினும் கூறுவர். தேவநாகரி அல்லது ரோமன் எழுத்து நம் மேல் சுமத்தப்படுமானால், நம் முன்னோர்களிடம் இருந்து நமக்கு வழிவழியாக வந்துள்ள பெறற்கரிய செல்வமாகிய எழுத்தையும் அதன் இலக்கணத்தையும் பறி கொடுத்து இழக்க நேரிடும். மேனாட்டு மொழிகள் பல ஒரே இனத்தைச் சேர்ந்தவையானதால், அவை ஒரே வரி வடிவத்தைப் பெற்றுள்ளன. தமிழ் ஒரு தனி இனமொழி யாதலால், அதனை வேறு எழுத்துக்களால் எழுதுதல் முற்றும் முடியாததாகும்'' 2

''மக்கட்கு நாடும் மொழியும் இரு கண்களாகும். நாடு உரிமை பெற்றதுபோல் மொழியும் உரிமை பெறாவிடில் ஒற்றைக்கண் பெற்ற குருடர் போலாவோம். எனவே அச்சத்தையும், ஆங்கில மோகத்தையும் கடந்து, துணிந்து, முதன் முதல் தாய்மொழியைப் பாடமாகக்கொண்ட பெருமை இக்கல்லூரிக்கு உரியதாகும். இது போற்றிப் பாராட்டத் தக்கது.'' 3

---

1. எழுத்தாளர் மன்றம், மதுரை - திறப்புரை 1-12-1963.
2. சங்க இலக்கிய வெளியீட்டு நிறைவு விழா - சென்னை தலைமையுரை 29—10—1961
3. அரசினர் கல்லூரி நாள் விழா -கோவை. தலைமையுரை 7—3—1962

## இலக்கியப் பொழிஞர் :

தியாகராசர் இலக்கியங்களைப் பற்றிப் பேச முற்பட்டால் அது ஒரு ஆராய்ச்சிப் பொழிலாகவே முடியும். மதுரைத் திருவள்ளுவர் கழகத்தில் (1953) திருக்குறள்பற்றிய புதிய கண்ணோட்டத்தைக் காலத்திற்கேற்ற அரசியல் நெறியாகச் சுட்டினார். உலகப் பெருங்கவிஞர்களுள் ஒருவராகத் திகழ் பவர் கம்பர் எனக் காரைக்குடி கம்பன் விழாவில் (1958) பேருரையாற்றினார். திருவாவடுதுறை திருமந்திர மாநாட்டில் (1957) ஒப்பற்ற கருவூலங்களாகிய செந்தமிழ்த் திருமுறைகளையும் மெய்கண்ட நூல்களையும் பரப்புதல் பற்றி உணர்வூட்டினார். ஆகவே இக்கல்லூரி மாணவர்கள் ஆங்கிலத்தின் வாயிலாகப் பெறலாகும் கலைகளையும் நூலறிவையும், அரசியல் பொருளியல் நுட்பங்களையும் தமிழிற் கொணர்ந்து அதனை வளமுற வளர்க்கும் பெரு மக்களாக விளங்குவார்களாக! என நாகர்கோயில் இந்துக் கல்லூரி தமிழ் முதுகலை வகுப்புத் தொடக்க விழாவில் பேருரையாற்றித் திட்டம் தந்தார். சைவ சித்தாந்த நூற் பதிப்புக் கழகத்தின் சங்க இலக்கிய வெளியீட்டு நிறைவு விழாவில் 36 நூல்களிலிருந்து சான்று காட்டிப் பேசினார். தமிழிசை மாண்புகளையெல்லாம் தேவகோட்டை தமிழ் இசைப்பள்ளிவிழாவில் (1953) விளக்கினார்.

## புலவர் கூட்டு :

இளமை முதலே ஈடுபாட்டுடன் தமிழ் கற்றமையாலும், பெரும் புலவர்களுடன் வாழ்வெல்லாம் தொடர்பு கொண்டி ருந்ததாலும், சிறந்த நூற்களைப் பொழுதெல்லாம் படித்த மையாலும் அவரிடம் எத்தொழிலதிபரிடமும் காணமுடியாத தமிழ்ப் புலமையும் வீறும் விளங்கின. இலங்கையில் சிற்கைலாச பிள்ளையிடம் தமிழும் சைவமும் பயின்றார்,

இலக்கண இலக்கிய நூற்களைக் கசடறக் கற்று விளங்கிய தமிழ்ப் பெரும் புலவர் வரத நஞ்சைய பிள்ளையையும், உரை வேந்தர், சித்தாந்த கலாநிதி ஔவை துரைசாமி பிள்ளையையும் மாளிகைப் புலவர்களாக ஆதரித்தார். மறைமலை அடிகள், பண்டிதமணி, நாவலர் பாரதியார், கி. ஆ. பெ. முதலான தமிழர் தலைவர்களுடன் எப்போதும் தொடர்பு பூண்டார். தமிழ்ச் சங்கங்கள், புலவர் குழுக்கள் எனப் பலவற்றிற்கு நன்கொடை வழங்கினார். தியாகராசர் கலைக் கல்லூரியினைத் தமிழ்க் கோட்டமாகவே ஆக்கிவைத்தார். பிற தொழிலதிபர்களிடமும் இயன்றவாறெல்லாம் தமிழ்ப் பற்றை மூட்டினார்.

தெள்ளூற்ற தமிழமுதின் சுவைகண்ட மன்னர்கள் காலமெல்லாம் புலவரைப் போற்றி வந்துள்ளனர். மலையிலேறிக் கொண்ட நாடு கொடுத்து மகிழ்ந்தான் ஒரு மன்னன்; வாள் கொண்ட கையால் வளர் சாமரை கொண்டு வீசினான் ஒரு வேந்தன்; அருநெல்லி தந்தான் அஞ்சா வேந்தன்; தமிழ்வாணர்க்குத் தன் தலைகொடுத்துப் பொன் பெற்றுச் செல்லவேண்டி நின்றான் மற்றுமொரு காவலன்; 'புலவர் பாடாது வரைக என் நிலவரை" எனச் சூளுரைத்தான் ஓர் அரசன். அந்த மரபிலே வந்த ஆலையரசர் தியாகராசர் தம்காலததே வாழ்ந்த புலவோர்க்கெல்லாம் தண்ணளி செய்தார்.

பண்டிதமணியிடம் இவர்க்குப் பெரு மதிப்பு உண்டு. அவரைத் தம் ஆசானாகவே போற்றி வந்தார். அவர் எழுதிய திருவாசக திருச்சதக நூலுக்குப் பொருளுதவி செய்தார். அந்நூல் முன்னுரையில் (1947) ''தமிழ் இலக்கியச் சுவையில் ஈடுபாடும் அதன் வளர்ச்சியில் பேரார்வமும் உடையவர்கள்; திருவாசகத்தையும் திருக்குறளையும் தம் கண்போற்போற்றி வருபவர்கள். சிறு பருவந்தொட்டு

என்பாற் பிறழாத் அன்பும் மதிப்பும் உடையவர்கள்'' எனத் தியாக்ராச அன்பை நெஞ்சார நினைவூறப் போற்றி எழுதினார். [1]பண்டிதமணி இறந்தபோது (24—10—1953) இறுதி மரியாதை செய்யப் புறப்பட்டுச் செல்கையில், மழை பெய்து சாலையெங்கும் வெள்ளம் புரண்டேடியதால் காரை ஓட்டிச்செல்ல முடியவில்லை. கட்டை வண்டியில் ஏறிக் குறுக்கிட்ட ஆற்றைக்கடந்து அஞ்சலிசெய்ய ஓடோடி விரைந்தார் தியாகராசர்.

**தமிழ்க்கடல் :**

தமிழ்க்கடல் ராய சொ, நாட்டுக்கும் மொழிக்கும் நன்னெறிக்கும் உழைத்தவர். 'ஊழியன்' இதழைத் திறம்பட நடத்தியவர். சட்ட மறுப்பியக்கத்தில் சிறை சென்றவர். 'காந்தி இருபா' 'பிள்ளைத் தமிழ்' முதலிய நூல்களை இயற்றியவர். திருவாசகத்தேன். ஆழ்வாரமுது, தேவாரமணி முதலியவற்றைத் தொகுத்தவர். காந்தியும் வள்ளுவரும், விறலிவிடுதூது முதலிய 30 நூற்களை எழுதியவர், கம்பனையும், வில்லியையும் ஒப்பிட்டளந்தவர். இந்து மதாபிமான சங்கத்தைத் தோற்றுவித்தவர். 1958இல் இப்பெரியார்க்கு நடந்த மணிவிழாவில், தியாகாசர் தலைமையேற்றுப் பொன்னாடை போர்த்திச் சிறப்பித்தார்.

**நாவலர் :**

நாவலர் சோமசுந்தரபாரதியார் தியாகராசரின் இனிய நண்பர். 1954இல் மதுரை திருக்குறட்கழகப் பாராட்டு

---

1. பண்டிதமணி - மேலைச் சிவபுரி சன்மார்க்க சங்கத்தையும், கலைமகள் கல்லூரியையும் அமைத்தார். அண்ணாமலைப் பல்கலைக்கழகப் பேராசிரியராகப் பத்தாண்டுகள் பணி புரிந்தார். தமது இருமொழிப் புலமையால் மகாமகோபாத்தியாயப் பட்டம் அளிக்கப் பெற்றார். இவர் இலக்கியங்களிலும் சங்க இலக்கியத்திலும் தோய்ந்தவர்; கவிநயம் துய்த்து, தாம் மகிழ்ந்து, பிறரையும் மகிழ்வித்தவர்,

விழாவில், தம் நண்பர் பாரதியார்க்குப் பொன்னாடை போர்த்தி, அவருக்குக் 'கணக்காயர்' எனும் பட்டமும் வழங்கினார், திரு வி. க. புலவர் தலைவராய், தொழிலாளர் தோழராய், அரசியல் அறிஞராய், சமயத் தொண்டராய், பத்திரிக்கையாளராய், சீர்திருத்தவாதியாய், நடுநிலை பிறழாதவராய், வாழ்ந்த தமிழ்த்தென்றல் திரு. வி. க.வுக்குத் தியாகராசர் பொருளுதவி செய்ய முற்பட்டு, அனுப்பப் பட்டதொகை திரும்பி வந்தது ஒரு சுவையான செய்தி. ''திருவி.க. மறைவுக்கு (1953) முன் சிலகாலமாக அவர் வறுமையால் வாடும் செய்திகேட்டு (மாதம் தோறும் ஒரு தொகை அனுப்பக்கருதி மதுரைத் தமிழ் வள்ளல் கருமுத்து தியாகராசன் செட்டியார் ரூ. 250/- உடனே அனுப்பி வைத்தார். இது செட்டியார் அவர்களின் உயர்ந்த பண்பை விளக்கியது. திருவிக அவர்கள், ''என் வாழ்நாளில் இது வரை எவரிடத்திலும் எத்தொகையும் பெற்றதில்லை. இது முதலாவதாக இருக்க வேண்டாமே. மன்னிக்கவும்'' என்று எழுதிய கடிதத்தோடு பணத்தைச் செட்டியார வர்கட்கே திருப்பி அனுப்பி வைத்தார். இது திரு. வி. க. அவர்களின் உயர்ந்த பண்பாட்டைக் காட்டுகிறது'' என்று எழுதினார் முத்தமிழ்க்காவலர் கி. ஆ. பெ. விசுவநாதம் 1

இவை இரண்டையும் எண்ணும் போது, ''கொள்ளெனக் கொடுத்தல் உயர்ந்தன்று அதனெதிர் கொள்ளேனென்றல் அதனினும் உயர்ந்தன்று'' எனும் புறநானூறு நினைவுக்கு வரும். 2

---

1. செந்தமிழ்ச் செல்வி - சிலம்பு 28 பரல் 2

2. "Two persons can never patronize unless one has some thing to give which the other finds it pleasant to take and vice versa, but the scope of such fraternisation between people is checked by the limitations of their nature and upbringing.

— Kasa Subbarao.

தமிழறிஞர் கீ. ராமலிங்கனார், பேராசிரியர் டாக்டர் ராசமாணிக்கனார், டாக்டர் அ. சிதம்பரநாதச் செட்டியார், டாக்டர் சி. இலக்குவனார் முதலியோரைப் புரந்தார். வரத நஞ்சையருக்குப் பொன்னாடை புனைவித்தார். இலக்குவனாரின் தொல்காப்பிய ஆங்கில மொழியாக்கம் வெளிவர உதவினார்.

## குழுக்கள் :

தமிழகப் புலவர் குழுவின் 49 புலவர்க்கும் தியாகராசர் பொன்னாடை அணிவித்து மகிழ்ந்தார். இப்புலவர் குழுவின் மூன்றாம் கூட்டம் மதுரைத் தமிழ்ச் சங்கத்தில் (5—19—59) நடந்தபோது, கருமுத்து தலைமை தாங்கி, தம் இல்லத்திலேயே புலவர்க்கெல்லாம் விருந்தளித்தார்.[1]

1948 மதுரையில் நடைபெற்ற முதல் தமிழ்விழாவில் வரவேற்புக் குழுத் தலைவராகத் தியாகராசர் ஆற்றிய பணிகள் மறக்கமுடியாதவை. மதுரை திருவள்ளுவர் கழகப் புரவலராகத் திகழ்ந்தார். தமிழிசைச் சங்கத்திற்குப் பொருளுதவி செய்தார். சென்னை இரண்டாம் உலகத்தமிழ் மாநாட்டிற்கு[2] வருகை தந்த அறிஞர் பெருமக்கள் மதுரைக்கு வந்தபோது அவர்கட்கெல்லாம் பெரும் சிறப்பளித்தார். பல்லாண்டுகள் தமிழ் பயின்று, பழந்தமிழ் நூற்களை

---

1. தமிழகப் புலவர் குழு (15-1-1959) இல் திருச்சி தேவர் மன்றத்தில் முதன்முறை கூடியது. கி.ஆ.பெ. விசுவநாதனார் மணிவிழாச் சமயத்தே தோற்றுவிக்கப்பட்ட இக்குழு, அன்னவரையே செயலராக ஏற்றது. தமிழ்மொழி வளர்ச்சிக்குத் துணை நின்று, தடையானவற்றிற் கெல்லாம் எதிர்நின்று வழிகாட்டிவருகிறது.

2. முதல் உலகத் தமிழ் மாநாடு கோலாலம்பூரில் நடந்தது. 1968இல் சென்னையில் இரண்டாம் மாநாடு நடந்தது. பின்னர் பாரிசிலும் இலங்கையிலும் நிகழ்ந்தது.

ஆராய்ந்த செக் நாட்டுத் தமிழறிஞர், டாக்டர் கமில் சுவல பில்லுக்குப் பொன்னாடையும் புகழ்மாலையும் தமிழ் மக்கள் சார்பில் சூட்டினார்.

**களஞ்சியம் :**

தமிழில் அறிவுக் களஞ்சியமாக உருவாக்கப்பட்ட கலைக் களஞ்சியத்திற்கு முதன்முதலில் பெருநிதியளித்த கொடை யாளர்களில (1947) தியாகராசரும் ஒருவர். இதன் முதல் தொகுதி 1954இல் வெளியிடப்பட்டது.

**மனப் பாடம் :**

இவர் இலக்கியங்களில் தோய்ந்து பயின்றவர் என்பதற்கு ஒரு சான்று: தியாகராசர் கல்லூரித் தமிழ்த்துறைக்கு விரிவுரையாளர் ஒருவரை நியமிக்க நடந்த நேர்முகப் போட்டி வேட்பாளர்களில் ஒருவர், [1] குறிஞ்சிப்பாட்டுப் பற்றித்தாம் ஆய்ந்திருப்பதாகக் குறிப்பிட்டிருந்தார். பேட்டிச் சமயத்தே தியாகராசர், அவரைக் குறிஞ்சிப் பாட்டிலிருந்து சில இடங்களைக் குறிப்பிடச் சொன்னார். அவருக்கு வேர்த்து விறுவிறுத்துவிட்டது. ஆனால் தியாகராசர் 150 வரி வரை பிறழாமல் பொருளுணச்ச்சியுடன் சொல்லி எல்லோரையும் வியக்க வைத்தார்.

'அவருக்கு அனேக செய்யுட்கள் மனப்பாடம். வெளி யூருக்குக் காரில் செல்கையில் பலமணிநேரம் எவ்வாறு கழித் தோம் என்பது தெரியாமல் பல செய்யுட்களைச் சுவைபடச் சொல்லி, அவற்றின் அரிய கருத்துக்களையும் மனத்தில் என்றும் நீங்காது நிலைத்திருக்குமாறு எடுத்துக்கூறுவார். நல்ல நகைச்சுவைக் குறிப்புக்களைச் சொன்னால் மனம் திறந்து வாய்விட்டுச் சிரித்துவிடுவார்.'' [2]

---

1. டாக்டர் தமிழண்ணல் கூறியது.
2. திரு. எல். என். எஸ். சுந்தரராமன் - கட்டுரை

எழுதும் கடிதங்களிலும் ஆற்றும் உரைகளிலும் விழுமிய மொழிநடையை மேற்கொள்வார். அரிய மேற்கோள்களை ஆங்காங்கு எடுத்தாளுவார். வாழ்த்துரைகளையும் செய்திகளையும் கூட இலக்கியமணம் கமழ எழுதி அனுப்புவார். சான்றவர், தாளாட்சி (நிர்வாகம்) எனப் புதுப்புதுச் சொற்களைக் கொணர்வார்.

## தோய்வு :

திருக்குறளும் திருவாசகமும் அவர் இதயமெல்லாம், எண்ணமெல்லாம் நிறைந்தவை. குறள்பரப்பக் 'குறள்நெறி' எனும் திங்கள் இருமுறை ஏட்டினை நடத்தினார். திருக்குறளை உரைநலத்தோடு 14 தடவையும் திருவாசகத்தை 18 முறையும் விரதம் போலப் படித்து முடித்தார். ''அதிகாலையில் எழுந்து வானதூதரைப்போலக் கையில் திருப்புகழ் திருக்குறள் - திருவாசகம் இவைகளில் ஏதாவதொன்றினை வைத்து ஒவ்வொரு பக்கமாக மனப்பாடம் செய்து கொண்டு ஆலையைச் சுற்றிவரும் காட்சி, இன்றைக்கும் மறக்கமுடியாத தொன்றாகும்.'' 1

'பால்வாய்ப் பசுந்தமிழில்' பரவிய வழிபாடு தமிழ் நாட்டுக் கோயில்களில் இடம்பெற வேண்டும் எனும் உணர்ச்சி மிக்கவர். ''தாய்மொழியில் வழிபாடு நடந்ததால் தான் தமிழ்மக்களிடையே சமய உணர்வும் நல்லொழுக்கமும் வேரூன்றித் தழைத்திருந்தன. தெரியாத மொழியில் வழிபாடு நடைபெறின், அதனை அறியாத மக்கள் உள்ளத்தில் அருள் உணர்ச்சி எவ்வாறு உண்டாகும்? எனக் (விருதுநகர்ப் பேருரை) கேட்டவர். தமிழண்ணல் பாடியது 2 போல ''நிலைத்த புகழ்ச் சிவநெறியில் நிகரற்ற பற்றுடையார்'' ஆகத் திகழ்ந்தார். இளம்வயதில், அதிகாலை

---

1. நமது மாமேதை -கட்டுரை
2. திருச்சிற்றம்பலம் -கோயில் மலர்

நாலரை மணிக்கே எழுந்து திருப்பரங்குன்றத்திற்கே நடந்தே செல்வார். மாலையில் பெருமாள் கோயில், மீனாட்சி ஆலயம் ஆகியவற்றிற்கும் நடந்து சென்றே வழிபட்டு வருவார். பிற்காலத்தில் பிறரால் இனம் அறியப்படாமல் அமைதியாகச் சென்றுவரமுடியவில்லையாகையால் விட்டுவிட்டார். காசிக்கு போனாலும் வெளிவிடுதிகளில் தங்காமல், அங்கு உள்ள சத்திரத்திலேயே ரூ. 11 ஐ பணம் எழுதித் தங்குவார். புறத்துறையிலும் பொருள் துறையிலும் திறங்காட்டியது போலச் சமயத்துறையிலும் தெய்வக் கடமையிலும் அவர் கொண்ட நாட்டங்கள் பலவகையின.

## சிவநேயம் :

சிவநேயச் செல்வரான தியாகராசரின் கருத்துக்கள் இவை: ''சைவசமயம் உலக சமயங்களில் மிக்க பழமையும் சிறப்பும் வாய்ந்தது, அறிவியல் ஆராய்ச்சிக்கு அசைவின்றி நிற்கும் ஆற்றல் மிக்கது. எச் சமயத்தையும் தன்னுள் அடக்கிக் கொள்ளும் இயல்பும் ஏற்றமும் உடையது'' எனச் சிவநெறிக் கொடியைச் சென்னை சைவசித்தாந்த மகாசமாச விழாவில் ஏற்றி வைத்துப் பேசினார், (1954). ''நம் சமய நூல்களைப் பிற மொழிகளில் மொழி பெயர்க்கவும், நாடெங்கும் சமயக் கல்லூரிகள், தேவார திருவாசகப் பாடசாலைகளை அமைக்க வேண்டு மெனவும் ''திருமந்திர மாநாட்டில் (1957) வலியுறுத்தினார். ''சென்னை அறநிலையப் பாதுகாப்புக் கழகம் சமய அடிப்படைக் கருத்துக்களை உணராது, அன்புக்கும் அறத்திற்கும் இடனாகிய கோயில்களில் வாணிபத்தைப் புகுத்திப் பணந்தேடும் கொடுமை பழிக்கத்தக்கதாகும். உதாரணமாக, கோயில்களில் பிள்ளையார்க்கு உடைக்கப்படும் சிதறுகாயும் ஏங்கி நிற்கும் ஏழை மக்களை எடுக்கவிடாமல் ஏலம் விட்டுப் பணமாக்கப்படுகிறது. கிறித்துவ மடங்கள்

செய்யும் அரும்பெரும் தொண்டுகளைப் பார்த்தேனும் அந்த உயரிய முறையில் நம்முடைய மடங்கள் பணி செய்தல் வேண்டும். கிறித்தவத் துறவிகள் பெருங்கல்வி பயின்று தமக்கென வாழாப் பிறர்க்குரியாளராய் நாட்டு மக்கட்கு நற்றொண்டுகள் செய்வதுபோல். நம் சமயத் துறவியர்களும் அறப்பணியை மேற்கொண்டு சமயத்தை வளர்க்க முன்வர வேண்டும்'' எனத் தேவகோட்டை கந்தர் சஷ்டிவிழாவில் (1952) எடுத்துக்காட்டினார். சமய குறவர்கள் ஒதுங்கி மிராது மக்கள் மன்றத்தில் பணிபுரிய முன்வாவேண்டு மென '' The world has absolute need of learned and devoted men to uplift such people as are groping in deep darkness and ignorance to an immaterialistic and spiritual plant of life என கீத ஞான யக்ஞ சபை ஆங்கில உரை (1956)யிலும், கல்வி கற்கும் இளைஞர்கள் இறை யுணர்வு கொள்ள வேண்டுமென்பதை. "It is incumbent on us to realise that our culture and civilisation is more important than any temporal matters, being deeply rooted in religion, ... Continuance of individual religious practices, of prayers and meditations, moral instructions of a general nature, should find a place in our schools, colleges and also in our universities" என அண்ணாமலைப் பல்கலை கழகப் (1960) பேருரையிலும் கல்லூரி மேடைகளிலும் விடாது முழங்கினார்.

**அருள்நாட்டம் :**

அவரது திருமுகத்தைத் திருநீறு எப்போதும் அழகு செய்து கொண்டிருக்கும். வள்ளலார் கொள்கைகளைப் போற்றிச் சுத்த சைவ உணவு கொள்வதையும் மது அருந்தா மையையும் விரதமாகப் பூண்டொழுகினார். வெளி நாட்டவர் வந்து அவருடன் தங்கும்போதும், விருந்துகளில் சுத்த சைவ இனிய எளிய அமுதுணவையே படைத்து உபசரிப்பார். அவர் நடத்தும்கல்லூரி விடுதிகளில் எல்லாம் சைவ உணவு தருவதே

மரபு. இதை எதிர்த்து எத்தனையோ கிளர்ச்சிகள் நடந்தும் மாசற்ற அன்போடும் மன உறுதியோடும் மறுத்து விடுவார். ஒருமுறை தியாகராசர் பொறியியல் கல்லூரி மாணவர்கள் தங்கள்விடுதிகளில் புலால் உணவு வேண்டிக் கிளர்ச்சி செய்தனர். அவர்களுடைய கோரிக்கைகளுக்குக் கல்வித்துறை உயரதிகாரிகளும் ஆதரவாயிருந்தனர். ''சமணர்கள் நடத்தும் கல்லூரிகளில் உயிரியல் பாடத்தைச் சொல்லிக் கொடுக்கும்படி உங்களால் கட்டாயப்படுத்த முடியுமா?'' என்று கேட்டு அதிகாரிகளின் வாயினை அடைத்தார். ''கடின உழைப்பிற்குப் புலால் உணவு தேவை என்பது பொருளற்றது. யானையும் குதிரையும் எவ்வளவு வலிமையுடையன. அவை புலாலா உண்கின்றன?'' எனச் சொல்லி மாணவர்களைத் திருப்பி அனுப்பினார். ''கொல்லா விரதம் ஒன்று கொண்டவரே நல்லார்'' எனும் கொள்கை பரப்பும் மாநாடுகளில், தமிழ்நாடு சித்தமருத்துவ மாநாடுகளில் ஆண்டு தோறும் கலந்து கொண்டார். அந்த இயக்கங்களின் வெளியீடுகளுக்கு ஆண்டுதோறும் பல்லாயிர ரூபாய்க்கு விளம்பரங்களை வழங்கி ஊக்குவித்தார், பிராணிகள் பாது காப்புச் சங்கத்தில் உறுப்பினராயிருந்து உதவினார்.

## கை கொடுத்தல் :

இரவும் பகலும் தொழில் நிறுவனங்கள் பற்றிச் சிந்திக்கவே போதிய நேரமில்லாத தியாகராசர்க்கு மொழி நலக் காப்பிலும் சமய வழிச்சார்பிலும் இத்துணை ஈடுபாடிருந்தமை பெரு வியப்பிற்குரியது. தமிழியக்கமும் சமய சீர்திருத்த எண்ணங்களும் தமிழகத்தில் பரவி வந்த வேளையில், தியாகராசர் போன்றோர் அவற்றிற்கு அவ்வப்போது ஆதரவளித்தமையினாலேயே அவை காலூன்றி நின்றன. அவ்வப்போது அவை அவ்வாறு காலூன்றி விடாமல் செய்யப்பேரூழி வந்த போதும் அதை எதிருன்றி நிற்கத்தக்கார் தேவைப்பட்டனர். காலத்தின் தேவையினை யறிந்து கை கொடுக்க அப்போதும் முன் வந்தார் தியாகராசர்!

# திணிப்பும் எதிர்ப்பும் 14

"முன்னையிட்ட தீ முப்புரத்திலே
பின்னையிட்ட தீ தென்னிலங்கையிலே...
- பட்டினத்தார்

## வாக்குப்பொய்க்கலாமா ?

"இந்திமொழிச் சிக்கல் ஒன்று இல்லையானால் தமிழ் நாடு இன்னும் அமைதியாகவும், மற்ற மாநிலங்களுகட் கெல்லாம் முன்மாதிரியாகவும் சிறந்து விளங்குமன்றோ ? இதை நம்தலைவர்கள் உணராதிருப்பது வருந்தத்தக்கது. இந்திய அரசினர் நேருவின் சத்திய வாக்கைக் கொன்று விட்டார்கள். அரசியல் பிழைத்தார்க்கு அறம் கூற்றாகும் அன்றோ ?" [1] என எச்சரித்துத் தொடர்ந்த தியாகராசரின் முழக்கம், அவர் மேற்கொண்ட அறப்போர் அனைத்திலும் நெஞ்சு தொடுவதும், சுடுவதும் ஆகும் !

தொழிலாளர் உரிமை, தொழிலதிபர் உரிமை, அரசியல் வாழ்வு உரிமை ஆகிய இவற்றைவிட அடிப்படையானதும் பிற அனைத்தையும் ஆக்கி உயர்த்துவதும் மொழியுரிமையே என்பதை அவர் தெளிவாக உணர்ந்திருந்தார். எனவே தாயெழில் தமிழுக்கு ஊறுவந்த போதெல்லாம் பறவைக் கூடாயிருந்தவர், பாம்புப் புற்றாய்ச் சீறினார். அரசின் சலுகையையும் உதவியையும் எப்போதும் எதிர்நோக்கி யிருக்கக்கூடியதொரு தொழிலை நடத்துபவராயிருந்தும், அவற்றையெல்லாம் மொழிநலம் காக்க முனைந்தபோது துச்சமெனத் தள்ளிவிட்டார். அனுசரணையாகப் பேசா திருந்தாலே பெரும் பதவிகளும் விருதுகளும் அவருக்கு வந்து

1. செந்தமிழ்ச்செல்வி - சிலம்பு 39, பரல் 6

குவியும் என்ற நிலையிருந்தும், அவற்றையெல்லாம், தாய் மொழி இழப்புக்கு முன், அற்பமெனக் கருதியிருந்தார். ஆனால் அப்போரிலும் அவர் தனக்கென ஆதாயமோ, விளம்பரமோ தேடிக்கொள்ளவில்லை. பிறரெல்லாம் உணர்வு பெறத் தீயாக எழுந்தார்; நெருப்பாகக் கிளர்ந்தாலும் நிதானமாகவே எரிந்தார்.

## மொழி காக்க வேண்டாமா?

தமிழ்நாட்டில் இந்தித் திணிப்பும் அதற்கு எதிர்ப்பும் பல போர்களையும் இரத்தக் களறிகளையும் கண்டு, வரலாற்றுத் திருப்பங்களை ஏற்படுத்திப் பெருமாற்றங்களை விளைவித்திருக்கிறது. இந்தித் திணிப்பை எதிர்த்துத் தியாகராசர் மேற்கெண்ட போர் பலமுனைகளைச் சந்தித் திருக்கிறது; பல பெரியவர்களோடு மோதி பல 'பெரியார்' களைச் சேர்த்துக்கொண்டு அணிவகுத்திருக்கிறது; பல மேடைகளிம் முழங்கி ஏடுகளில் பதிவாகி நாடெங்கும் சுற்றுக்கு விடப்பட்டிருக்கிறது.

போர் ஆரம்பித்துவிட்டது! ஒவ்வொரு தமிழனும் விழித் தெழுந்து நம் தாய்மொழியாகிய அரிய இனிய தமிழைக் காக்க முன்வர வேண்டுமெனத் தியாகராசர் 1947இல் விடுத்த சங்கநாதம், தமிழகமெங்கணும் விடாது எதிரொலித்திருக்கிறது.

## கட்டாயமாக்கலாமா?

தமிழ்நாட்டுப் பள்ளிகளில் இந்தியைக் கட்டாயப்பாட மாக வைக்க வேண்டுமென 1936இல் ராசாசி பேசி வந்தார். இதை எதிர்த்து நாவலர் பாரதியார், சுத்தானந்த பாரதியார். மா. ராசமாணிக்கனார், வரத நஞ்சையபிள்ளை, வேணு கோபால் நாயுடு, மறைமலையடிகள் போன்ற தமிழறிஞர்கள்

உரிமைக் குரல் எழுப்பினர். சென்னையில், 1937இல் தமிழ்ப் பாதுகாப்புக்கழகம் அமைக்கப்பட்டது. 1937இல் முதலமைச்சர் பொறுப்பேற்ற ராசாசி, இந்தியினைக் கட்டாயப் பாடமாக்கப் போவது உறுதி எனப் பேசினார். இதனால் இந்தி எதிர்ப்பியக்கக் கிளர்ச்சியும் வலிவுறத் தொடங்கியது. காஞ்சி மணி மொழியார், கா. சு. பிள்ளை போன்றோர் தொடங்கிய ஊர்வலம் தமிழகமெங்கும் வலம் வந்தது. 26—12—1937இல் திருச்சி தேவர் மன்றத்தில், நாவலர் பாரதியார் தலைமையில் இந்தி எதிர்ப்பு மாநாடு நடைபெற்றது. அதில் கருமுத்துவும் கலந்து கொண்டார், தான் சேர்ந்திருந்த காங்கிரசு இயக்கக் கொள்கையைவிட, தன் நெஞ்சை உலுக்கிய மொழிச்சிக்கல் முக்கியமானது என அப்போதே உணர்ந்து விட்டார்.[1]

இந்த எதிர்ப்புக்களை மதியாது, 21—4—1938இல் ராசாசி தமிழ் நாட்டுப் பள்ளிகளில் இந்தியைக் கட்டாய மாகப் புகுத்தினார். வில், மீன், புலி, பொறித்த தமிழ்க் கொடி பிறந்தது. ஈ. வே. ரா. களத்தில் குதித்தார். இளைஞர் அணி திரண்டனர். ஈ. வே. ரா. முதலியோர் சிறைக்கோட்டம் சென்றனர். அறிஞர் அண்ணா, முத்தமிழ்க் காவலர் கி. ஆ. பெ. முதலியோர் தலைமையேற்றனர், பரணி தொடர்ந்தது. ஈ. வே. ரா. தமிழினம் காக்கும் 'பெரியார்' என 1938இல் பட்டம் சூட்டப்பெற்றார். கருத்துப் போர் தொடர்ந்தது; கருமுத்துவின் எழுத்துப் போரும் தொடங்கியது.

---

1. ''நான் 1937 ஆம் ஆண்டு, டாக்டர். சோமசுந்தர பாரதியார் தலைமையில் இங்கே எதிர்ப்பு மாநாடு கூட்டிக் கண்டனத் தீர்மானம் கொண்டு வந்து எதிர்ப்பலைகளை முதன் முதலில் முட்டியெழுப்பியது இன்று என் நினைவுக்கு வருகிறது''

- தமிழக இந்தி எதிர்ப்பு மாநாட்டுக் கொடியேற்றுரை-1965

## சூழ்ச்சி செய்யலாமா?

கருமுத்து 1—5—1939இல் முதலமைச்சராயிருந்த ராசாசிக்குப் பகிரங்கக் கடிதம் ஒன்று (ஆங்கிலத்திலும் தமிழிலும்) எழுதினார்.

''முதலாவதாக, இந்தியை விருப்பப்பாடமாக வைத்திருந்தால் கல்வியும் நடுநிலைமையுமுடையோரிடமிருந்து எதிர்ப்பு இருந்திராது. அதைக் கட்டாயப்பாடமாக வைத்ததாலேயே கிளர்ச்சி பரவி வலிமைபெற்று வருகிறது. இரண்டாவதாக. மாகாணங்களுக்கிடையே ஒற்றுமையுண்டு பண்ணும்பொருட்டு இந்தியைக் கட்டாயப் பாடமாக வைக்கப்பட்டிருக்கிறது. விரும்பிய இந்த நற்பலன் கைகூடியிருக்கிறதா? இல்லை. இதற்கு மாறாக, வடநாட்டார் நம்மை அவர்கள் ஆதிக்கத்திற்குள்ளாக்க ஏதோ பெருஞ் சூழ்ச்சி செய்கிறார்களென்ற அவநம்பிக்கையேற்பட்டதோடு, நம்மாகாணத்திற்குள்ளேயும் பிளவையுண்டு பண்ணி, அதிலும் கேடாக, இறந்து ஒழியும் சாதிச் சண்டை (பார்ப்பனர் - பார்ப்பனரல்லாதார்) யைக் கிளப்பியிருக்கிறது. நம் எதிரிகளுக்கு நம்மை எதிர்க்க ஒரு முதல்தரமான அரசியல் விவாதத்தை உண்டுபண்ணி, இதனால் அவர்களைப் பெரும் வீரர்களாயும் ஆக்கி விடுகிறோம். இதற்குக் காரணம் நாம் அன்றோ? இல்லையேல் அவர்கள் மறுபடியும் தலை தூக்கியிருக்கமாட்டார்கள். (எவ்வளவு தொலைநோக்குடன் தியாகராசர் அப்போதே ராசாசியை எச்சரித்திருக்கிறார்.)

## புறக்கணிக்கலாமா?:

இந்த எதிர்ப்பு இயக்கத்தைப் பொருட்படுத்தாமல் புறக்கணிப்பது இன்னொரு குற்றமாகும். இந்த இயக்கத்திற்குப் பெரும் ஆதரவு இருக்கிறதென்பதற்குப் போதிய சான்றாகும் ... ...''

''மொழி ஒருமை மக்களிடையே ஒற்றுமையை உண்டு பண்ணியிருக்கிறதா? ஒரே மொழி பேசும் தென்னாட்டு இந்துக்களும் வடநாட்டு இந்துக்களும் அதிக ஒற்றுமையாக இருக்கவில்லையா? மக்களிடையே ஒற்றுமையை உண்டு பண்ண மொழியைவிடச் சமயத்திற்கு அதிக ஆற்றலுண்டு. ஆகையால் நாம் ஒரு தேசீய மதத்தைக் கற்பிக்க முடியுமா? ஒருவனுக்குத் தாய்மொழி, பெற்ற தாயினும் சிறந்ததாகும். மொழியிலும் சமயத்திலும் தலையிடுதல் பெரும் பிளவை விளைவிக்கும் ...''

## (ஏ)மாற்ற முடியுமா?:

''பொதுக்கூட்டங்களில் நிறைவேற்றப்பட்ட, நூற்றுக் கணக்கான தீர்மானங்கள் செய்யாத ஒருபலனை, நாட்டுப் பற்றுள்ள ஒருவனிடமிருந்து வரும் கடிதம் செய்யலாமென்று தாய்மொழியான தமிழின் மீதுள்ள பெரும் பற்றால் எண்ணி இதனை எழுதினேன். இது விஷயமாகத் தாங்கள் நேரிற் பேச விரும்பினால், நான் மகிழ்ச்சியோடு தங்களைச் சந்திக்கிறேன். அப்பொழுது என்னைத் தாங்கள் தங்கள் கருத்துக்கு மாற்றினால் நான் தங்கள் தூதனாக அக் கருத்தைத் தமிழ்நாடு எங்கும் பரப்புவேன்'' என முடித்திருந் தார். ராசாசி, தன் கருத்துக்குக் கருமுத்து போன்றோரை மாற்ற முற்படவில்லை. அது முடியவும் இல்லை. காலம் சென்றது. மூதறிஞர் ராசாசியே பாதை திரும்பி வந்து, 35 வருடங்களுக்குப் பின், கருமுத்துவின் கருத்தை ஏற்றுக் கொண்டார். 1965இல் இந்தி எதிர்ப்புப் போரில் தலைமை ஏற்றார்.

## இரத்தம் சிந்தாதா?:

நாடு விடுதலை பெறுதற்கு ஓராண்டிற்கு முன்னரே காந்தியடிகளுக்கும் ஒரு பகிரங்கக் கடிதம் எழுதினரார்,

"நீங்கள் மதுரைக்கு வந்திருந்தபோது இராஷ்ட்ற பாஷை இன்னதென்பதைத் தெளிவுபடுத்தும்படி 1-2-46 ஒரு கடிதம் எழுதினேன். அதற்கு நேராகவோ அல்லது உங்கள் அரிஜன் பத்திரிக்கை மூலமாகவோ இதுவரை பதில் எழுதப்படாமலிருக்கிறது. என் நண்பர், சென்னை சர்வகலா சாலையின் தகுதிமிக்க உபதலைவர். இதற்குப் பதில் எழுத முடியாதென்று சொல்லுகிறார். எல்லா மாகாணங்களிலும் இந்தியை அரசியல் அதிகாரமொழியாக வலிமை செய்து திணிததால் இரத்தம் சிந்தப்படும். ஒருவனும் தான் பரம் பரையாகப் பெற்ற தாய்மொழியாகிய பெருஞ் செல்வத்தை இந்தியின் பீடத்திற்குப் பலி கொடுக்கமாட்டான் ... ..."

அரசியல் நிர்ணயசபை அமைக்கப்பட்ட சமயத்தில். இந்தியாவின் தேசீய மொழிபற்றிய விவாதம் எழுந்த பொழுது, ஆங்கிலத்திலும் தமிழிலும் கையேடு எழுதி நாடங்கும் (8—4—1647) பரப்பினார். "ஒரு புறம், கண்டமாகிய இந்தியாவை ஒரு தேசமாக்க ஒரு தேசீய மொழியைத் தேடுகின்றோம். மறுபுறம் இப்பொழுதுள்ள மாகாணங்களை மொழிவாரியாகப் பிரிக்க முயல்கின்றோம். இது முரண்பாடன்றோ? ஆங்கிலம் நமக்கு எவ்வளவு அந்நியமோ, அதுபோலவே இந்துஸ்தானியும் அவ்வளவு அன்னியாமாகும். ஒரு அயல்மொழிக்குப் பதிலாக இன்னொரு அயல்மொழியை (அது நம் தேசத்ததேயாயினும்) நாம் ஒப்புக்கொள்வது, தக்கதன்று."

அதன் பின்னர் எங்கெங்கு உரையாற்றச் சென்றாலும், அது எந்தக் கூட்டமாயிருந்தாலும் ஆதிக்க இந்திக்கு எதிரான தன் கண்டனத்தைத் தெரிவிக்காமல் தியாகராசர் பேச்சை முடிக்க மாட்டார்.

## உயிர் வெல்லமா?

" தீங்குள்ள இந்தியை நாம் எதிர்ப்போம் - உயிர்த்
தித்திப்பை எண்ணிடப் போவதில்லை "

எனப் பாரதிதாசனின் புது முழக்கம் கேட்டது. 1965இல் இந்தி ஆட்சி மொழியாக அறிவிக்கப் படுவதை எதிர்த்து நாடெங்கும் தீக்குளிப்பு ஏற்பட்டது. சென்னை சிவலிங்கம், அரங்கநாதன் எனும் இரு இளைஞர்களும், ஐயம்பாளையம் ஆசிரியர் வீரப்பன் போன்றாரும், திருச்சி சின்னச்சாமியும், கோவைத் தொழிற் கல்லூரி மாணவர் தண்டபாணியும் தம் உயிரைத் தியாகமாகத் தந்தனர். தாரால் எழுத்துக்களை அழிக்கும் ஆர்ப்பாட்டம் போய், தன்னையே அழித்துக் கொண்டு பலிதரும் போராட்டம் நெருப்பாய், புயலாய்ச் சீறி எழுந்தது.

## சிங்கநாதம் கேட்கவில்லையா?

1965 சனவரி 26இல் இந்தி ஆட்சி மொழியாகும் என இந்திய அரசு அறிவித்திருந்ததை எதிர்க்க, தமிழக இந்தி எதிர்ப்பு மாநாட்டினை முத்தமிழ்க்காவலர் கி. ஆ. பெ. விசுவநாதம் திருச்சியில் 17—1—1965இல் கூட்டினார். 1938இல் திருச்சியில் அவர் நடத்திய தமிழக இந்தி எதிர்ப்பு மாநாட்டில், முதல் முதலாகத் தமிழ்க் கொடியை ஏற்றிவைக்க வந்த தியாகராசரை, இப்போதும் கொடியேற்றுவிக்குமாறு அழைத்திருந்தார். மூதறிஞர் ராசாசி, பேரறிஞர் ஜி. டி. நாயுடு, பி. டி. ராசன் முதலியோரும் பல கட்சித் தலைவர்களும் பங்கு கொண்ட இம் மாநாட்டில் தியாகராசர் சிங்கநாதம் செய்தார். தமிழகத்தில் இந்தித் திணிப்புக்கு எதிராகக் காலந்தோறும் நடந்த போராட்டங்களைப் பட்டியலிட்டுச் சொல்லி, எதிர்வாதங்களைத் தகர்த்தார். இந்தியப் பேரரசு தன் அதிகார பலத்தை நம்பியிராமல், குடிதழுவிக்கோலோச்ச வேண்டுமென அறிவுரை கூறினார்.

ஆனால் அரசு, அதிகாரத்தையே கருவியாகக் கொண்டு, கிளர்ச்சியை அடக்க முயன்றது. பல்லாயிரவர் சிறைப் பட்டனர். தமிழகமே எரிந்தது. அச்சமயம், தியாகராசர் மீதும் அரசின் சினம் திரும்பியது. அவர் கைது செய்யப்பட்டு நீதிபதி முன் கொணரப்பட்டு வீட்டிலேயே சிறை வைக்கப் பட்டார். அவரது தீவிரமான இந்தி மொழிக் கொள்கைக்காக உரிய சிறப்புக்களைப் பலகாலம் தர முன்வராத அரசு இப் போது அவரை முற்றிலும் அடக்கிவிடக் கருதியது. தொழில் முறையிலும் தனி முறையிலும் எண்ணற்ற இடர்களை அவருக்கு ஏற்படுத்தியது. என்றாலும் தியாகராசர் மசிய வில்லை. இந்த அறைகூவலை ஏற்று எதிர்க்கவும், தன் மனம் துணிந்த கொள்கையை விடாமல் பற்றி நிற்கவும் உறுதி பூண்டார் ("His readiness to rise to a challenge and refusal to abandon a cherished objective......") 1967இல் அறிஞர் அண்ணா அமைச்சரவை தமிழகத்தில் ஆட்சிப் பொறுப்பை ஏற்ற பின்னரே அவர் மீது தொடரப்பட்ட வழக்குகள்-நேர் செய்யப்பட்டன.

## புயல் ஓயுமா ?

தியாகராசரைப் போலப் பெருந் தொழிலதிபராக விளங்கிய, முழுநேர அரசியல் வாதியாயிராத, எவரும் இந்த அளவுக்கு மொழியுரிமைப் போரில் ஈடுபட்டதில்லை. அவரைப் போன்றோரின் இடைவிடாப் போர் மத்திய அரசின் மனக் கதவுகளைத் தட்டியதன் பலனாகவே, பின்னர், மும்மொழித் திட்டம் வந்தது. மொழிச்சிக்கல் ஓரளவு பின்னுக்குத் தள்ளப்பட்டது.

> "துன்பம் உறவரினும் செய்க துணிவாற்றி
> இன்பம் பயக்கும் வினை"

எனும் குறள் வரிகட்கு இலக்கணமாகத் திகழ்ந்த தியாகராசர் மொழியுரிமை வரலாற்றில் தனியிடம் பெற்று விளங்குகிறார் !

‘ஒருநாள் உறைந்திசினோர்க்கும்
வழிநாள் தம்பதிமறக்கும் எம்பதி’

— சங்கப் பாடல்

# இரும்பும் காந்தமும்

# 15

## புளியம்பழமும் தோடும் :

ஒரு மனிதன் தன் உறவினரோடும் நண்பர்களோடும் சமூகத் தொடர்பு கொள்வது இருவகைப்படும்: ஒன்று, இரும்பும் காந்தமும் போல எப்போதும் ஈர்ப்புற்றுப் பழகலாம்; மற்றொன்று, புளியம்பழமும் தோடும் போல உரிய கால எல்லைவரை உறவாடியிருக்கலாம். தியாகராசர் பலதுறை யிலும் முன்னேறும் நோக்கம் கொண்டவர். ஆகையால், பலரோடும் கலந்து பழகும் பண்பை இரும்பும் காந்தமும் போல உருவாக்கிக் கொண்டார். இவர் தம் நண்பர்களிடம் பழகும்போது இரும்பாகவும் இருந்திருக்கிறார். காந்தமாகவும் கவர்ந்திருக்கிறார். பெருங்குடிப் பிறப்பினர் ஆதலால் எதிலும் பெருகிய நினைப்புடனேயே பழகியிருக்கிறார். இலாப நட்டக் கணக்குப் போட்டு எவருடனும் பழகுவதை வெறுத் திருக்கிறார். தான் பணக்காரர் என்பதற்காக அண்டி உறவாட வந்தவர்களையும் இனம் கண்டு ஒதுக்கியிருக்கிறார்; ஒதுங்கியுமிருக்கிறார்.

அவருடைய கண்களில், ஆழ்ந்த ஒருவகைக் காந்த சக்தி இருந்தது. அவரிடத்திலே தொழில் விஷயமாகச் சண்டை பிடிக்கவேண்டுமென வெறுப்புணர்ச்சியுடன் வேகமாகச் சென்றவர்கள் கூட, அவரால் வசீகரிக்கப் பட்டுப் பேசாது

திரும்பி விடுவார்களாம். கருமுத்துவிடம்சென்ற ஒரு தொழி லதிபர், "He will hypnotise me and make me lose my reason" என்றாராம்.

## நீர் மேல் எழுத்து :

கருமுத்து, தொண்டு வாழ்வில், தொழில் உலகில், கல்விக் களத்தில் சமூக நிலையில் எனத்தன் 81 ஆண்டு வாழ்வில் எண்ணற்றவர்களுடன் கலந்து பழகும் வாய்ப் பினைப் பெற்றிருந்தார். இவ்வாறு வாழ்வில் பழகக் கிட்டும் வாய்ப்புக்களையெல்லாம் நீர்க்கோடு போல முதற் சந்திப் போடு முடித்துவிடாமல், அவற்றைச் சிலை எழுத்தாகச் சிந்தித்துப் போற்றியமையே தியாகராசரின் தனிச் சிறப்பு.

கொழும்பில், இளமைக் காலத்தில் கொண்ட அறிமுகங் களைப் பன்மானும் போற்றி வந்தார். இங்கே அரசியல் வாழ்வில் காந்தியடிகள் தொட்டு, அறிஞர் அண்ணா வரை கொண்ட தொடர்புகளை இலட்சிய பூர்வமாக மதித்து வந்தார். தொழில் உலகில் பெரியவர்களையும் சிறியவர் களையும் ஒப்ப மதித்து வழியமைப்புப் பெற்றதோடு, பிறர்க்குப் பயனும் தந்தார். இலக்கிய உலகில், புலவர் பெருமக்களோடு உவப்பத் தலைக் கூடி உள்ளப் பிரிதலுக்கு இலக்கணமாக விளங்கினார்.

நம்மிடத்துக்குச் சில நண்பர்கள் வரும்போது அவர் களுடன் கலகலப்பும் சிரிப்பும் கூடவே வரும். வேறு சில அன்பர்கள் வரும்போது கடுகடுப்பும் எரிச்சலும் உடன்வந்தே தீரும். தியாகராசர் எங்குச் சென்றாலும் அவருடன் ஒரு பெருந்தன்மையும் பெருமிதமும் கூடவருவதைப் பலரும் கண்டுணர்ந்திருக்கிறார்கள்.

## வரலாறு தெரியாதா?

''செக்கோசுலோவேகியாவில் தங்கள் மொழியைப் புகுத்த முயன்ற செர்மானியர் படுதோல்வியுற்றனர். யூகோசுலேவியாவில் மூன்று அரசுமொழிகள் இருக்கின்றன. அவ்வாறே கனடா, பெல்சியம் ஒவ்வொன்றிலும் இரண்டு மொழிகள் உண்டு. ருசியாவில் கூட ஆறு மொழிக்கு இடம் கொடுத்திருக்கிறார்கள். அந்தப் பொறுமைகூட நமக்கு இல்லையே? சிறுநாடுகள் மூன்று, நான்கு மொழிகளை ஏற்றுக்கொண்டிருக்கும் பொழுது பெருநாடாகிய இந்தியா பத்துப் பன்னிரண்டு மொழிகளை அரசியல் மொழியாக்கா கொள்வது மிகையாகாது. சுவிட்சர்லாந்து போன்ற நாட்டில் பெரும்பான்மை மொழி பேசுவோர், சிறுபான்மை யோர் இடத்து அன்பும் கண்ணியமும் மதிப்பும் வைத்துள்ள தால், சுவிட்சர்லாந்தில் மக்கள் ஒன்றுபட்டு ஒற்றுமையாக வாழ்கிறார்கள். அவ்வாறு இந்தியாவிலும் எல்லா வட்டார மொழிகளையும் முறையாகப் பேரரசின் மொழியாக்கா விட்டால், பிளவு ஏற்பட்டு நாடு சின்னாபின்னமாவது திண்ணம். நாடு அடிமையுற்றிருந்தபோது பிறந்து வளர்ந்த இப்போதுள்ள தலைமுறை இதை ஒருவாறு பொறுத்தாலும் பின்தலைமுறை இதை ஒருபோதும் ஏற்றுக் கொள்ளாது. சீறி எழுந்து செந்நீர் பெருக்கி ஓடச் செய்யும் என்பதை தலைவர்கள் நினைவிற் கொள்ளவேண்டும்'' (புலவரேறு வரதநஞ்சைய பிள்ளைக்குப் பொன்னாடை போர்த்து விழாத் தலைமையுரை - சேலம் - 1956)

''வளம் பெறாத கதம்ப மொழியாகிய இந்தியைத் தேசிய மொழி என்று கூறிக்கொண்டு, நேர்மையற்ற முறையிலே அதை நம்மீது திணிக்க வடநாட்டினர் சூழ்ச்சி

பல புரிந்துவருவது மிகவும் வருந்தத்தக்கது. நாட்டில் வழங்கும் 14 வட்டார மொழிகளும் தேசீய மொழிகளே என்ற உண்மையை இவர்கள் இன்னும் உணரவில்லை. பல மொழி வழங்கும் நாடு ஒரு குறிப்பிட்ட மொழியைப் பொது மொழியாகக் கொள்வதினால் ஒற்றுமையுற்று வாழும் என்பது வரலாற்றில் காணாத புதுமை.'' (தென் திருவிதாங்கூர் இந்துக் கல்லூரி விழாப் பேருரை - நாகர் கோயில் - 1956)

## ஓரவஞ்சகம் ஏன் ?

"The Union Government which is expected to treat all languages alike, is partial to Hindi and discriminatory in spending large amounts on its development and piopaganda. Linguistic troubles all over India clearly prove that this policy is suicidal. When a medicine reacts badly on a patient, the wise doctor changes the treatment. Why should not men at the helm of affairs, with some respect for l nguages other than their own, endeavour to establish friendly linguistic r lations between the North and the South and between State and State? ... The exaltation and imposition of Hindi has arisen out of a single casting vote of the Chairman of the Constituent Assembly. As one interested in Hindi, it would have been fair and proper if he had abstained from voting in our equally divided house" (Founder's Commemoration Day Address-Annamalai University, 1960)

## குறுகிய மனப்பான்மையா ?

"தேசீய மொழிக் கொள்கையால் நாட்டிற்கு விளைந் திருக்கும் தீமை அளவிடற்பாலதன்று. அது ஒற்றுமையைச் சீர்

குலைத்து கொடிய பகைமையை உண்டு பண்ணியிருக்கிறது. ஆந்திர மராட்டிய குசராத் வங்க அசாம் ஆகிய நாடுகள் மொழியுரிமைக்காக இரத்தம் சிந்தியிருக்கின்றன. ஐக்கிய நாட்டுச் சங்கத்தில், அதன் உறுப்புக்களான ஒவ்வொரு நாட்டு மொழியும் ஏற்றுக்கொள்ளப்பட்டிருக்கிறது. தமது மொழியைப் பிறர்மேல் கட்டாயமாகச் சுமத்தும் இவர்கள் மற்றவரை மாகாணப் பற்றும் குறுகிய மனப்பான்மையும் உடையவர்கள் எனக் குற்றம் கூறுவது வியப்பாகும்.'' (தமிழ் மன்ற விழாத் தலைமையுரை - மணப்பாறை - 1967)

'' ஒரே எழுத்தாலும் மொழியாலும் ஒற்றுமை ஏற்படும் என்று எண்ணுவது, 'ஏதம் கொண்டு ஊதியம் போக' விடும் பேதமையாகும். ஒரே எழுத்து, ஒரேமொழி வழங்கும் உத்தரப்பிரதேசத்திலும் மேலை நாடுகளிலும் ஒற்றுமை நிலவுவதைக் காண்கிலோம். ஆகவே, ஏனோ, இப் பயனில் முயற்சி?'' (சங்க இலக்கிய வெளியீட்டு நிறைவு விழா - சென்னை, 1961)

'' மாநிலங்களுக்கிடையே தொடர்புக்கு ஒரு பொதுமொழி வேண்டுமாயின், அதற்கு ஆங்கிலமே ஏற்றதாகும். உலகத் தோடு உறவு கொள்ளவும், பெருகி வரும் விஞ்ஞான அறிவைப் பெறவும் அது நன்கு உதவும். ஆகவே, ஆங்கிலத்தின் இடத்தில் இந்தியை ஏற்றாமல் தாய் மொழியை ஏற்றி, அவ் ஆங்கிலத்தை இரண்டாவது மொழி யாக ஏற்றுக் கொள்ளல் பயனுடைத்தாகும்'' (அரசினர் கல்லூரி நாள் விழாத்தலைமை உரை - கோவை - 1952)

'' எனவே, நம் தாய் மொழியாகிய தமிழை இந்தியைப் போல அரசியல் மொழிகளில் ஒன்றாக உயர்த்துதற்குக் கிளர்ச்சி செய்தல் நமது முதற்பெருங்கடனாகும். அரசியல்

மொழியானால் ஒழியத் தமிழோ தமிழரோ முன்னேற்றம் பெறமுடியாது.'' (தமிழ்க் காப்புக்கழகம் - தலைமை உரை மதுரை - 1963)

**ஆதிக்க நாட்டமா?**

இவ்வாறு தியாகராசர் பேசிய கூட்டங்கள் அனைத்திலும் இந்தி எதிர்ப்பே உயிரோட்டமாக அமைந்தது. அது தமிழ் நாட்டின் நினைவோட்டத்திலும் செயலோட்டத்திலும் புதிய அலைகளை வீசச் செய்து வந்தது. 1962இல் மூண்ட இந்திய - சீனப்போர்க் காலத்தே மடங்கிக் கிடந்ததுபோய், நேரு பெருமகனார் காலமான பின்னர் மீண்டும் இந்தி ஆதிக்க வெறி தலை தூக்கிற்று.

'' இந்திக்குத் தமிழ் நாட்டில் ஆதிக்கமாம் - நீங்கள்
எல்லோரும் வாருங்கள் நாட்டினரே''

என 1938 இலேயே புரட்சிக் கவிஞர் பாரதிதாசன் முழக்கிய சங்கொலி, 30 ஆண்டுகள் கழித்து மீண்டும் எதிரொலி கிளப்பியது. 'தேசிய மொழி' என்ற நிலை போய் 'ஆட்சி மொழி' என்ற அந்தஸ்துப் பெற முயன்று தடுமாறி 'தொடர்பு மொழி' என இந்தி வளைந்து, நெளிந்து வந்து கொண்டிருந்தது. இந்தி பேசாதவர் விரும்பும் வரை ஆங்கிலம் ஆட்சி மொழியாக நீடிக்கும் என நேருஜி தந்த உறுதிமொழி அவர் மறைந்த பின் காற்றில் பறக்கவிடப் பட்டது, இதனால் தமிழகத்தில் மீண்டும் கொந்தளிப்பு ஏற்பட்டது. ராசாசி முதன் முதலில் கட்டாய இந்தியைத் திணிக்க முயன்ற போது அதை எதிர்த்துப் போர்க்களத்தில் குதித்தமையால், முழு அரசியல் வாதியாக்கப்பட்ட அண்ணா, எழுச்சி கொண்ட தமிழ் காக்கும் தளபதியாகிவிட்டார். அன்று எதிர்த்த ராசாசி இன்று அண்ணாவோடு ஓரணியில் நிற்க வந்துவிட்டார். சென்னையில் மாணவர்கள், கோட்டையை நோக்கி 17—1—1964இல் பெரியதோர் ஊர்வலமாகச் சென்றனர்; தடியடி தாங்கினர்.

## ஜி. டி. பிர்லா :

இராமநாதபுரம் சேதுபதி மன்னர், புதுக்கோட்டை மன்னர் ஆகியோரிடம் பெருமதிப்புடையவர். பிர்லா பல முறை விருந்தினராய் வந்து தங்கியுள்ளார். சேதுபதி மன்னரின் தமிழ்த் தொண்டுகளை எப்போதும் போற்றி யுரைப்பார். தொழிலதிபர்களாக வடக்கிலும் தெற்கிலும் வாழ்ந்த அனைவரோடும் அவர்க்குத் தொடர்பு இருந்தது. ஜி. டி. பிர்லா, கஸ்தூரிபாய் லால்பாய், விக்ரம் சாராபாய் போன்றவர்கள் தியாகராசரின் உழைப்பினையும் சாதனையும் வியந்து நட்புப் பூண்டவர்கள். "தென்னாட்டின் தொழிற் பிரமுகர்களோடெல்லாம் அவர்க்கு ஆழ்ந்த நேயம் உண்டு. அவர்களுடன் அவ்வப்போது தொழில் சம்பந்தமான முக்கிய விஷயங்களைக் கலந்தாலோசிப்பார்கள்," என்கிறார், ராம்கோ நிறுவனங்களின் தலைவர் திரு. ராமசுப்பிரமணிய ராஜா.

## புலவர் கூட்டு:

தமிழறிஞர்களுடன் அவர் அளவளாவியிருந்தமைக்கு அளவேயில்லை. பண்டிதமணி, நாவலர் பாரதியார், கி. ஆ. பெ., ராய. சொ. எனப் பேரறிஞர்களிடம் யாத்த நண்பினராக, இனிய பண்பாளரராகப் பழகினார். அன்னவர்க் கெல்லாம் தம் மாளிகையில் விருந்து படைத்து மகிழ்வார். அவர்கள் வழியாகத் தெள்ளுற்ற தமிழமுதின் சுவைகண்டு, இங்கமரர் சிறப்புக்கண்டார். வாய்ப்புக்கிட்டிய போதெல்லாம் அவர்கட்கு விழா எடுத்துப் பொன்னாடை போர்த்தி நிற்பார்.

## பிரமுகர் உறவு :

தனது நகரத்தார் சமூகப் பெரியவர்களிடம் அவருக்குப் பெருமதிப்பு உண்டு. ராஜாசர்., ஏ.எம்.எம்., எம்.சிடி.எம்., அழகப்பர், தேசத் தொண்டர் சா. கணேசன் ஆகியோரிட

மெல்லாம் நல்லுறவும் பெருமையும் கொள்வார். தம் வளர்ச்சிக் காலத்தே உதவிய எ. மு., ஒ. ஏ. பி. ஆர்எம். முதலியோரை நெஞ்சாரப் போற்றுவார். கால மாற்றங்கள் காரணமாக, நகரத்தார் சமூகம் நலிவிற்கு ஆட்படுவதை முன்னுணர்ந்து, நகரத்தார் சங்கக் கூட்டங்களில் பேசும் போதெல்லாம் வடநாட்டுப் பார்சி மக்களைப் போல, குசராத்திகளைப் போலத் தனவணிகர்களும் கூடித் தொழில் செய்ய வேண்டுமென்று வற்புறுத்துவார். தன் சமூகத்தவரின் உயர்வுக்குத் தியாகராசர் இன்னும் தாராளமாக உதவியிருக் கலாம், எனும் மனக்குறை சிலரிடம் இருந்தாலும், செல்வர்க் கழகு செழுங்கிளை தாங்குதல் என்பதற்காக அளவின்றிச் செய்ய அவர் முற்பட்டதில்லை. தன்னை நாடி வந்தோரின் தேவையினை அறிந்து, அளவோடு உதவிச் செய்யப் பின் னிட்டதில்லை. ஓரளவு சமநிலைப் பெருமையுடைய குடும்பங் களமைந்த, வாழ்ந்தே சிறந்த தனவணிக சமூகம் போன்ற தொரு கட்டமைப்பில் உதவி தருவதும் எளிதில்லை; உதவி பெறுவதும் இயல்பில்லை. இவருக்கு நான் என்ன மட்டமா? எனும் வீராய்ப்பு ஏற்பட்டு விட்டால், வசதி உடையவர்களைக் கூட வாய்ப்பு நோக்கிப் பயன்படுத்திக் கொள்ளப் பிறரால் முடிவதில்லை.

## உயர வேண்டும் :

என்றாலும் தியாகராசர், தான் அமைத்த அறக் கட்டளை வழியாகவும், தொழிலமைப்புக்கள் வழியாகவும் உதவி கோரிய இளைஞர்கட்கெல்லாம் ஊக்கம் அளித்தே வந்தார். மதுரை நகரத்தார்கள் சங்கத் தலைவராயமைந்து, சங்கக் கட்டிடம் பிறர் பிடியில் இருந்தபோது அதை நகரத்தார் பொறுப்பில் கொண்டுவர 25 ஆண்டுகட்கு முன்னரே முயற்சி மேற்கொண்டு அதைப் பயனுள்ள தங்கு

மிடமாக்கத் திட்டமிட்டுத் தந்தார்.[1] வறிய குடும்பத்தில் பிறந்து பணத்திற்கு வழியில்லாமல் இருக்கும் பெண்களை வாழ வைப்பதற்காகத் திருமண நிதியொன்று திரட்ட வேண்டும் என்றார். பலருக்கு வேலை வாய்ப்பளிக்க முன் வந்தார்.[2]

### தொகுக்கவேண்டும் :

ஓரிருவரின் உதவியால் மட்டுமே ஒரு சமூகத்தைத் தொடர்ந்து மேம்படுத்தி விட முயல்வது இயல்பன்று. அதற்கு அனைவரின் ஒத்துழைப்பும் வேண்டும் என்று வற்புறுத்துவார். ''இதற்கு ஒரு வழி ஆங்காங்குச் சிதறிக் கிடக்கும் நகரத்தார் களின் கோயில், சத்திரம், தருமப் பெரும் பணங்களை மீட்டு ஒன்று சேர்த்து, ஒரு குழுவின் மேற்பார்வையின் கீழ்க் கொண்டு வந்து பயன்படுத்தலேயாகும்.'' (மதுரை நகரத்தார் சங்க ஆண்டுவிழாத் தலைமையுரை - 1961)

''மாண்புற அமைத்த மாளிகைகளையும் அருவிலை அணிகளையும் அரிதின் தொகுத்த கலங்களையும் உருக்கி வைத்து விற்றுண்டுவாழும் அளவுக்கு வறுமையடைந் துள்ளோம். நம் சங்கத்தின் கிளைகளை நகரத்தார் ஊர் தோறும் தோற்றுவித்து ஏழைச் சிறுவர் கல்விக்கு உதவுதல், மகளிர்க்கு மணம் செய்வித்தல், ஆகிய பணிகளையும் முன்

---

1. 1956இல் மதுரை நகரத்தார் சங்க நிறுவனத் தலைவர் ஆனார். அரிமழம் திரு. செ. செல்லப்பனும், ஆ. தெக்கூர், திரு. எம். சொக்கலிங்கமும் செயலர்களாகப் பணியாற்றினர்.

2. ''நம் சங்கத்திலிருந்து இதுவரை 350 பேர்களுக்கு மேல் வேலை வாங்கிக் கொடுத்திருக்கிறோம். தம் நிறுவனங்களில் பணிபுரிய உதவிய மீனாட்சி ஆலை, சேலம் ராஜேந்திரா ஆலை, பாங்க் ஆப் மதுரை, எஸ்.பி.எம். மெடிக்கல் மார்ட் முதலிய நிறுவனங்களின் உரிமையாளர்கட்கு நன்றி'' - மதுரை நகரத்தார் சங்க 6ஆம் ஆண்டறிக்கை.

போல் ஒற்றுமை, கட்டுப்பாடு, ஒப்புரவு, தொண்டு ஆகிய நன்னோக்கங்களையும் நிறைவேற்ற வேண்டும்.'' (தலைமை யுரை - 1962)

### சிக்கனம் வேண்டும் :

''நம் செல்வர்கள், தாம் அரிதின் முயன்று ஈட்டிய பொருளைப் புதுமை, திருமணம், சாந்தி முதலிய விழாக் களில் வீண் பெருமைக்காவும் வெற்று ஆரவாரத்திற்காகவும் அளவறியாது தகுதிக்கு மேல் வெறிகொண்டு, பெருஞ் செலவு செய்கின்றனர். நாம்பெற்ற செல்வத்தை வீணாக் காமலும் பயனின்றி முடக்காமலும் நல்லறச் செயல்களில் ஈடுபடுத்தி இன்புற்றுப் புகழொடு வாழ்தலே சிறப்புடைத் தாம். (தலைமையுரை 1963)

### ஒன்றுபடவேண்டும் :

''நம் நகரத்தார் மாணவரிடையே தொடர்பையும் ஒற்றுமையையும் வளர்க்கவும் அவர்கட்கு உதவி புரியவும், நம் அன்னையாம் தமிழ்மொழிக்குத் தொண்டு செய்யவும் தமிழ்நாட்டின் தலை நகரில் தோற்றுவித்துள்ள இச்சங்கம் புகழ்ந்து பாராட்டற்குரியது.'' எனத் தம் கருத்துப்படி சென்னையில் துவக்கப்பட்ட சங்கத்தினை (1963) வாழ்த் தினார்.

### சீர்பெறவேண்டும் :

''பர்மா, செய்கோன், இலங்கை, மலேயா ஆகிய நாடுகளில் பெருகிப் பயனின்றிக் குவிந்து கிடக்கும் தரும நிதிகளையும் பொதுநிதிகளையும் இந்தியப் பேரரசின் துணை நாடி, கொண்டுவருதற்கு உரிய முயற்சிகளை

**காந்தியும் ராசாசியும் :**

அரசியல் துறையில் காந்தியடிகளைத்தன் ஞான குருவாகவே அவர் ஏற்றுக் கொண்டார், ஆனால் காந்தி யடிகளின் மொழிக்கொள்கை, மதுவிலக்கு, கதர்க்கொள்கை ஆகியவற்றை உடன்படாமல் அவரோடு பலதடவை எதிர்வாதம் செய்திருக்கிறார். இராசாசியின் திறமையில் எப்போதும் அவருக்குப் பெருமதிப்பு உண்டு. ''வலிமையும் பெருமையும் பொருந்திய உங்கள் எழுத்தாணியால் ஒருவரியில் இந்த வீண்சண்டையை ஒழிக்கும் திறமையும் உதாரகுணமும் உண்டு''என அவரைப்போற்றி1939 இலேயே தியாகராசர் எழுதினார். பின்னர் சுதந்திராக் கட்சியில் தியாகராசரைச் சேர்க்கக் கருதி ராசாசி அவருடைய இல்லத்திற்கு வருகை தந்தபோது மரியாதையை விடாமலே அவரிடம் மறுத்து விட்டார்.

**பெரியார் :**

பெரியார் ஈவேராவிடம் அவருக்குப் பேரீடுபாடு இருந்தது. ''பெரியார் அவர்களோடு பழகும் வாய்ப்பும் பேறும் எனக்கு இளமை தொட்டே உண்டு. இருவரும் காங்கிரசில் ஈடுபட்டு ஒருங்கே பணியாற்றியுள்ளோம். இந்தி எதிர்ப்பு இயக்கத்தில் இணைந்து நின்று வெற்றிகண்டோம். நாங்கள் இருவரும் கூடும்போதெல்லாம் கடவுளைப்பற்றித் தருக்கித்து இன்புறுவது வழக்கம். பெரியார் அவர்கள் பொதுவாக நாட்டிற்கும் சிறப்பாகத் தமிழகத்துக்கும் செய்துள்ள தொண்டும் பணியும் இணையற்றவை. உள்ளத் தெழுந்த கருத்துக்களை ஒளிவு மறைவின்றி எடுத்தியம்பும் நெஞ்சுரம் பெற்றவர். ''கூற்று உடன்று மேல்வரினும் கொண்ட கொள்கையை விடாது நின்று உரைக்கும் வீரர்''. அரசியல் துறையில், வரும் பொருளை முன்னுணர்ந்து

சொல்லும் மதிநுட்பம் வாய்ந்தவர். மக்களின் பணியில் செலுத்தும் ஆற்றல் அனைத்தையும் அரசியலில் செல விடுவாராயின், நாட்டின் முதலமைச்சராய் விளங்கும் பெருமையைப் பெற்றிருப்பார்.'' (மணப்பாறை, தமிழ் மன்றப் பேருரை - 1961) அனுபவப் பழமான பெரியாரிடம் அவ்வப்போது தியாகாரசர் அறிவுரைகள் பெற்றுக் கொள்வார்.

## ஓமாந்தூரார் :

தமிழ்நாட்டின் முதலமைச்சர்களாயிருந்த ஓமாந்தூராரின் எளிமையும் காமராசரின் செயல் திறமும் தியாகராசரின் நெஞ்சங் கவர்ந்தவை. திரு. சென்னியப்ப முதலியார் ஓமாந்தூராரின் நட்பினைக் கூட்டுவித்தார். வள்ளலார் வழி இருவரையும் ஒன்றாயிணைத்தது. ''இவர் ஒழுக்கம், நேர்மை, உறுதி, அஞ்சாமை முதலிய அரும் பண்புகளைக் கொண்டவர். இவ்விழுமிய பண்புகளே, வேளாண்மை செய்து வாழ்ந்த இப்பெரியாரை மாநில முதலமைச்சர் பதவிக்கு உயர்த்தின'' என வடலூர் விழாவில் பாராட்டிப் பேசினார் தியாகராசர்.

தியாகராசர் அறக் கட்டளைக் குழுவில் ஓமாந்தூரார் உறுப்பினராயமைந்து உதவினார்.

## காமராசர் :

கருமவீரர் காமராசருடன் அன்புக்குரிய சகாவாகப் பழகினார். 28—8—54இல் நடேசய்யர் வாசகசாலைத் திறப்புவிழா தலைமை உரையிலேயே பலரறியக் காமராசரை அவர் பாராட்டினார். ''பல் குழுவும் பாழ் செய்யும் உட் பகையும் வேந்தலைக்கும் கொல்குறும்பும் பரவியுள்ள இந் நாளில், தமிழ்நாட்டைக் கட்டியாளுதற்கு இராசாசிக்குப்

பிறகு தக்கார் ஒருவர் இல்லையே என்ற குறையைப் போக்கிய பெருமை நம் காமராசரையே சாரும். அவர் ஆட்சிக்கு வந்ததும் வெறுக்கப்பட்ட புதுக் கல்வித் திட்டத்தை அறவே ஒழித்து மக்கள் உள்ளத்தைக் கொள்ளை கொண்டுள்ளார்.'' 15—9—58இல் பரவை, மீனாட்சி குடியிருப்பினைக் காமராசர் திறக்க வந்த போது அவரை வரவேற்கையில், ''தமிழ் நாட்டில் முதல் அமைச்சர் காமராசரின் பெருமை பேசப்படாத நாளில்லை. புகழ் பரவாத இடமில்லை. இவர் தன்னலம் பேணாத் தகைமையாளர், எளியவர்க்கு இரங்கும் ஏழைபங்காளர். பல்கலைக் கழகத்தில் படித்துப் பட்டம் பெற்றவர்தாம் நாடாள முடியும் என்று இருந்த பழங்கருத்தை அறவே போக்கி, இயற்கை அறிவுடையாரும் ஆட்சிப் பொறுப்பு ஏற்று இனிது நடத்தலாம் என்பதை உலகுக்குக்காட்டிய பெருமை, அரசியல் வரலாற்றிலே அக்பருக்குப் பின், காமராசரையே சாரும்'' எனப் போற்றினார், 1955 இந்தி எதிர்ப்புப் போர்ச் சமயத்தே அப்போதைய அ. இ. காங்கிரசுத்தலைவரான காமராசர் மதுரை வந்திருந்தார். தியாகராசரும் காமராசரும் சந்தித்தனர். ''சந்திப்பு இனிமையாக இல்லை. பலத்த கருத்து வேறுபாட்டுடன் இருவரும் பிரிய நேர்ந்தது. அதற்குப் பின்னர் இருவரும் பல ஆண்டுகள் சந்திக்க வாய்ப்பில்லை. எட்டு ஆண்டுகட்குப் பின்னர் கருமுத்து சுந்தரம் செட்டியார் சாவிற்குத் துக்கம் விசாரிக்கத் தலைவர் காமராசர் விரும்பினார். அப்போது கருமுத்து தியாகராசர் இருதய நோயினால் பாதிக்கப்பட்டுப் படுக்கையில்? இருந்தார். என்றாலும். மாடியிலிருந்து படுக்கையை விட்டிறங்கி விரைந்து வந்து காமராசரை வழியிலேயே வரவேற்று நீங்கள் வந்திருக்கும் போது மேலே இருப்பது மரியாதையல்ல'' என்றார் திரு. செட்டியார். [1]

---

1. குறிஞ்சி, ப. நெடுமாறன் - கட்டுரை.

## ஜனாதிபதி கிரி :

தொழிலாளர் நல ஆர்வலரும், முன்னாள் ஜனாதி பதியுமான வி. வி. கிரி இவருடைய உயிர் நண்பர்களுள் ஒருவர். ''நாங்கள் இருவரும் அரசியல் எதிரிகளாக அறிமுகமானோம். அப்புறம் இனிய நண்பர்களாகி விட்டோம். அவர் ஆலை உரிமை வழக்கொன்றில் நியா யத்தைப் பெற சுப்ரீம் கோர்ட் வரை சென்றவர். எதிலும் செயல்திறம் உடையவர். இந் நாட்டில் தொழிலுக்கும் கல்விக்கும் அரும் பணியாற்றியவர். இவ்வகையில் ஈடாக இன்னொருவரைச் சொசல்வது கடினம். என் நினைவில் எப்போதும் இருக்கும் சிறந்த நண்பர் என 5-5-1980 அன்று சென்னையில் பேட்டி கண்டபோது திரு. கிரி நினைவு கூர்ந்தார். தியாகராசர் திரு. கிரியின் பலதுறை அறிவை ஆக்க உணர்வை எப்போதும் மதித்தொழுகுவார். இருவரும் 40 ஆண்டுகட்கு மேல் தோழமை பூண்டிருந்தனர்.

## ஜி. டி. நாயுடு :

கோவையைத் தொழில் நகராக உருவாக்க முற்பட் டோரில், ஜி. டி. நாயுடு, ஜி. குப்புசாமி நாயுடு, பி. எஸ். கோவிந்தசாமி நாயுடு, எல். ஆர். ஜி. நாயுடு ஆகியோர் குறிப்பிடத் தக்கவர்கள். இவர்களுள் கோவையைச் சேர்ந்த திரு. ஆர். கே. சண்முகம், மேதை ஜி. டி. நாயுடு, திரு. சி. சுப்பிரமணியம் ஆகியோரும், டாக்டர் ஏ. எல். முதலியார் போன்றோரும் தியாகராசரின் மதிப்புக்குரிய நண்பர்களாவர். ஆர்.கே. எஸ்ஸிடம் அவருக்கு அளவிறந்த மரியாதை உண்டு திரு. ஜி. டி. நாயுடுவிடம் வரம்பற்ற வியப்பு உண்டு. ஏ.எல். முதலியாரிடம் எல்லையற்ற ஈடுபாடு உண்டு. திரு. சி. சுப்பிர மணியத்திடம் மாறாத அபிமானமுண்டு, 1968இல் ஜி. டி. நாயுடுவின் 75ஆம் பிறந்த நாள் விழாவில், அவருக்குப் பொன்னாடை போர்த்தி மகிழ்ந்தார் தியாகராசர்.

இனியும் காலம் தாழ்த்தாது மேற்கொள்ள வேண்டும். புரட்சிப் பெரும் புயலால் உலகச் சூழ்நிலை மாறிவரும் இந்நாளில் அதற்கு ஒப்ப முன்னோர் மேற்கொண்ட அடக்கம், செட்டு, சிக்கனம் ஆகியவற்றைக் கடைப் பிடித்தல் இன்றியமையாததாகும் (தலைமையுரை - 1965)

தியாகராசரைப் போலத் தன் சமூக வளர்ச்சிக்கான வழி களைத் தொடர்ந்து இவ்வாறு வலியுறுத்தி வந்ததொரு தொண்டரைச் சுட்டிக் காட்டவியலாது. தானும் சமூகத் தடாகத்தின் ஓர் அங்கம் என்பதனை உணர்ந்து, சிந்தனைத் துளிகளைச் சிதறினார். அவை சிறு வளையமாய், பெரிய வட்ட மாய் விரிந்து பரவின. தியாகராசர் தாம் பழகிய நண்பர் களிடமும் சரி, தாம் வாழ்ந்த சமூகத்திலும் சரி, இலாபமெனும் சூடுபட ஏறும் பாதரசமானி போலவன்றி, ஈர்ப்பின் தன்மைக் கேற்ப நெருங்கும் இரும்பாய்க், காந்தமாய் இலங்கினார்.



# திருமணமும் நிறைநலமும்: 16

''பதினாறும் பெற்றுப்
பெருவாழ்வு பெறுக'
— மணவாழ்த்து

## வீட்டிற்கொரு தேவதை :

ஒவ்வொரு வீட்டிலும் ஒரு தேவதை இருக்கிறது. அந்தத் தேவதை யார் தெரியுமா? அந்த வீட்டின் தாய் தான். ''பக்தியுணர்வும் பாசமும் உடைய தாயைவிட இனிமையானது வேறெதுவும் இல்லை'' என்றார் மார்ட்டின் லூதர். ''அன்னையின் இதயம் எப்போதும் அவள்பெற்ற பிள்ளைகளோடுதான்'' என்பது செர்மானியப் பழமொழி.

ஒவ்வொரு மனிதனின் வளர்ச்சியிலும் அவனுடைய வாழ்க்கைத் துணைவிக்கும் உரியதொரு பங்கு உண்டு. காந்தியடிகள் போல, முற்றிலும் பொதுவாழ்வில் முனைந் திருந்தாலும் சரி, பெர்ட்ரண்ட்ரஸலைப்போல, முழுவதும் சிந்தனை வாழ்வில் ஈடுபட்டிருந்தாலும் சரி, அவரவர் வாழ்க்கையில் மனைவியர்க்கும் சிறப்பிடம் உண்டு.

நாளெல்லாம் நாட்டுத் தொழில் பற்றியே கவனமும் கவலையும் கொண்டிருந்த தியாகராசர்க்குப் பொழுதெல்லாம் வீட்டை நினைக்க வாய்ப்பிருந்த தில்லை, அப்போதெல் லாம் வீட்டுப் பொறுப்புக்களைப் புன்முறுவலோடு ஏற்றுச் சுமக்க வந்தமைந்தார் சாலி ஆச்சி!

## என்னதவம் செய்தேன் :

தியாகராசர்க்கு 1910இல் முதல் திருமணமாயிற்று. ஆ. தெற்கூர் கா. மு. மு. அவர்களின் புதல்வி விசாலாட்சி

ஆச்சி மனையறம் சிறக்க வந்தார். இளமையிலேயே திருமணம் பூண்ட தியாகராசர், இலங்கைப் பயிற்சிகளை முடித்துத் தாயகம் திரும்பிய பின்னர், சொந்த ஊரிலேயே சில ஆண்டுகள் தங்கியிருந்தார். அவர் மீனாட்சி ஆலைப் பொறுப்பேற்ற 1924 வரை இல்லறப் படகு இயல்பாகவே சென்றது. அதன் பின்னர் ஒவ்வொரு வினாடியும் அவர் தொழில் உலகிலேயே எதிர் நீச்சலிட்டு வந்த போதெல்லாம் விசாலாட்சி ஆச்சியே ஆறுதலாய் அருந்துணையாய் இருந்தார். மீனாட்சி, சுந்தரம், மாணிக்கவாசகம், சரஸ்வதி, ருக்மிணி எனும் மக்களைப் பெற்றுப் பொங்கல் மனைபோல் எப்போதும் பொலிவுடன் விளங்கினார். தன் கணவர் வணிகக் காரணங்களுக்காக வெளியூர் செல்ல நேர்ந்தபோதெல்லாம்...

'' கண்ணையிமை யிரண்டும் காப்பது போல் என் குடும்பம்
வண்ணமுறக்காத்து வாய்முணுத்தல் கண்டறியாது,
வீதி பெருக்கி, வீடு சுத்தமாக்கி, மக்களுக்கு வாத்தியாய்
வளர்ப்புத்தாயாய், வைத்தியனாய், ஒக்க நயம்
காட்டியதால்
இங்கிவளை நான்பெறவே என்ன தவம் செய்து
விட்டேன் ... ''

எனத் தியாகராசர், பாரதியார் போலவே பாடி மகிழ்ந் திருப்பார்.

## சுந்தரச் சொற்கள் :

'' உயர் பண்பிற்கெல்லாம் உறைவிடமாக இருந்தவர்கள் எம் அன்னை. மறந்தும் கடுஞ்சொல் உரைக்கமாட்டார்கள். இன்னா செய்தார்க்கும் இனியவே செய்பவர்கள். செல் விருந்தோம்பி வருவிருந்து பார்த்திருக்கும் *சீர்சால்* பண்பினர். சினமே இன்றி இனிமையாய்ப் பழகும் இயல்பினர்'' எனத்தன் அன்னையைப் போற்றினார் அருமை மைந்தர்

கருமுத்து சுந்தரம். அவர் ஒருதடவை கார் விபத்தில் சிக்குண்டபோது, ஆறு மாதம் கோவையிலேயே வீட்டை யெல்லாம் மறந்திருந்து தம் புதல்வரைக் கண்ணினுள் மணி போல் காத்தார்கள்.

## மணிவாசக மதிப்பீடு :

'' தாயும் தந்தையும் செல்வமும் பண்பும் உள்ள குடும் பத்தில் தோன்றினால் அது மிகவும் சிறப்புடையதாகும். தாயின் பிறந்த ஊரும், புகுந்த ஊரும் ஒரே இடமாக இருப்பின், அது பொன்மலர் நாற்றம் உடையது போலாகும். அந்தச் சிறப்பு எம் அன்னைக்கு உரியதொன்றாகும் '' என்று நினைவு கூர்கிறார் மற்றொரு புதல்வர் கருமுத்து மாணிக்கவாசகம்.

## மீனாட்சி உரை :

'' எங்கள் கலைத்தந்தை அவர்களைக் கணவராக அடைந்து கருணை மழையாக வாழ்ந்து, காலவெள்ளத்தால் அழியாத புகழினைப் பெற்றுள்ள எங்கள் அன்னை தெய்வ பக்தி உள்ளவர்கள். பழகுவதற்கு இனியவர்கள். யாரிடத் திலும் கோபமாகவே பேசமாட்டார்கள். செல்வவளம் பெரும் பாலாரைச் செருக்கடையச் செய்யும், மிகச் சிலரையே பனிதப் பண்புடன் நடந்துகொள்ளச் செய்யும். அம்மிகச் சிலருள் எங்கள் அன்னையும் ஒருவர், '' என மூத்த புதல்வி திருமதி மீனாட்சி சொக்கலிங்கம் ஆச்சி பெருமிதப் படுவார்.

## சரசுவதி புகழ் :

'' என் அன்னை ஆயிரமாயிரம் தொலைவு சென்று நாடுகள் பார்க்க நாட்டம் கொண்டதில்லை. ஆனால் உலக நடையறிந்து ஒப்புரவு செய்வதில் ஒருபோதும் பின்னிட்ட

தில்லை. பிள்ளையார் பெற்றோரைச் சுற்றி உலகத்தைக் கண்டதுபோல், என் தாய், என் தந்தையைச் சுற்றிக்கண் டிருப்பாள். செல்வத்துள் செல்வம் செவிச் செல்வம் நிரம்பப் பெற்றிருந்தார்கள். என்னையும் என் தங்கையையும் இரவில் தன் இரு பக்கங்களிலும் படுக்க வைத்துக் கொண்டு, பழங் கதைகளைச் சொல்லினில் தேனைக் குழைத்து உரைப்பார்கள். எனக்கும் என் அண்ணன்மார்களுக்கும் புலவர் வரதநஞ்சைய பிள்ளை தமிழ்ப் பாடம் சொல்லும்போது, எங்கள் தாயார் உடனிருந்து கேட்பார்கள். நானும் என் தங்கையும் இசை பயிலும்போது கூடவே இருப்பார்கள். தேவாரப் பதிகங் களைப் பெரு விருப்புடன் கேட்பார்கள்'' என்று நினைந்து வியக்கிறார், அடுத்த புதல்வி திருமதி சரசுவதி நாராய்ணன்.

## ருக்மிணி தவம் :

''குழந்தைகள் மனத்தில் பக்தியை வளர்த்தார்கள். எங்கள் அன்னையையும் பல்கலை வல்ல தந்தையையும் ஒரு பல்கலைக் கழகமாகவே கண்டோம். ஆம், நாங்கள் எவ்வாறு வாழவேண்டும் என்பதற்கு அறிவுரைகள் கூறிக் கொண்டிராமல் என் பெற்றோர்கள் வாழ்ந்தே காட்டி னார்கள். இக் குடும்பத்தில் பிறப்பதற்கு என்ன தவஞ் செய்தேனோ என நெஞ்சுருகி நின்றேன்'' என்பார் இளைய புதல்வி திருமதி ருக்மிணி சண்முகம்.

## அலர்மேலுவுக்கு அன்னை :

''தம் வாழ்நாள் முழுதும் அரும்பெறல் கணவனாரின் உயர்வு குறித்தும், மக்கள் பேரன் பேத்தியர் ஆகியோரின் நல்வாழ்வு குறித்தும், சுற்றத்தார் ஊராரின் நலத்தைக் குறித்தும், ஆச்சியவர்களின் தாய்மை நெஞ்சம் இடையறாது எண்ணிக் கொண்டிருந்தது. அவர்களின் அன்புள்ளமே

அன்றும் இன்றும் எங்களை வாழ்வித்து வழி நடத்தி வருகிறது'' என நினைத்து மகிழ்வார் மூத்த மருமகள், திருமதி அலர்மேலு சுந்தரம்.

## சிந்தாமணிக்குக் கோவில் :

''என் மாமியாரவர்கள், ஒரு சிற்றூரிலே பிறந்து கல்வி கேள்விகளிலே சிறந்தவரில்லையெனினும், அவர்கள் நெஞ்சம் தாய் நெஞ்சம் என்றும், அவரது கரங்கள் அண்ணல் மகாத்மா வுக்கு அமுதூட்டிய மணிக்கரங்கள் என்றும்'' தன் மாமியாரைத் தாய்மைப் பண்பின் தனிப் பெருங்கோயிலாகக் காண்கிறார் இளைய மருமகள், திருமதி சிந்தாமணி மாணிக்க வாசகம்.

## மருகர் பாராட்டு :

''சாலி ஆச்சி என்றுமே ஒரே மாதிரி. அவர்கள் பெரு மிதமின்றி இயற்கையாகவே அடக்கம் என்ற அணியைப் பூண்டு எல்லோராலும் போற்றப்படுகிறார்கள்'' என மருமகன் திரு. நாராயணன் செட்டியாரும் பிறரும் போற்றுவர்.

அது சரி. விசாலாட்சி ஆச்சியைப் பற்றி அவரது கணவர் தியாகராசர் என்ன நினைத்தார் என்பது முக்கியமில்லையா? அவர் நினைத்ததையும் சொன்னதையும் அவரது இரண்டாம் வாழ்க்கைத் துணைவியாய் அமையும் பேறுபெற்ற திருமதி ராதா அம்மையாரே சொல்கிறார்.

## கணவர் போற்றல் :

''திருமதி விசாலாட்சி ஆச்சி அவர்களை நேரில் கண்டி லேனாயினும் அவர்களது அன்பையும், மணித்தக்க மாண்பையும், பெருமை சான்ற குணநலங்களையும் கலைத்

தந்தையவர்கள் அவ்வப்போது எடுத்துரைத்துப் பாராட்டக் கேட்டு அறிந்துள்ளேன். ஆச்சி அவர்களின் இயற்கை மதி நுட்பத்தையும், குடும்பத் தலைவர் அவர்கள் காலம் வாய்க்கும் போதெல்லாம் அன்புடன் மகிழ்ந்து நினைந்து உரைப்பர், அவர் மேற்கொண்ட நன்னெறியைக் கடைப் பிடித்துயருமாறு என்னையும் ஊக்குவர்''

இவ்வாறு "Behind every great man, there is a woman" எனும் ஆங்கில மொழிக் கிணங்க, தியாகராசச் செம்மலின் வாழ்க்கைப் பின்னணியாக அமைந்தார் விசாலாட்சி. இவர்கள் 'எழுமையும் ஏமாப்புத்தரும்' மக்கட் செல்வங்களைப் பெற்றனர். மதுரை மீனாட்சி அம்மனிடம் பக்தியுடையவர் ஆகையால் மூத்த மகளுக்கு மீனாட்சி எனப் பெயரிட்டார். தம் தந்தையார் பெயரைக் கூட தம் மக்கட்குச் சூட்டாமல், தமது சைவ சமய ஈடுபாட்டிற்குச் சான்று பகரும் வகையில் சுந்தரம், மாணிக்கவாசகம் எனத் திருமுறை கண்ட பெரியோர்களின் பெயர்களையே வைத்தார்.

## மக்கள் புகழறம் :

கருமுத்து சுந்தரம் (1915-1973) கல்கத்தாவில் பி.காம் பட்டம் பெற்று (அப்போது தமிழ்நாட்டில் வணிகத் துறையில் பட்ட வகுப்பு இல்லை) தம் தந்தையாரைப் போலவே ஆங்கில மொழியில் வீறுபெற்றார். தம் தந்தை யாரின் நிழல் சார்ந்து பழகி, தொழில் துறையில் உதவினார். அறிஞராய், அருள்மிக்கவராய் அன்புத் தாளாளராய்க் கல்வி நிலையங்களைப் புரந்தார். நெற்குப்பை சோம. சொ. அவர்கள் குடுப்பத்தைச்சேர்ந்த அலர்மேலு ஆச்சியைமணந்து 3 ஆண்களையும் 3 பெண்களையும் பெற்றெடுத்தார், ரோட்டரி எனும் சுழற்கழகத்தில் ஈடுபாடு கொண்டிருந்தார். பின்னர்

தமிழ் நாட்டில் 'லயன்ஸ்' எனும் அரிமா சங்கம் காலூன்றக் காரணர் ஆனார். அவற்றின் கூட்டங்களில் தமிழிலும் சொற்பொழிவாற்ற வழிகாட்டினார். இலண்டன் தமிழ்ச் சங்கத்திற்கு நிதி உதவியளித்தார். அமெரிக்கா, இங்கிலாந்து, சப்பான் முதலிய நாடுகளில் தொழில் வணிகப் பயணம் செய்தார். அரிமாச் சங்கப் பெருந் தலைவராய்த் (ஆளுநர்) தேர்ந்தெடுக்கப்பட்டு அமெரிக்காவில் நடந்த மாநாட்டில் கலந்து கொண்டார். 1941இல் கோவையில் கார் விபத்தில் சிக்கி தெய்வாதீனமாய் உயிர் பிழைத்தார். 1973இல் அகால மரணமுற்றார்.

கருமுத்து. மாணிக்கவாசகம் (1920-). இளமையில் புலவர் வரதநஞ்சைய பிள்ளையிடமும் பின்னர் மதுரைத் தமிழ்ச் சங்கப் புலவர் திருநாரணய்யங்காரிடமும் தமிழ் பயின்ற தோடு தம் தந்தையாரின் சமய உணர்வாலும் வீறுபெற்றார், சென்னை லயோலாக் கல்லூரியில் பி. ஏ. பட்டம் பெற்றார், நெற்குப்பை, அ. மு. ராம. குடும்பத்திலிருந்து சிந்தாமணி ஆச்சியை வாழ்க்கைத் துணைவியாகக் கொண்டார். இளமை முதலே இவருக்கு நூல் ஆலையின் நிர்வாகப் பொறுப்போடு தமிழ் நூல்களை ஆழ்ந்து கற்பதிலும் நாட்டம் உண்டு. பண்டிதமணி, அரசஞ் சண்முகனார் தொடர்பு உண்டு. 'தமிழ்நாடு' இதழ் ஆசிரியப் பொறுப்பினையும் ஏற்றுக் கொண்டார். 'மாசி' எனும் புனை பெயரில் புத்தம் புதிய கோணங்களில் ஆராய்ச்சிக் கட்டுரைகளைத் தொடர்ந்து எழுதி வந்தார். நாரணன் விளையாட்டு, செந்தமிழ்ப் பாவை, சப்பான் செலவு, பஞ்சாலைத் தொழில், இராதா கிருட்டிணன் நாடகம், வான்புகழ் வள்ளுவர் எனப் பல நூல்களைப் படைத்தார். தமிழ் எழுத்தாளர் மன்றங்களின் தலைவராக, பத்திரிகையாளர் சங்கத் தலைவராக எல்லாம் அமைந்து வழிகாட்டினார். வெளிநாடுகட்குப் பயணம் சென்று நூல்களை எழுதியுள்ளார். தியாகராச அறநிலையங்

களின் தாளாளராக இவர் ஆற்றிய பணிகள் குறிப்பிடத் தக்கவை. பொறியியல் கல்லூரி நிறுவச் சென்னைக்குப் பறந்து சென்று 4 மணி நேரத்தில் அரசின் ஒப்புதலைப் பெற்று வந்த சாதனையாளர் இவர். சென்னைப் பல்கலைக் கழக ஆட்சிக்குழு உறுப்பினரா யிருந்தார். மதுரைப் பல்கலைக் கழகத் துணைவேந்தரைத் தேர்தெடுக்க அமைக்கப்பட்ட மூவர் குழுவில் ஒருவராக இருந்தார். மதுரை இராமனாதபுரம் வர்த்தக சங்கம், தமிழ்நாடு ஆலை முதலாளிகள் சங்கம் எனுமிவற்றில் தலைவராக நற் பணியாற்றியதோடு, அரிமா சங்கத்தோடும் தொடர்பு பூண்டார். பின்னர் சுழற்கழகத்தின் ஆர்வம் நிறைந்த உறுப்பினராகி, அதன் பேரமைப்புத் தலைவராகவும் (ஆளுநர்) தேர்ந்தெடுக்கப்பட்டார். சுழற்கழகத்தின் 321ஆம் மாவட்டத் தலைவராகிப் பாராட்டத்தக்க பணிகளை நிறைவேற்றினார். செல்வக்குடும்பத்தில் பிறந்து, எத்தனையோ பொழுது போக்குகளில் நாட்டமுற வாய்ப்பிருந்தும் நயன்தரும் துறைகளிலேயே மனம் பற்றி நிற்பார். பழகுதற்கு இனிய பண்பாளராகத் திகழ்கிறார் மாணிக்கவாசகம். சிந்தாமணி ஆச்சி தம்பதியர்க்கு ஆண்கள் இருவர், பெண்கள் நால்வர்.

**மகளிர் மனையறம்:**

தியாகராசரின் பெண்மக்கள் சிறப்பு மிக்க குடும்பங்களில் திருமணம் செய்விக்கப் பெற்றனர். மூத்த மகள் மீனாட்சி ஆச்சி, பூலாங்குறிச்சியில் புகழ்பெற்ற செல்வர், திரு மிகு. ராம.மு. சுப்பிரமணியனாரின் புதல்வர் சொக்கலிங்கனார்க்குத் திருமணம் செய்விக்கப் பெற்றார். இச்சொக்கலிங்கம் அவர்கள், இளமை முதலே தியாகராசருடன் உடனிருந்து தொழில் பழகி, ‘சேலம் சொ’ என உரிமையுடன் அழைக்கப் படுபவர். இவர்கட்கு 3 ஆண்களும் 3 பெண்களும் பிறந்தனர்.

மற்ற இரு பெண் மக்களான சரசுவதி, ருக்மிணி திருமணத்தை அன்னையார் விசாலாட்சி ஆச்சி இருந்து நடத்திவைக்க முடியவில்லை. ''எங்கள் அன்னை மற்ற இரு பெண் மக்களின் மணவிழாக்காண மட்டற்ற ஆசை கொண்டிருந்தார்கள். அந்த வாய்ப்பினையும், கடைசிச் செல்வமகள் ருக்மிணி, செட்டி நாட்டில், பெண்களிலே முதன் முதலாகப் பி. ஏ., பட்டம் பெற்ற பேற்றினையும் கண்டு களிக்க இயலவில்லை'' என மீனாட்சி ஆச்சி வருந்துவார்.

**சரசுவதி :**

கண்டரமாணிக்கம் எஸ்.எஸ்.என்.எல். குடும்பத்தைச் சேர்ந்த புகழார் செல்வர் நாராயணன் அவர்களை மணந்தார். ஆலையதிபராய், கல்வியாளராய். அறங்காவலராய், புகழோச்சி வரும் நாராயணன் சரசுவதி தம்பதியர்க்கு 4 ஆண்களும் 2 பெண்களும் உள்ளனர்.

**ருக்மிணி :**

ருக்மிணி - சண்முகம் தம்பதியர் ''சமூக சேவைக்கு ஒரு குடும்பமாய்'' புகழ் சேர்த்து வருகின்றனர். கல்லல் மு.ஆ., குடும்பத்தைச் சார்ந்த திரு. சண்முகம் ரோட்டரி சங்க ஆளுநராகத் தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளார். திருமதி ருக்மிணி மகளிர் ரோட்டரி இயக்கப் பெருந்தலைவியாக இலங்குகிறார். இவர்களுக்கு 5 ஆண் மக்கள் உள்ளனர்.

**''ஆச்சியும்'' :**

விசாலாட்சி ஆச்சி 1947 மார்ச்சு மாதத்தில் காலமானார்கள். 37 ஆண்டுகள் தியாகராசரின் வளர்ச்சியிலும் தளர்ச்சியிலும் கைகொடுத்து நின்று, அவர் பெரியதொரு தொழிலதிபராக உருவான பெருமை கண்டு, அந்தப் பூரிப்புடன் சாலி ஆச்சி மறைந்தார். அவர் உலகைவிட்டு மறைந்

தாலும் தியாகராசர் உள்ளத்தை விட்டு மறையவில்லை. தியாகராசரும் அமைதியாகத் தன் மனைவி காலமெல்லாம் தனக்காக ஆற்றிவந்த தொண்டுகளைப் பிற்காலத்தில் எண்ணிஎண்ணித் தோய்ந்திருப்பார்.

'தன் அன்புருமனைவியின் அரும்பெயர் விளங்க' ஆ. தெற்கூரில், ஸ்ரீ விசாலாட்சி கலாசாலையினை 9-6-47இல் நிறுவினார். அன்று முதல் அவருடைய சிந்தனையில் கல்வித்தொண்டுகள் அணிவகுக்கத்தொடங்கின. இவ்வாறு அவர் தொடக்கக் காலத் தொழிலில் காலூன்றி நிற்கக் கைகொடுத்தும் பின்னர் அவர் தொண்டுக்கே ஆட்பட நினைவு நிழல் தந்தும் விசாலாட்சி ஆச்சி தம் கணவர்க்குப் புகழ் சேர்த்தார்கள்.

ஆச்சி மறைந்த அணிமையில் தியாகராசர் தொழிலிலேயே தொடர்ந்து நாட்டம் கொண்டார். நாடு விடுதலை பெற்றதைத் தொடர்ந்து பல அரசியல், பொருளாதார மாற்றங்கள் ஏற்பட்டமையினால், தொழிலை நடத்துவது பகீரதப் பிரயத்தனமாயிற்று. தம் மக்கள் பெரியவர்களாகி இல்லறப் பொறுப்பேற்றுத் தத்தம் குடும்பங்களை வளைய வரத் தொடங்கியதும் அவர் மனத்தில் ஒருவகைத் தனிமை யிடம் தோன்றியது. இரு பெண்களின் திருமண ஏற்பாடுகள் மட்டுமே உடனடிக் கடமையாக முன் நின்றன.

'நல்ல தோற்றமும் மாறா இளமையும்' கொண்ட தியாக ராசரின் கைம்மைத்துயர் கண்ட அவரது நெருங்கிய நண்பர்கள் அவரை மறுமணம் செய்து கொள்ளுமாறு வற்புறுத்தத் தொடங்கினர். அது ஏற்கெனவே தனியிடமா யிருந்த தியாகராசர் மனத்தில் விதையாக ஊன்றிக் கொண்டது. முதலில் மறுமணமே வேண்டாமென்றவர் தக்க பெண்கிட்ட வேண்டுமே என எண்ணத் தொடங்கினார்.

பெண்களைப் பெரும்பாலும் கடிதிளமையிலேயே திருமணம் செய்விக்கும் நகரத்தார் குடும்பங்களில் ஏற்ற பெண் அமையாதே எனச் சிந்தித்தார். ‘ஏற்ற பெண் எங்கிருந்தால் என்ன’? எனும் ஓர் அன்பர் கருத்து, இப்போது அவரிடம் கிளை பரப்பிக் கொண்டது. தமது உயிரனைய நண்பர்களான பண்டிதமணி, சோமசுந்தரம் செட்டியார் முதலியோரிட மெல்லாம் மனம் திறந்து விவாதித்தார். ‘‘நான் என் பிள்ளைகளுக்குச் செய்ய வேண்டியவற்றை முறையாகச் செய்து நிறைவேற்றி விட்டேன். நாளாக நாளாக நான் மிகுதியும் தனிமையாகி விட்டது போல உணர்ந்து வருந்தி யுள்ளேன். எனவே எனக்கு அறிவாக்கம் தரும் (Intellectual partner) போலத் துணையாகவும், அன்புடன் பணிபுரியும் துணைவியாகவும் ஏற்றதொரு பெண் அமைய வேண்டும் என்பதே பிரச்சினை’’ எனத் தெரிவித்தார்.

### ‘‘அம்மாவும்’’:

திருவனந்தபுரம் ஆத்திங்கல், வழக்கறிஞர் திரு. வேலா யுதம் அவர்களின் மகள் செல்வி ராதாவை இரண்டாம் தாரமாக ஏற்பது பற்றிய பேச்செழுந்தது. ‘‘தமிழ்ப் பெண்ணாக இருந்தால் தேவலை,’’ என்றார் பண்டிதமணி. ‘‘பரவாயில்லை, கொடுந்தமிழே மலையாளம் ஆகையால் தமிழ் உணர்வுள்ள பெண்ணாக மாற்றிக் கொள்ளலாம்’’ எனச் சமாதானமும் சொன்னார். தன்னிலும் மிகவயதான ஒரு பெரியவரைத் தன் கணவராக ஏற்க ராதாவும் தியாக உணர்வுடன் இசைந்தார். தம் ஐயாவைப் போல அப்பச்சியைப் போலத் தியாகராசரும் 1952இல் மறுதாரம் கொண்டார்.

### புதுநலப் புனைவு:

“When an old man marries a young wife, he be comes young and she old” என்பது யூதநாட்டுப் பழமொழி.

இத்திருமணத்தின் பின்னர் தியாகராசரின் தொழில் முனைப்பில் மறுபோகம் எனும்படிப் புது நலங்கள் இளமை வீறுடன் குவியத் தொடங்கின. அம்மா திருமணத்தின் பின் கேரளத்தில் பார்வதி ஆலை அவர் பார்வையில் வந்தது. தொடர்ந்து பல அமைப்புக்கள் உருவாகத் தொடங்கின. திருமதி இராதா அவர்கள், 'தமிழகத்தின் தத்துப் பெண்ணாக' வந்து ஔவை துரைசாமி பிள்ளையிடம் அ. ஆ. கற்கத் தொடங்கி, ஒரு சில ஆண்டுகளுக்குள் வியக்கத்தக்க புலமையும் நிர்வாகப் பயிற்சியும் பெற்று வந்தார். தனது ஆசான் ஆராய்ந்து எழுதிய நற்றிணை உரைக்கு முன்னுரை தரும் அளவுக்குத் தமிழாய்வில் தலை சிறந்து வந்தார். தமிழ் இலக்கியத்தில் நிறைகலைப் பட்டமும் திருவாசகத் திறனாய்வில் டாக்டர் பட்டமும் பெற்றார். அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் நிறுவனர் நினைவு விழாப் பொழிவாற்றினார், தம் கணவருடன் பல விழாக்களில் கலந்து கொண்டு தம் கருத்துரையால் அவற்றிற்குப் பொலிவூட்டினார். 22 ஆண்டுகள் இணைபிரியாதிருந்த தியாகராசர் இராதாதம்பதியர்க்கு கண்ணன், இலக்குமி எனும் இரு பிள்ளைகள் அமைந்தனர், கருமுத்து கண்ணன் (1953-) : பி. பி. ஏ. பட்டம் பெற்றுப் பெரியவராலேயே நிர்வாகத்தில் அறிமுகப் படுத்தப்பட்டு நாளும் வளர்ந்து வருகிறார். இலண்டன் மெய்யப்பச் செட்டியார் புதல்வி, உமாவை மணந்து கொண்டார். இலக்குமிக்கு திரு. முருகேசன். எனும் நம்பி கணவராய மைந்தார்.

## திருமணப் பிணிப்பு :

"கருமுத்து குடும்பத்தவர்க்குச் செட்டி நாடெங்கும் திருமண உறவு உண்டு என்றும், திருமணத்தால் செட்டி நாட்டை ஒருங்கிணைத்த குடும்பமாக அது விளங்குகிற

தென்றும்'' உயர்திரு. லெ. அழகுசுந்தரம் செட்டியார் 2—3—80இல் நடந்த மதுரைக் கூட்டமொன்றில் மகிழ்ந்து பாராட்டினார்.

கருமுத்து தியாகராசரின் குடும்பத்தவர்களின் ஆட்சிப் பொறுப்பில் இன்று 50க்கு மேற்பட்ட ஆலைகளும் தொழில் நிறுவனங்களும் உள்ளன. இவற்றின் வழியாக அன்னவர்கள் ஆயிரம் பொற்கதிர்களை வீசி, இலட்சோபலட்சம் மக்களுக்கு நல்லொளிநல்கி அவர்கட்கு நல்வாழ்வளிக்கவும் நாட்டு வளத்தை மேம்படுத்தவும் முயன்று வருகின்றனர். "Karmuttu's Spirit is present in all endeavours" என்றார் ஒரு தொழிலதிபர்.

இக்குடும்பத்தில் பிறக்கும் பிள்ளைகளில் பலர் தம் ஐயா, ஆயாவின் பெயர்களை ஏற்று விளங்குகிறார்கள். அவர்கள் வழியாகவும் தம் தொழிலகங்களிலும் கல்விக் கூடங்களிலும் உருவாகும் ஆயிரமாயிரம் அன்புள்ளங்கள் வழியாகவும் தியாகராசர் நிறைநலம் பூண்டு விளங்குகிறார்; என்றென்றும் விளங்குவார்!



## உரையும் பாட்டும் 17

"The heights by greatmen reeched and kept
were not attained by sudden flight,
But thay while their companions slept,
were toiling upward in the night"
– Longfellow.

### உழைப்பது – உயர்வது:

"நாற்பது வருட வாழ்க்கை மூலநூலாக அமைகிறது. அடுத்த நாற்பது வருட வாழ்க்கை அதற்கு உரையாக விரிகிறது" எனும் ஆங்கில முதுரைக்கேற்ப 80 ஆண்டுகள் உரையும் பாட்டுமாய் வாழ்ந்து, உழைப்பால் உயர்ந்தார் தியாகராசர். உழைப்பால்தான் மனிதன் முன்னேறமுடியும். மேதைக்கு உழைப்பு (Perspiration) 90 சதவீதமும், உற்சாகம் (Inspiration) 10 சதவீதமும் இருக்கும் என ஆர். கே. சண்முகம் செட்டியார் கூறியதுபோல, உற்சாகத்தால் உழைப்பும், அது நல்கிய பயனால் உற்சாகமும் கொண்டு விளங்கினார். "ஒவ்வொரு நாளும் அதிகாலை 5 மணி முதல் இரவு 12 மணி வரை விழித்திருந்து தம்முடைய அலுவல்களைச் செவ்வனே முடித்துவிட்டே கண்ணயரச் செல்வார்கள். அவர்களது அயராத உழைப்பும் சிறந்த அறிவும் தான் அவரை உலகிற் சிறந்த உத்தமராகத் திகழ வைத்தது, என உறுதியாகக் கூறலாம்" என்பார் நூலாலை மேலாளர் திரு. டி. ஆர். நரசிம்மாச்சாரி.

### புனைவது - பொழிவது :

நிமிர்ந்த நன்னடையும் நேர்கொண்ட பார்வையும் உடைய வசீகரத் தோற்றத்துடன் பொலிந்தார். அவர்

உடலிலும் கூனல் இல்லை உள்ளத்திலும் கோணல் இல்லை. நெஞ்ச உறுதியைக் காட்டும் நிதானமான தோற்றத்துடன் முகக்களையோடு எப்போதும் விளங்குவார். தூய வெண் ஆடையே புனைவார். எவர்க்கும் எளியராகவே காட்சி வழங்குவார். மதிநுட்பம் நூலொடு உடையராகத் திகழ்ந்தார். தன்எதிர்நின்று பேசுபவரின் கண்களை ஒருமுறைஏறெடுத்துப் பார்த்துவிட்டு அன்னவருடைய உள்ளக்கிடக்கையை எடை போட்டறியும் வல்லவராகக் கருதப்பட்டார். வெறும் முதலாளி யாக மட்டும் இருக்கமாட்டார். தொழில் நுட்ப உணர்வோடு எப்போதும் புதுமைகளைப் படைத்து வந்தார். ஒரு கம்பெனியின் வரவு செலவு அறிக்கையைக் கையால் தொட்டதுமே அந்த நிறுவனத்தின் தராதரத்தை எடை போட்டறியும் திறமை பெற்றிருந்தார்.

சிறந்த நிர்வாகத் திறன் பெற்றிருந்தார். ஒவ்வொரு பணிக்கும் தகுதியுடையவர்களையே அமர்த்துவார். தன் இனத்தவர் என்பதற்காகத் தகுதி குறைந்தவர்க்கு வாய்ப் பளிக்கவோ சிபாரிசு செய்யவோ மறுத்து விடுவார். தகுதி யுடையவர் யாராயிருப்பினும் வேறுபாடின்றி நேரடியாகப் பார்த்தே நியமிப்பார். பொறுப்புக்களை வரையறுத்து வழங்குவார். பணிகளில் அடிக்கடி தலையிட்டுச் சங்கடப் படுத்தமாட்டார். குற்றங்கள் காண்பினும் சினம் கொள்ளாமல் உரியநெறி கூறித் திருத்தமாகச் செய்யச் சொல்வார். கடும் சினமுற்றபோது தன் குற்றேவலர்களிடம் 'போடா மடப் பயலே' என உரிமையுணர்வோடு சொல்லிக் கண்டிப்பார். உடனே மறந்து மன்னித்து விடுவார்.

### மறப்பது - மன்னிப்பது :

ஒரு முறை வெளியூர் புறப்படும் முன், உடன் வந்த அலுவலரிடம் தான் திரும்பும் நாளில் இரயில் நிலையத்திற்குக் கார் அனுப்புமாறு சொல்லிப் போயிருந்தார். அதை

அன்னை



விசாலாட்சி ஆச்சி அவர்கள்

ராசாசியை, வள்ளலும் வாரிசும் வழி நடத்த...



இடது கோடியில் கருமுத்து சுந்தரனார்.

அலுவலர் வேலை மும்முரத்தில் மறந்தே போய்விட்டார். உரிய நாளில் இரயிலில் வந்திறங்கிய தியாகராசர் கார் வராமையைக் கண்டார். உடனே பெட்டியைக் கையில் பிடித்தபடி, இரயில் தண்டவாளத்தில் நடந்தே ஆலைவந்து சேர்ந்து அனைவரையும் திகைக்க வைத்தார். பிழையுணர்ந்த அலுவலர், என்ன தண்டனை வேண்டுமானாலும் தருக என வேண்டியபோது, 'சரி போ வேலையைப் பார்' என அனுப்பிவிட்ட உதாரகுணமுடையவர் அவர்.[1]

ஒருமுறை நள்ளிரவு 12 மணிக்குப் பரவை ஆலையைப் பார்வையிடச் சென்றார். அவரை இனம் கண்டுணரமுடியாத காவல்காரன் உள்ளேவிட மறுத்து விட்டான். அவனது கடமையுணர்வை மதித்துப் பாராட்டி வெகுமதியளித்தார்.

சட்டம் என்பது அவருக்குச் சர்க்கரைப் பொங்கல் போல; சட்டத்தை மதித்தே நடக்க முற்படுவார். ஆனால் அச்சட்டத்தின் நுட்பங்களைச் சல்லடைபோட்டுச் சலித்து, ஓட்டைகளை அறிந்து எப்படியோ துணிச்சலுடன் அதைத் தனக்குச் சாதகமாக்கிக் கொள்வார், தன்பக்கம் நியாய மிருக்கிறது எனக் கண்டால் சுப்ரீம்கோர்ட் வரை போகப் பின்னிடமாட்டார். குறுக்கு வழியில் அதிகாரிகளுக்குக் கையூட்டுக் கொடுத்து ஆதாயம் பெற விரும்பமாட்டார். தன் அதிகார வரம்பு மீறி நடக்கமுற்பட்ட அதிகாரிகளை உரியவாறே நடத்துவார். ஒருமுறை குறிப்பிட்டநேரம் தவறி வேண்டுமென்றே தாமதமாக வந்த நூலாலைத் துறை உயரதிகாரியைச் சத்திக்கவே மறுத்து விட்டார். ஒரு முறை வங்கிக் கடனை வசூலிக்க வந்தவர் எல்லைமீறிய போது பாய்லரில் தூக்கிப் போட்டுவிடுவேன் எனச் சினந்து சொல்லுமளவுக்கு எரிமலையானார்.

---

1. கூறியவர் திரு. எல். என். எஸ். சுந்தரராமன்.

## ஒசிவது - ஒடிவது :

ஆலை வரவு செலவில் பலமுறை நொடிப்புக்குள்ளான போதெல்லாம் சற்று ஒசிவாரே தவிர ஒடிந்தே விழுந்து விடமாட்டார். 1971இல் அவர் திறமையுடன் நடத்தி வந்த ஐந்து ஆலைகளை ஒரே சமயத்தில் அரசு மேற்கொண்ட (NTC) அறிவித்ததைப் படித்து விட்டு ஏதும் நடவாதது போல இருந்து விட்டார், அசையாத உள்ளமும் கலங்காத உணர்வும் உடையவராக அப்போதும் இருந்தார்.

பிறர் நடத்திய ஆலையாயினும் கல்விச் சாலையாயினும் தடுமாறி நின்றபோது அவற்றினைத்தாம் ஏற்று நடத்தி அவற்றை ஆடாமல், அசையாமல் வைத்தார். தொழில் சம்பந்தமாக அறிவுரை கேட்டுவந்தோர்க்கு அனுபவ அடிப் படையில் தக்க ஆலோசனைகளை ஒளிவுமறைவன்றி வழங் கினார். அவர்களது தொழில் முயற்சிகளைத்தானே தொடங்கி வைத்து வாழ்த்தினார். தொழில் உலகில் இவரது வளர்ச்சியைத் சற்று மட்டம் தட்டச் சிலர் முயன்று, முடிச்சுக்களைப் போட்டு வைத்தபோது அவற்றிலிருந்து எளிதில் தப்பி விட்டார். தமிழ் நாட்டின் பெரியதொரு முதலாளி, இவருடைய துணிகளை வாங்கி விற்க உரிமை கோரியபோது ''நீங்கள் தொழிலதிபராகிப் பலருக்கு வேலை வாய்ப்பளிப்பதைவிட்டு, வணிகராகி இலாபம் சம்பாதிக்கவே இன்னும் ஆசைப்படலாமா?'' என மறுத்து விட்டார்.

## அஞ்சாமை - கெஞ்சாமை :

அஞ்சாமை அவரது பிறவிக்குணம். இலங்கையில் அக்கிரமத்தை எதிர்க்க அஞ்சவில்லை. இந்தியாவில் எதேச்சாதிகாரத்தை எதிர்க்க அஞ்சவில்லை. தொழில் உலகில் சுயலாப வேட்டையை, துதிபாடும் போக்கை

எதிர்க்க அஞ்சவில்லை. கொள்கைப் பிடிப்பில் மகாத்மா காந்தியையும் மறுக்க அஞ்சவில்லை. மாபெரும் அரசையும் எதிர்க்க அஞ்சவில்லை.

எதிர் நீச்சலும் தன்னம்பிக்கையும் அவருடைய இரு கரங்கள். அப்போதைய தனவணிகப் பெரியவர்கள் தம் தொழில் நலன் கருதி, கூடுமானவரை அரசாங்கத்துடன் அனுசரித்துப் போவதே வழக்கம். ஆனால் தியாகராசர்க்கு எதிர் நீச்சல் போட்டே பழக்கம். இதனால் அவருடைய புகழுக்கும் தொழிலுக்கும் எத்தனையோ இடர்கள் வந்தன. அவர் 'Negative approach' இல்லாமல் இன்னும் கொஞ்சம் இசைந்து போயிருக்கலாம்; அதனால் இன்னும் சம்பாதித் திருக்கலாம் என இன்றும் நினைப்பவர்கள் உண்டு.

## புகழ்வது - போற்றுவது :

அவர் காலத்தின் அருமையைக் கணிப்பது போலச் சொல்லின் அருமையையும் மதிப்பார். புலவர் பெரு மக்களிடம் தோய்ந்து உரையாடும் நேரம் தவிரப் பிற சமயங்களில் அளந்தே பேசுவார். தங்கம் போலச் சொல்லை நிறுத்து நிறுத்திப் பேசுவார். சொற்பொழிவுகளை முன் கூட்டியே சிந்தித்துத் தயாரித்துக் கொள்வார். முன்னறி விப்பின்றி எப்பொருள் பற்றியும் சடுதியில் பேசவல்ல ஆற்றலிருந்தும் ஆங்கிலப் பேச்சாயினும் தமிழ்ப் பொழி வாயினும் முன்கூட்டியே ஆக்கிக்கொணர்வார்.[1] எவரையும் வரம்பு மீறிப் புகழமாட்டார். தன்னை அவ்வாறு ஒருவர் பாராட்டுவதையும் விழைய மாட்டார். தம்மை உரியவா

---

1. ஆபிரகாம் லிங்கன் 1863இல் நடத்திய ஜெட்டிஸ்பர்க் பொழிவில் 10 வாக்கியங்களே உள்ளன. 270 வார்த்தைகள் கொண்ட குடியாட்சி மந்திரம் போன்ற இவ்வுரையை இரவும் பகலும் விழித்திருந்து தயாரித்தாராம்.

றேனும் அவ்வாறு பாராட்ட் அவர் இடம் தந்திருந்தால் சமகாலத்தவரும், வளரும் சந்ததியினரும் தம்போன்றாரை மதித்தறியும் மரபு நெறிப் பயிற்சியடைவர் என்பதை ஏனோ அப்போது ஏற்க மறந்து விட்டார்!

அழகாக முத்துக்கோத்தாற்போல எழுதுவார் கருமுத்து. கடிதங்களுக்கு உடனுக்குடன் பதில் எழுதுவார். ஓரிருவரி களில் தன் கருத்தைத் தெளிவாக்கி விடுவார், 'செட்டியார்' எனத்தன் பெயரோடு சேர்த்துக் கொள்வதை இலங்கை யிலேயே விட்டு விட்டார். அதையும் அல்லது எதையும் எழுதுவதில் அவர் செட்டுத்தான். பொழுது போக்கிற்காக ரோட்டரி கிளப் போன்ற நிறுவனங்களில் சேர முற்பட்ட தில்லை. ''அதற்கெல்லாம் பொழுது எங்கேயிருக்கிறது?'' எனக்கேட்டு மழுப்பி விடுவார்; எப்படியோ செல்வம் குவிக்க வேண்டுமெனக் கருதார்; ரேசுக்குப் போன தில்லே; மது முதலிய தீய பழக்கங்கட்கு ஆட்பட்ட தில்லே; புலால் உணவை ஏற்றதில்லே; வாய்ப்புக்கள் இருந்தும் வெளிநாடு போனதில்லை; அவருக்கு மீசை பிடிக்காது; கறுப்பு வண்ணம் தவிரப் பிற அச்சுமை பிடிக்காது; லிப்டில் ஏறிச் செல்லப்பிடிக்காது; நேரம் போற்றாமை பிடிக்காது; 'சோஷியல்கால்' எனும் ஆரவார உறவு பிடிக்காது; தேவையற்ற செயல்களில் ஈடுபடப் பிடிக்காது; எதிலும் முதன்மைபெறவே விழைவார்; தொழிலில் தமிழகம் தலைமை பெறக் கனவு காண்பார்; மதுரையில் முதன்முதலில் தொலை பேசி கொணர்ந்து முதல் எண்ணைப் பெற்றார். தமிழ்மொழி அரியணை ஏறப் போர் தொடுப்பார்! தமிழ்ச் சித்த மருத்துவமே போற்றினார். ஜாதகம் பார்ப்பதையும் ஒரு அறிவியல் கலையாகவே கருதினார். இயற்கையை ரசிப்பதை ஒரு மதமாகப் போற்றினார். உண்ணா நோன்பையும் சைவ சமயத்தையும் வழிபிறழாது மேற்கொண்டார்.

**நெறி-வெறி :**

சமய உணர்வில் நெறியோடு நின்றார். தன் கருத்தைப் பிறர்மீது வற்புறுத்தித் திணிக்க முற்படமாட்டார். கலை உணர்வில் ஒருவகை வெறியோடு சிறந்தார். பாரம்பரியத் கலைகளைப் பாடுபட்டு வளர்த்தார்.

1920-47ஆம் ஆண்டளவில் இந்திய முதலாளித்துவம் என்பது சொந்தக் காலூன்றி நிற்க முயன்றது. அந்தச் சுதேச முதலாளிகளில் ஒருவராகத் தியாகராசரும் உருவாகி முதலாளிகள் எப்படி இருக்கவேண்டும் என்பதற்கு இல்க்கண மாக விளங்கினார். ஆங்கில நாகரிகத்தின் எழுச்சிமிக்க காலத்தில் இலங்கையில் பயிற்சிபெற்றார். ஆனால், இந்தியப் பண்பின், தமிழ்ப் பண்பின் தன்னிகரற்ற ஒருவராக இலங்கினார். "There were three characteristics which marked him off from any of his contemporaries in Tamil nadu: a sense for form, a religious feeling for the heritage and resistance to modernist vulgarity" என ஆங்கிலப் பேராசிரியர் டி. வி. சுப்பாராவ் திறனாய்வு செய்தது போல இந்த நூற்றாண்டுத் தமிழ்ப்பண்பாட்டின் இணையற்றதொரு எடுத்துக்காட்டாக வழிகாட்டினார்.

**ஒருவர்-பலர் :**

தியாகராசர் என்பவர் ஒரு தனி நபரல்லர். பலதிற மனிதப் பண்புகளைத் தம்முள் இணைத்துக் கொண்டவர் ('T' is not one person, but a combination of persons)

எண்பதாண்டுகள் இனிதுற வாழ்ந்து, தன் முயற்சியால் புகழின் உச்சிக்கே சென்றடைந்தார். இந்த எண்பதாண்டு இடையறா உழைப்பால், அவர் உடல் தளரத் தொடங்கி னாலும் அருள்பழுத்த உள்ளத்தால் அறங்கனிந்த நெஞ்

சத்தால் இன்னும் புதிய சாதனைச் சிகரங்களைத் தேடிக் கொண்டேயிருந்தார்.1 நிறைந்த பொருட் செல்வத்தைக் சொத்தாகவிட்டுச் செல்வதைவிட நிலைத்த பண்பாட்டுச் செல்வத்தையே வித்தாக விட்டுச் செல்ல நாளும் சிந்தித்து வந்தார்.

## மலர்-விதை :

கருமுத்து தியாகராசரைப் பற்றிய இக்கோல நினைவுகள் எல்லாம் கோடி மனங்களில் ஓடிக்கலக்கவேண்டிய நேரம் நெருங்கியது.

> " வாழ்வின் மடியிலிருந்து மலராய்ச் சொரிந்தவர்
> மரணத்தின் பிடியிலிருந்து விதைகளைச் சிந்தினார் "-2

எனக் கண்ணீரால் வரலாற்றில் எழுதவேண்டிய தருணம் வந்து கொண்டிருந்தது. அதற்காகக் குற்றாலத்தலம் தவமிருந்தது !

---

1 "Thiru Karumuttu Thiagarajan Chettiar deserves all praise for ascending the ladder of fame by patient and persistent effort and by his public spirit"
M. C. T. Muthiah.

2 திருத்தி எழுதிய தீர்ப்புகள் — வைரமுத்து.



'' கண்ணுக்குத் தெரியாமல் காற்றோடு
காற்றாக
நெஞ்சோடு நெஞ்சாக நிற்பது
அவனன்றோ ? ''

- திருமதி சௌந்தரா கைலாசம் - இரங்கற்பா

# மறைவும் நினைவும்

# 18

## சாவும் வாழ்வும் :

சாவு எவ்வளவு உண்மையானது என வாழ்வு போதிக்கிறது ; வாழ்வு எவ்வளவு நிலையற்றது எனச் சாவு எச்சரிக்கிறது. ஆனால் நிலையற்றதை நிலையாக்கிக் கொள்ளக் கற்றிருந்தாலும் தியாகராசர் எப்போதும் எச்சரிக்கையை ஏற்று நடந்தவரில்லை. இருதய நோய் தாக்கியபோதும் எண்பதாண்டையும் தாண்டி, உழைப்பிலிருந்து ஓய்வு பெறாதவராகவே வாழ்ந்து வந்தார். மருந்துகளை அதிகம் கொள்ளமாட்டார். இயற்கை மருத்துவத்தையே போற்றுவார். நிர்வாகப் பொறுப்புக்களைப் பிறர் பார்க்க விட்டாலும் கூட, அந்த நினைப்பிலும் சிந்தனையிலுமே நேரத்தை உணர்ச்சிவிம்மச் செலவிட்டு வந்தார். தமக்குப் பிடித்த குற்றாலமனையில் மீனாட்சி இல்லத்தில் சின்னாட்கள் தங்கியிருந்தார்.

அருமைப் புதல்வர் கருமுத்து சுந்தரனார் 1973 அக்டோபரில் திடீரெனக் காலமானது அவருடைய கலங்காத நெஞ்சத்தையும் கலங்கச் செய்துவிட்டது.

'' ... ... ... ... அஞ்சா நெஞ்சின்
பெருமுத்துத் தியாகரவர் உளம் துடிக்கப்
பிரிந்துவிட்டார்; அப்பெரிய செம்மல்,.....''

திறந்த உள்ளமும் நிறைந்த அன்பும் சிறந்த பண்பும் சேர்ந்தமைந்த இச் சுந்தர முகத்தாரின் மறைவு தியாகராச மலையை உலுக்கியெடுத்துவிட்டது.

## பேரனும் மகனும் :

தன் ஆருயிர் மகனை, இந்திரசித்தனை இழந்தபோது, எவராலும் வெல்லப்படாத கீர்த்தியுடைய இலங்கைநாதனே துயரத்தால் மாள்கி, மைந்தவோ என்றும், மாமகனே என்றும், எந்தையே என்றும், என் உயிரே என்றும் வெந்த புண்ணிடை வேல்பட்ட வெம்மையால் வெய்துயிர்த்தான் எனக் கம்பன் துடிப்பான்.

''எனக்கு நீ செய்யத்தக்க கடன் எலாம்,
ஏங்கி ஏங்கி
உனக்கு நான் செய்வதானேன், என்னின்
யார் உலகத்துள்ளார்?''

என இலங்கேசுவரன் சோகத்தில் மூழ்கியமை போல, ஆலையரசரும் ஆருத்துயர் கொண்டார். தம்மைப் பார்க்க வருவோரிடம் மட்டும் சற்று மனம் திறந்து பேசி ஆறுதல் பெறுவார். எஞ்சிய நேரமெல்லாம் தானும் தன் துயருமாகத் தவித்தார். தன் (மகள் வழி) அருமைப் பேரன் மரணத்தை அடுத்து வந்த இம் மைந்தன் பிரிவால் விளைந்த தவிப்பைக் காலத்தால் மாற்றுதற்குள் பேரவலம் வந்துவிட்டது. தன் மகன் சுந்தரம் இறந்த போதும் பேரன் இறந்த போதும் அவர்கள் மனைவியர் வளையல்களைக் கழற்றிக் கைம்மைத் துயர் மிகுவிக்கக் கூடாதென ஆறுதல் தந்து வந்தவர், பிறரை ஆறாத் துயரில் ஆழ்த்த வேண்டிய வேளை வந்துசேர்ந்தது.

### காலமும் காலனும் :

1974 சூலை 28 தமிழறிஞர் கி. ஆ. பெ. விசுவநாதம் தியாகராசரைப் பார்க்கக் குற்றாலம் வந்திருந்தார். இன்னும் சில அன்பர்களும் உடனிருந்தனர். பலவகையாக நெடுநேரம் உரையாடல் நீடித்தது. தியாகராசர் இயல்பாகவே படுக்கச் சென்றார். மறுநாள் சூலை 29, காலையில் எழுந்தவுடன் வழக்கம்போலத் தேவார திருவாசகப் பனுவல்களைப் படித்துவிட்டு உலாவச் சென்றார். கொஞ்ச நேரம் பங்களாக் காம்பவுண்டிற்குள் நடந்தார். பின்னர் புலி அருவிக்குக் குளிக்கச் சென்றார். அங்கு குளிக்க வந்திருந்த பராசக்தி மகளிர் கல்லூரி மாணவியர்க்கு உடைமாற்றும் அறையினைத் திறந்து விடுமாறு சொல்லிவிட்டு ஒரு கருங்கல் பெஞ்சில் போய் அமர்ந்தார். திடீரென மயக்கம் வந்தது. எவருக்கும் மயங்காத இப்பெரியவரைக் காலன் எப்படியோ ஒரு நொடியில் காலை 7 மணிக்கு மாய்த்து விட்டான். தியாகராச மலையின் தலை சாய்ந்தது. அருகிலிருந்த இராதாதியாகராசன் நிலை குலைந்தார். எந்தக் குற்றால மலையைத் தனக்குரிய விண்ணகமாகத் தன் செயலரிடம் அடிக்கடி சொல்லி மகிழ்வாரோ அந்த மண்ணிலேயே தியாகாராசர் தன் விண்ணகத்தைக் கண்டு விட்டார்.

### துயரமும் துன்பமும் :

தியாகராசரின் மரணச்செய்தி காட்டுத்தீயாய்ப் பரவிற்று. குற்றாலத்திலும் மதுரையிலும் சோக மேகங்கள் சூழ்ந்தன. சற்று முன்னரே தன் தந்தையைவிட்டு மதுரை சென்ற இளைய மகன் கண்ணன் ஓடோடி வந்தார். அவரது சடலம் அன்று மாலையே மதுரைக்குக் கொணரப்பட்டது.

மதுரையில், அவரால் உருவாக்கப்பெற்ற மீனாட்சி ஆலையின் பெரிய மண்டபத்தில், அவரால் வாழ்விக்கப்பெற்ற

ஆயிரமாயிரம் தொழிலாளர்களின் கண்ணீர்க் கடல் முன் அவரது புகழ் வளர்த்த திருமேனி கிடத்தி வைக்கப்பட்டது, அங்கே ஆயிரமாயிரம் அற்புதங்களை நடத்தி வைத்த பெரிய செட்டியாரின் திருவுடல் இப்போது அசையாமல் வைக்கப்பட்டது. மதுரை மாநகரமே திரண்டு வந்து தன் மரியாதையினைச் செய்ய அணிவகுத்தது.

மதுரைப் பெருநகரின் எந்தப்பக்கம் நுழைந்தாலும் அந்தப் பக்கம் எல்லாம் அவருடைய நிறுவனங்கள் இருந்து வரவேற்றுப் புகழ்பாடுமே, அந்த நிறுவனங்கள் எல்லாம் அழுத கண்ணீரோடு அடக்க முடியாத்துயரோடு அஞ்சலி செய்ய வந்து கொண்டிருந்தன.

தென்பாண்டி மண்டலமான மதுரையம்பதியில் ஆண்டிற் கொருமுறை ஆற்றில் அழகர் இறங்கும் காட்சியைக் காண மக்கள் திரண்டு வரும் காட்சியைப் போல, ஐயாவினுடைய பூதவுடலைத் தரிசிக்க வந்த மக்கள் கூட்டமிருக்கிறதே அது கடல் அலையைப் போலக் காட்சிதந்தது. நீர்வழியாத கண்களைப் பார்க்க முடியவில்லை. அத்தனைபேரும் சோகத்தில் ஆழ்ந்து மௌனத்தில் கண்ணீர் விட்டனர். வானமும் அழுது கண்ணீர் விட்டது.

**அவலமும் கவலையும்;**

மலர் வளையங்களை ஏந்தி, வெளியூர், உள்ளூர் ஆலைகளின் தொழிலாளர்களும் அணிவகுத்தனர். கல்வி நிலைய மாணவர்களும் ஆசிரியர்களும் கலைத் தந்தையின் கடைசித் தரிசனத்திற்காகக் கண்கள் குளமாகக் காத்திருந்தனர். உலகெங்குமிருந்து அவலம் கேட்டு அனுதாபச் செய்திகள் வந்து குவிந்தவண்ணம் இருந்தன.

இத்தனைக்கும் நடுவே ...

தியாகராசர் உருவம் கம்பீரமாகக் காட்சி தந்தது.

அவருடைய

" ஆளளக்கும் கண்ணும் அறமளக்கும் கையிரண்டும்
தோளளக்கும் துண்டும் துணி வளக்கும் நெஞ்சுரமும்
நாளளக்கும் காலன் நஞ்சளக்கும் நெஞ்சுடனே
காலளக்கும் வேளையிலே கைமறிக்க மாட்டாமல்..." 1

கடைசிப் பயணத்திற்காகக் காத்திருக்கும் மனநிறைவு புலப்பட்டது.

" உயர் கல்வி வளர்ப்பதற்குப் பெருநிதியம்
உதவியகை ஓய்ந்ததேயோ?
மயர்வின்றிப் புலவருடன் புலமை நலம்
அவாவுகின்ற வாய் மூடிற்றோ?
அயர்வின்றித் தொழிலாளர் நலம்பேண
உழைத்தமனம் அயர்ந்ததேயோ?
துயரின்றித் தமிழகந்தான் வாழவழி
தேடு முன்னம் தூங்கிற்றேயோ?" 2

என மதுரை மீனாட்சியே மனம் கவல்வது எல்லோராலும் உணரப்பட்டது; மதுரை நகரெங்கும் இவ்வாறு சோகச் சூழல் விரிந்தது.

நீண்ட உருவும் நெற்றியிலே திருநீரும் கொண்டு விளங்கிய தியாகராசர் திருமேனி இறுதி அமரயாத்திரைக்காக அலங்கரிக்கப்பெற்ற ரதத்தில் கிடத்தப்பட்டது.

---

1. சேவுகன் அண்ணமலைக் கல்லூரியினர்.
2. டாக்டர். சுப. அண்ணாமலை.

'ஆரோ வடம்புடிச்சு இந்த ஐயன்தேரு நின்னாலும்' அனைவரும் கரம் சேர்த்து இந்த ஐயாவைச் சுமந்தார்கள். துயர் சுமந்த ஊர்வலம் நள்ளிரவில் தத்தநேரி மயானத்தை அடைந்தது.

## மண்ணும் விண்ணும் :

மதுரை மாநகரத்தை இன்றைய நிலைக்குத் தொழிலாலும் கல்வியாலும் உயர்த்திய பெருந்தகையாளர்க்கு அஞ்சலி செய்ய மதுரைப் பெருநகரமே அங்கு திரண்டிருந்தது. மதுரை மேயர் உட்பட எண்ணற்றோர் அங்கே கூடியிருந்தனர். இனி என்ன இருக்கிறது? இறுதியில் சிதைக்கு எரியூட்டப் பட்டது. தியாகராசர் புகையாய் நெருப்பாய், காற்றாய் புனலாய் மாறி இம் மண்ணையும் விண்ணையும் இணைத்துக் கொண்டார்.

தியாகராசர் புகழ் வேண்டி எப்பணியினையும் செய்யா விட்டாலும் அவர் போன்றாரைப் புகழ்ந்து போற்றுவதால் சமுதாயத்திற்குத் தக்க வலிமையும் தாழ்விலாப் பெருமையும் ஏற்படும் என்பதை அரசு கருதிப் பார்க்கத் தவறிவிட்டது. அன்றாட அரசியல் உணர்வுகளுக்கு ஆட்பட்டு, பொன்றாத புகழுடைய தியாகராசப் பணிகளை ஏற்றவாறு அளவிட்டறியச் சமுதாயம் தயங்கிவிட்டது. பல்ருக்கும் சிலை நாட்ட வரிந்து கட்டும் இயக்கங்கள், எண்ணற்றோர் வாழ்வை எந்நாளும் இயக்கிவரும் கலைத்தந்தைக்கு நிலையானதொரு சிலை நிறுவப் பின் தங்கிவிட்டன, என்றாலும் தென்னாட்டின் ஆலையரசரான கலைத்தந்தை கருமுத்து தியாகராசர் இலட்சோப இலட்சம் இதயங்களில் இன்றும் என்றும் நிலையாகப் புகழ்வீசி இலங்குவார்; இனிவரும் தலை முறையினர் இந்தக் கலைத்தந்தையின் கல்லறையில் ஒளி விளக்கேற்றிப் புத்தொளியும் புது நலமும் காண்பார்கள்.

ஒளிப்பறவையில் 'சிற்பி' பாடியதைப் போல

''வானத்துக் கூந்தலில்
செம்மலர் சூடிய
வைகறை வானங்களே
ஞானத் திருமகன்
வாசலில் பொன்னொளிக்
கோலங்கள் போடுங்களே
வேனில் நிலாக்களில்
மேனி குளித்திடும்
நீல இரவுகளே
வெள்ளி விளக்குகள்
எங்கள் தலைமகன்
கல்லறைக்கு ஏற்றுங்களே!''

எனக் காலந்தோறும் கலைத் தந்தையின் புகழ்பாடி ஒளிவிளக்கேற்றுவார்கள். அந்த ஒளிச்சிதறல்களில் எல்லாம் கலைத்தந்தை தியாகராசர் கவியரசர் பாரதி பாடிய புதிய பாரதத்தைக் கண்டு மகிழ்வார்!

## பேராசிரியர் சு. குழந்தைநாதன் எழுதிய நூற்கள்

1. புதுமைப் பொங்கல் — தமிழக அரசின் முதற் பரிசு பெற்ற நாடகம்
2. சுதந்திரதாகம் — மொழிபெயர்ப்புப் புதினம்
3. வாழவிடுங்கள் — கட்டுரைகள்
4. தாகூரின் சொற்பொழிவுகள் — பேராசிரியர் 'அசீரா' முன்னுரையுடன்
5. டாக்டர் — மருத்துவ இயல்
6. பெண்காம் பொருளாதாரம்
7. இந்தியப் பொருளாதாரம் } தமிழ் வெளியீட்டுக் கழகம்
8. கோடி கொடுத்த கொடைஞன் — வள்ளல் அழகப்பர் வரலாறு
9. ஆழ் நிலைத் தியானமும் ஆக்க அறிவியலும் — பேரறிஞர் தெ. பொ. மீ. முன்னுரையுடன்
10. மலரமுதம் — கருத்துக் கோவை
11. திருத் தொண்டு — மொழிபெயர்ப்பு
12. ஏழையரின் கல்வித் தொண்டர் — வரலாறு

காரைக்குடி இந்துமதாபிமான சங்க விழாவில்



குன்றக்குடி அடிகளார், சிவி. சிடி. வே., ராயசொ, ஆகியோருடன்
திருமதி. ராதா தியாகராசனும் கருமுத்து அவர்களும்

# அமரர் கருமுத்து தியாகராசர்



அவரைப்போல் அன்புநெறி போற்றி வாழ்வோம்
அவரைப்போல் தமிழ்நூலைப் போற்றி வாழ்வோம்
அவரைப்போல் தமிழ்மொழியைக் காத்து வாழ்வோம்
அவரைப்போல் கலைநுட்பம் அறிந்து வாழ்வோம்
அவரைப்போல் நல்உழைப்பை ஏற்று வாழ்வோம்
அவரைப்போல் துணிவுடைமை கொண்டு வாழ்வோம்
அவரென்றும் ஞானநெறி காட்டி நிற்பார்
அவர்மலர்த்தாள் வணங்கியிங்கே உயர்ந்து வாழ்வோம்

— பேராசிரியர் கதி. சுந்தரம்